உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன் மலர்சிலம்படி நீழலெய்திய திருத்தொண்டர்கள் வரலாற்றை விளக்கும் இத்தெய்வத் தமிழ் நூல் நமது சமாஜத்தின் முதற்பதிப்பாக மூன்றுண்டுகட்கு முன்னர் வெளியிடப்பெற்று நாளடைவில் விற்று முதல் செய்யப்பட்டு வந்தது. சில மாதங்களாக இப்பதிப்பை விரும்பி வாங்குவோருக்கு விலைக்குத் தரப் பிரதிகளின் எண்ணிக்கை அருகிவிட்டபடியாலும், தமிழ் நாட்டுப் பேரறிஞர்களும் சைவசீலர்களும் நமது சமாஜத்தின் பதிப்புக்களாகப் பன்னிருதிருமுறைகளும் எஞ்ஞான்றும் கிடைத்தற்குரியனவாக இருத்தல் வேண்டுமென்று பொது வாகக் கட்டளை யிட்டுள்ளபடியாலும் இவ்விரண்டாம் பதிப்பு மிக விரைவாக அச்சிடப்பெற்றுச் சமாஜ முப்பத்திரண்டாம் ஆண்டு நிறைவிழாவின் தொடக்கத் திருத்தொண்டாக இராய வேலூரில் இன்று பொற்புடன் நடஞ் செய்கின்ற பூங்கழற் காணிக்கையாகச் சமர்ப்பிக்கப் பெறுகின்றது.

இப்பதிப்பு அச்சியற்றப் பெற்றபோது, அச்சுத் தாள் களைப் பல பிரதிகளோடு கூர்ந்து நோக்கி ஒப்பிட்டுப் பிழை களைத் திருத்தி யுபகரித்தவர்கள் திருவாளர்கள் திரு. வி. உலகநாத முதலியாரவர்களும் மா. துரைசாமி முதலியாரவர் களுமாவார்கள். இவர்களுட் பின்னையவர் பெரிய புராண யாப்பாராய்ச்சிக் குறிப்புகளையும் திரட்டித் தந்தனர். இவ்விரு

பெரியார்கட்கும், இப்பதிப்பை மிக விரைவில் மிகச் செம்மையாக அச்சிட்டு முடித்த சாது அச்சுக்கூடத்தினருக்கும் நமது சமாஜம் மனமார்ந்த நன்றி செலுத்துகின்றது.

இப்பதிப்பைக் கண்குளிரக் காணும் புண்ணிய சீலர்கள், சமாஜ இரண்டாம் பதிப்புக்களாக வெளிவருதற்குரிய அ, கூ, க0, கக-ம் திருமுறைகட்கு முன்பணம் உதவி அவைகளை வெளியிடத் துணைபுரிவார்களாக. இப்பதிப்பை இடையறாது பயின்றுருகித் திளைத்து என்றும் இன்பம் பெருகுக உலகெலாம்.

இராயவேலூர்
ஈசுவர ஞு மார்கழி மீ கஙு உ
29—12—1937.

இங்ஙனம்
ம. பாலசுப்பிரமணியன்
காரியதரிசி
சைவசித்தாந்த மகாசமாஜம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சேக்கிழார் சுவாமிகள் வரலாறு*

தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னாற்சொல வல்ல பிரான்எங்கள்
பாக்கி யப்பய னாப்பதி குன்றைவாழ்
சேக்கி ழானடி சென்னி இருத்துவாம்.

—சிவஞான சுவாமிகள்.

உலகினில் ஒழுக்கம் என்றும் உயர்பெருந் தொண்டை நாட்டு நலமிகு சிறப்பின் மிக்க குன்றத்தூரிலே, தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத்தூய வேளாளர் குலத்துச் சேக்கிழார் குடியிலே அருண்மொழித்தேவர் என்ற சேக்கிழார் சுவாமிகள் இற்றைக்கு ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் திருவவதாரம் செய்தார்கள். இளமையிலேயே கல்வி அறிவு ஒழுக்கங்களிற் றலைசிறந்து விளங்கிய இவரை, அந் நாளில் அரசு புரிந்த அநபாயன், அபயன், திருநீற்றுச் சோழன் முதலிய கீர்த்திப் பெயர்களையுடைய இரண்டாம் குலோத்துங்கசோழன் தனது முதல் மந்திரியாக்கி இவருக்கு உத்தமசோழப்பல்லவன் என்ற பட்டத்தையும் பெரும் பொருளையும் கொடுத்தான்.

---

*இது திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி. ஏ., பி. எல். அவர்களால் எழுதப்பெற்றது.

சேக்கிழார் தமது அமைச்சுப் பணியை மிகத் திறமை யாகவும் நிரம்பிய கருணையோடும் நடாத்தி வந்தார்; சீவக சிந்தாமணி என்ற சமண காவியத்தில் அளவு கடந்து ஈடு பட்டிருந்த அரசனுக்குச் சிவனடியார்களின் பெருமையை எடுத்துக் கூறினர். அரசன் அவ்வடியார்கள் வரலாற்றை யறிய விரும்பினன். சேக்கிழார், அவனது வேண்டுகோளுக் கிரங்கித் தில்லைமாநகரடைந்தார்; அம்பலவன் "உலகெலாம்" என்று அடி எடுத்துத் தரத் " திருத்தொண்டர் புராணத் தை"ப் பதின்மூன்று சருக்கங்களாக, ௪௨௫௩ பாடல்களிற் பாடி முடித்தனர்.

அரசன் தில்லையை யடைந்து பேரவை கூட்டி ஓராண்டு முழுமையும் . இந்நூலைச் செவியினுற் பருகி அரங்கேற்று வித்தான். இறுதியில் சேக்கிழார் சுவாமிகளையும் திருத் தொண்டர் புராணத்தையும் யானைமீதேற்றித் தானும் பின் னிருந்து கவரிவீசி ஊர்வலமாக வந்து வணங்கினன். இந் நூலைப் பன்னிரண்டாந் திருமுறையாக வகுத்துச் சேக் கிழாருக்குத் தொண்டர் சீர்பரவுவார் என்ற பட்டத்தையு மளித்தான். சேக்கிழார் தில்லையிலேயே தவம் புரிந்து இனித்தமுடைய எடுத்த பொற்பாத நீழலடைந்தார்.

அரசன், பாலறுவாயர் என்ற சேக்கிழார் தம்பி யாருக்கு அமைச்சுரிமை வழங்கித் தொண்டைமான் என்ற பட்டத்தையுந் தந்தான். சேக்கிழார் வரலாற்றை இந்நூலி னிறுதியிலுள்ள சேக்கிழார் புராணத்திற் பரக்கக் காணலாம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உள்ளுறை

# உள்ளுறை





உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அரும்பொருளகராதி

ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி. ஏ., பி. எல்.

தொகுத்தது.

இவ்வகராதியிற் பற்பல அரும்பொருள்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. சிலவற்றிற்கு எல்லாக் குறிப்புக்களும், ஏனையவற்றிற்கு எடுத்துக் காட்டுக்களாகச் சில குறிப்புக்களும் தரப்பட்டுள்ளன. இவ்வகராதியைத் தொகுத்ததின் நோக்கம், அன்பர்களைப் புராணம் முழுவதையும் பலமுறை படித்துணர ஊக்குவிப்பதற்கே யன்றிப் புராணத்தைப் பயிலாமலே அதிற் காணப்படும் செம்பொருள்களை அறிய வசதி யளிப்பதற்கன்று. இதை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொருவரும் ஆராய்ச்சி செய்து இவ்வகராதியைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். இவ்வகராதியில் ஒவ்வொரு குறிப்பிற்கும் இரண்டு எண்கள் தரப்பட்டுள்ளன. இவற்றுள் முதலாவது எண் புராண எண்; இரண்டாவதெண் பாட்டெண். உதாரணமாக "அகச்சமயம் ஆறு" என்ற தலைப்புள்ள குறிப்பின் இறுதியில் 34. 1203 என்று எண்ணிடப்பட்டுள்ளது. இதன் பொருள் 34-வது எண்ணுள்ள திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராணத்துள் 1203-வது செய்யுளில் "அறுவகை விளங்குஞ் சைவத் தளவிலா......தவத்தினுள்ளோர்" என்ற சொற்றொடர் அமைந்துள்ளது என்பதாகும். இவ்வாறே எல்லாவற்றிற்கும் கொள்க. இவ்வகராதியிலுள்ள குற்றங்குறைகளையும் இதில் இன்றியமையாது சேர்க்கப்படல் வேண்டும் என்று கருதப்படுபவைகளையும் அறிஞர்கள் தெரிவிப்பின் அடுத்த பதிப்புக்குதவியா யிருக்கும்.

### அகச்சமயம் ஆறு

*அறுவகை விளங்கும் சைவத் தளவிலா விரதஞ் சாரும் நெறி வழி நின்ற வேடம் நீடிய தவத்தினுள்ளோர்*...34. 1203.

### அசரீரி வாக்கெழுந்த சந்தர்ப்பங்கள்

*சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாற்றில்* 6. 108, 118, 127, *எறி பத்தர்* 14. 47, *திருநாவுக்கரசு சுவாமிகள்* 27. 74, *நமிநந்தியடிகள்* 33. 11, *திருநீலகண்ட யாழ்ப்பாணர்* 75. 6.

### அஞ்சிமிதிக்கப் பெறாத தலங்கள்

*திருவதிகை* 6. 83, *திருக்கழுமலம்* 6. 112, *திருஆலங்காடு* 34. 1008, 35. 282.

### அடியார் இடர்தீர்க்கும் ஆண்மைத் தொண்டு

*சைவம் ஓங்க.........அன்பர்க் கடாதன அடுத்தபோது......... முரண்கெட எறிந்து தீர்க்கும்......பாசுமுன்னெடுக்கப் பெற்றார். எறிபத்தர்*—14. 7, *ஆளுடைத் தொண்டர்செய்த ஆண்மையும். எறி பத்தர்*—14. 56, *அன்பரை இத்தலத்தில் இகழ்ந்தியம்பும் உரை வைத்த நாவை வலித்தரி சத்தியால் சத்தியார் எனும் நாமமும் தாங்கினர். சத்தி நாயனர்*—52.3, *அன்னதாகிய ஆண்மைத் திருப்பணி... பன்னெடும் பெருநாள் பரிவாற் செய்து......சத்தி நாயனர்*—52. 5.

### அடியார் வழிபாட்டிற் சிறந்தமுறை

*அன்பர் என்பதொர் தன்மையால் நேரவந்தவர் யாவராயினும் நித்தமாகிய பத்திமுன் கூரவந்தெதிர் கொண்டு கைகள் குவித்து நின்று செவிப்புலத் தீர மென்ம துரப்பதம் பரிவெய்த முன்னுரை செய்தபின்* 10. 3, *கொண்டுவந்து மனைப்புகுந்து குலாவு பாதம் விளக்கியே மண்டு காதலின் ஆசனத்திடை வைத்தருச்சனை செய்த பின் உண்டி நாலு விதத்திலாறு சுவைத்திறத்தினில் ஒப்பிலா அண்டர் நாயகர் தொண்டரிச்சையில் அமுது செய்ய அளித்துளார்* 10-4,

அடியாரை நாடோறும் முறைமையினில் திருவமுது முன்னூட்டிப் பின்னுண்ணும்.........தூய தொழில் தலைநின்றார் 42. 13, காதலுடன் அடியார்கள் அமுது செயக் கடைப்பத்தி எதமிலாவகை தாமும் அமுது செய்தற்கு......38. 10, தூயதிரு வமுது கனிகன்னல் அறுசுவைக்கறி நெய்பாய தயிர் பால் இனிய பண்ணியம் உண்ணீர் அமுதம் மேய படியால் அமுது செய்விக்க......மனமகிழ்ந்தார் 42. 14, அடியார் தம்மை நயப்பாட்டு வழிபாட்டால் மேதகை யாரவர் முன்பு மிகச்சிறியராய் அடைந்தார் ஆதலினாற் சிறந்தொண்டர் என நிகழ்ந்தார் 42. 15.

## அடியார் வாழ்க்கையிற் குற்றங் கருதேல்

சீலம் இலரே எனினும் திருநீறு சேர்ந்தாரை ஞாலம் இகழ்ந்தரு நரகம் நண்ணுமல் எண்ணுவார்.........இரட்டிப்பப் பொன் கொடுத்து மேலவரைத் தொழுது இனிய மொழி விளம்பி விடை கொடுத்தார் 48. 7, அடியார் இவர் முன்மேவு நிலை குறித்து வெள்கி நீர் வாரா தொழிந்தாளென்று.........கைதறித்து......தாமே அவர் தாள் விளக்கினார் 50. 8.

## அநபாயன் கூறப்படும் இடங்கள்

பேரம்பலம் செய்யதூய பொன்னணி சோழன் நீடூழிபார் ஆய சீர் அநபாயன் 1-8, வென்றிவெண்குடை அநபாயன் செய்யகோல் அபயன் திருமனத்தோங்கும் திருக்கயிலாய நீள் சிலம்பு 2. 12, பொதுக்கடிந்தினிதுகாக்கும் கொற்றவன் அநபாயன் 3. 35, மன்னுசீர் அநபாயன் வழிமுதல் .....மனுவேந்தனே 4. 13, சென்னி வெண்குடை நீடநபாயன் 9. 1, புதுமலையிடித்துப் போற்றும் அந்நெறிவழியேயாக அயல்வழியடைத்த சோழன் மன்னிய அநபாயன் 14. 2, சென்னி அபயன் குலோத்துங்கச் சோழன்தில்லைத் திருவெல்லை பொன்னின்மயமாக்கிய வளவர்பேரே றென்றும் புவிகாக்கும் மன்னர் பெருமான் அநபாயன் 26. 8, அம்புயமலராள்மார்பன் அநபாயன் என்னும் சீர்த்திச் செம்பியன் செங்கோலென்னத்

தென்னன்கூன் நிமிர்ந்த தன்றே 34. 847, தில்லைநகர்மணிவீதி அணிவிளக்கும் சென்னிநீ டநபாயன் 47. 8, வள்ளல்கொடை அந பாயன்முந்தைவருங்குல முதலோராயமுதற் செங்கணார் 74. 14.

## அப்பாலும் அடிச்சார்ந்தார்யாவர் ?

மூவேந்தர் தமிழ் வழங்கு நாட்டுக்கப்பால் முதல்வனார் அடிச் சார்ந்த முறைமையோரும் நாவேய்ந்த திருத்தொண்டத் தொகை யிற் கூறும் நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும் பூவேய்ந்த நெடுஞ்சடைமே லடம்பு தும்பைப் புதியமதி நதியிதழி பொருந்த வைத்த சேவேந்து வெல்கொடியான் அடிச்சார்ந்தாரும் செப்பிய அப்பாலும் அடிச்சார்ந்தார்தாமே. 70. 1.

## அரசன் கடமையும் உரிமையும்

மாநிலங்காவலனாவான் மன்னுயிர் காக்குங்காலைத் தானதனுக் கிடையூறு தன்னால் தன்பரிசனத்தால் ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர் தம்மால் ஆனபயம் ஐந்துந்தீர்த்து அறங்காப்பா னல்லனோ 4. 36, மண்ணில் வாழ்தருமன்னுயிர்கட்கெலாம் கண்ணும் ஆவியுமாம் பெருங்காவலான் 4. 14, பன்முறை உயிர்களெல்லாம் பாலித்து ஞாலங்காப்பான் தன்னெடுங் குடைக்கீழ்த்தத்தம் நெறி களிற் சரித்துவாழும் மன்னரையின்றிவைகும் மண்ணுல கெண்ணுங் காலை இன்னுயிரின்றி வாழும் யாக்கையை ஒக்கும் 21. 29, கூழும் குடியும் முதலாயின கொள்கைத்தேனும் சூழும்படைமன்னவன் தோளிணைக்காவலின்றி வாழுந் தகைத்தன்றிந்தவையகம் 21. 28, அறம்பொருளின்பமான அறநெறிவழாமல் புல்லி மறங்கடிந்தரசர் போற்றவையகம் காக்கும் நாளில் 4. 17.

## அரிய சில சொல் வழக்குகள்

அத்தனை 9. 9, அந்நின்ற 15. 40, 20. 40, 27. 71, அருளிப் பாடு 78. 33, 44, இந்நின்ற 20. 40, உப்பாலார் 27. 280, ஓகை 34. 643, 878, 986, ஓமதேனு 26. 29, கண் சாம்பி 34. 562, கில் லேன் 16. 113, குளிரி 6. 173, கைம்மை வினை 10. 22, சும்மை

3. 18, செக்கின்ற 27. 71, 34. 1052, தனிக்கடை 11. 9, 34. 647, திருவாளன் 20. 26, 26. 60, 27. 67, 78. 12, தீர்வு 4. 34, 14. 42, பகவு 34. 946, பணவன் 9. 18, பிரியாவிடை 27. 263, மச்சிறு 16. 108, முதலி 16. 117, யோகப்புரவி 6. 19, வட்டில் 34. 810, வேலையில் 6. 43, 14. 9, வைகிற்று 10. 12.

## அன்பைச் சோதித்து வெளிப்படுத்தல்

தொண்டர் அன்பெனுந்தூநெறி வெளிப்படுப்பாராய் 13. 9 தொண்டரை விளக்கங்காண நன்னெறி இதுவாமென்று ஞாலத்தார் விரும்பி உய்யும் அந்நெறி காட்டும் ஆற்றால் 8. 10, தொண்டர் மறுத வண்ணமும் காட்டுவான் வந்தார் 9. 4, தொண்டினை மண்மேல் காட்டச் செழுந்திருமலரை இன்று சினக்கரி சிந்த......அருளினால் கூடிற்று 14. 48, உனக்கவன் தன் செயல்காட்ட நாளை நீ......காண்கின்றாய் 16. 163, மேன்மேலெழும் பரிவும் பழைய பான்மை மிகும் பண்பும்......வெளிப்படுப்பான்......மறையோன் கோபமேவும்படி கண்டான் 26. 48, ஆண்ட அரசுபணிசெய்ய அவர் நன்னிலைமை காட்டுவார்......பொன்னினொடு நவமணிகள் பொலிந்திலங்க அருள் செய்தார் 27. 416, தொண்டரை விளக்கத்தூயோன் அருள் செய 71. 11.

## அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்காரம்

அட்டாங்க பஞ்சாங்கமாக முன்பு முறைமையினால் வணங்கி 6. 126, மண்ணுற ஐந்துறுப்பால் வணங்கி 6. 124, அங்கம் எட்டினும் ஐந்தினும் அளவின்றி வணங்கி 34. 666, அங்கம் மாநிலத்தெட்டுற வணங்கி 34. 953, எட்டினொடைந்து மாகு முறுப்பினாற் பீடு நீடு நிலத்தின்மேற் பெருகப்பணிந்து 35. 98, விரவுமெய் அங்கம் ஐந்தும் எட்டினும் வணங்கி 35. 114.

## ஆகமம் கூறப்படும் இடங்கள் சில

பூசனைக்கங்கண் வேண்டும்நிபந்தம் ஆராய்ந்துளானங்க ஆகமம் சொன்ன முறைமையால் 4. 16, உங்கள் நாயகனார் முன்னமுரைத்த

*ஆகமநூல் மண்மேலெங்கு மில்லாததொன்று கொடுவந்தேன்* 11. 12, *எய்தியசீர் ஆகமத்திலியம்பிய பூசனைக்கேற்ப* 16. 135, *செப்பிய ஆகம விதியால்...அர்ச்சனை* 16. 152, *அறிந்த நெறிபூசிப்ப மன்னிய ஆகமப்படியால்* 16. 155, *எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும் உண்மையாவது பூசனை* 25. 51, *மெய்த்த ஆகமவிதி வழி வேத காரணரை நித்தன் பூசனை புரிந்தெழு நியமமும்* 32. 6, *புற்றிடங்கொள் புனிதர்க்கமுதுபடி முதலாம்...நிபந்தம்பலவும்...அமைத்தான் வேதாகம நூல் விதி விளங்க* 33. 19, *ஆகமப் பொருளை மண்ணின் மிசைத் திருமூலர் வாக்கினால் தமிழ் வகுப்ப* 36. 23, *சாதனத்தோடு தச்சர் தம்மையும் மனத்தால் தேடி...ஆகமத்தால் அடிநிலை பாரித்தன்பால்...எடுக்கலுற்றார்* 71. 6.

## ஆண்டானடிமை சைவ அடிப்படை

*எல்லாம் உடைய ஈசனே இறைவன் என்ன அறியாதார் பொல்லா வேடச்சாக்கியரேயாகிப் புல்லராகுவார் அல்லார் கண்டர் தமக்கிந்த அகிலமெல்லாம் ஆள் என்ன வல்லார் இவர்* 40. 7.

## ஆதிரை நாள்தோறும் வழிபாடு

*ஆறணிந்த சடைமுடியார்க் காதிரை நாள்தொறுமென்றும் வேறு நிறைவழிபாடு விளங்கிய பூசனைமேவி* 48. 4.

## இசையின் வசீகர சக்தி

*அரவம் மயில்மீது மருண்டு விழும் சலியாத நிலை அரியும் தடங் கரியும் உடன்சாரும் புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும்* 20. 34, *மருவிய கால்விசைத்தசையா...அருவிகளும் கான்யாறும் கலித்தோடா...எழுகடலும் இடைதுளும்பா* 20. 35.

## இருவினையொப்பு

*தென்னவன்...திருநீறு பூசப்பெற்று முன்னைவல்வினையும் நீங்கி முதல்வனை யறியுந் தன்மை துன்னினான் வினைகள் ஒத்துத் துலையென நிற்றலாலே* 34. 819.

## இலிங்கம் எதைக் குறிக்கிறது ?

*காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய் நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம் 40. 8.*

## இல்லறம் நடத்தும் முறை

*அரசுகொள் கடன்களாற்றி மிகுதி கொண்டறங்கள் பேணிப் பரவருங் கடவுட் போற்றிக் குரவரும் விருந்தும் பண்பின் விரவிய கிளையுந் தாங்கி விளங்கிய குடிகள் 3. 26, பொய்கடிந் தறத்தின் வாழ்வார்...மெய்யடியார்கட்கான பணிசெயும் விருப்பில் நின்றார் வையகம் போற்றும் செய்கை மனையறம் புரிந்து வாழ்வார் 8. 2, விருந்தெதிர் கொள்ளும் பீடு தங்கிய பெருங்குடி மனையறம் 25. 28, தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத் தூய மாந்தர் வாழ் தொண்டை நாட்டியல்பு 25. 47, மண்ணின் துகளன்றித் துகளில்லா நன்மை நிலை ஒழுக்கத்து நலஞ்சிறந்தகுடி 27. 2.*

## இன்னுரையும் கூறும் முறையும்

*கைகள் குவித்து நின்று செவிப்புலத்து ஈரமென் மதுரப்பதம் பரிவெய்த முன்உரை செய்தபின் 10. 3, கண்ணுதற்கன்பர் என்னவே வாரமாகி மகிழ்ந்தவர் தாள்மிசை ஆருமன் பொடுவீழ்ந்தஞ்சலி முகிழ்த்தீர நன்மொழி எய்த இசைத்துளார் 28. 3, ஈசனுக்கே அன்பானார் யாவரையுந் தாங்கண்டால்...பணிந்த மொழி இனியனவே பேசுவார் 64. 1.*

## உண்ணா விரதம்

*வண்ணங்கண்டு நான் உம்மை வணங்கியன்றிப் போகேன் என்றெண்ண முடிக்கும் வாகீசர் இருந்தார் அமுது செய்யாதே 27. 296.*

## உருத்திர ஜபம்

*அருமறைப் பயனாகிய உருத்திரம் அதனை வருமுறைப் பெரும் பகலும் எல்லியும் வழுவாமே...உவந்தார் 23.7.*

உருத்திராக்கம்

*ஆரங்கண்டிகை ஆடையுங் கந்தையே பாரம் ஈசன் பணியல தொன்றிலார் 5. 9, தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும் ...உடையார் 27. 140, திரு அடையாளமாலை எவ்வுல கோரும் ஏத்தத் தொழுதுதாம் எடுத்துப் பூண்டார் 34. 1216, மிக் கெழும் அன்பர்கள் அன்பு திருமேனி விளைந்ததென அக்கு மணி யாற்சன்ன வீரமும் ஆரமும் வடமும் கைக்கணி கொள்வளைச் சரியும் ...சாத்திய ஒண்சுடர் தயங்க 42. 32.*

உருவ வழிபாட்டில் ஞானிகள் கலக்கும்முறை

*உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை ஒழிவின்றி உரு வின்கண் அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர அருளினை 34, 161.*

உலகேலாம் என்ற சொல்வரும் இடங்கள்

1. 1, 7. 7, 10. 15, 18. 36, 25. 48, 30. 51, 34. 216, 34. 643. 34. 859, 35. 88, 49. 16, 75. 7, 78. 40, 78. 53, (ஆக 14 இடங்கள்)

உவமை யழகுட் சில

*முகில்நுழை மதியம்போல...துகில்கொடு குஞ்சி ஈரம் புலர்த்தி 6. 16, தண்மதி முதிர்ந்து கதிர்சாய்வதென மீதே வெண்ணரை முடித்தது 6. 29, மறையோன் றன்பின் திரிமுகக் காந்தஞ் சேர்ந்த வல்லிரும் பணையுமாபோல் வள்ளலுங் கடிது சென்றார் 6. 50, மை பொதி விளக்கே யென்ன மனத்தினுட் கறுப்பு வைத்து 11. 7, கதி ரோன் எழ மழுங்கிக் கால்சாயுங் காலை மதிபோல் அழிந்து பொருமற் றவன் 15. 8, வெங்கண் புலிகிடந்த வெம்முழையில் சென்றழைக்கும் பைங்கள் குறுநரியே போல்வான் 15. 10, பான்மதி உவரி ஈன்ற தென மகப் பயந்தபோது 16. 13, அருமைமணியு மளித்ததுவே நஞ்சுமளிக்கு மரவுபோல் இருமைவினைக்கு மொருவடிவாம் எச்ச தத்தன் 26. 10, கருவரை காளமேக மேந்திய தென்னத்தாதை*

பொருவரைத் தோள்க ளாரப் புதல்வனை எடுத்துக் கொண்டான் 16. 15, மலையில் தேவர் தம்மைக் கண்டணைத்துக் கொண்டு வங்கி யினைப் பற்றிப் போதா வல்லுடும் பென்ன நீங்கான் 16. 116, மேவு செல்வம் களிறுண் விளங்கனி யாவதாகி அழியவும் 19. 8, பொங் கிய ஒளியின் நீழல் பொருவில் அன்புருவமானார் 16. 104, வாயின் மஞ்சன நீர்தன்னை விளைத்த அன்புமிழ்வார் போல விமலனார் முடி மேல் விட்டார் 16. 123, முதல்வனார் அருள் நோக்கால் இன்புறு வேதகத் திரும்பு பொன்னானாற்போல் யாக்கைத் தன் பரிசும் வினை யிரண்டும் மல மூன்று மறஅன்பு பிழம்பாய்த் திரிவார் 16. 154, பொடி மூடுதழ லென்னத் திருமேனிதனில்...திருநீற்றின்...18. 25, செந்தீ மேலெழும் பொழுது செம்மலர்மேல் வந்தெழுந்த அந்தணன் போல் தோன்றினார் 24. 33, பிள்ளை தைவரப் பெருகுபால் சொரி முலைத் தாய்போல் மள்ளர்...கை வருட வெள்ளநீர்...மடை யுடைப் பது பாலி 25. 22, ஒழியாத தனம் பெரிதும் பெற்று வந்த வறியோன் போல் மனந்தழைத்தார் 27. 196, பளிக்குமணி மாகத வல்லியிற் கோத்த பான்மை எனத் துளித்தலைமேல் அறுகு பனி தொடுத் தசைய 34. 329 (காவியச் சுவை, சமயப் பொருள் நினைவூட்டு முவமைகள், திருநீற்றை நினைவிக்கு முவமைகள், சொல்லழகு என்ற தலைப்புக்களையும் பார்க்கவும்.)

ஐந்தெழுத்தோதிச் செய்யப்பெற்றவை

அமர்நீதியார் தராசில் ஏறுதல் 13. 43. ஆனாயர் குழலிசைத்தல் 20. 22, திலகவதியார் மருணீக்கியாருக்குத் திருநீறு தருதல் 27. 66, திருநாவுக்கரசர் கல்மேல் மிதத்தல் 27. 125, திருஞானசம்பந்தர் முத் துச்சிவிகையிலேறுதல் 34. 216, திருஞானசம்பந்தர் பாண்டிநாட்டுக் குப் புறப்படுதல் 34. 619, தண்டியடிகள் சபதஞ் கூறிக் குளத்தில் முழுகுதல் 37. 19, புகழ்ச்சோழர் தீக்குளித்தல் 47. 39, கழறிற்றறி வார் குதிரையை ஆகாய வீதியிற் செலுத்துதல் 78. 36.

ஐயர் என்று கடவுளைக் குறிப்பன சில

2. 12, 6. 47, 6. 105, 8. 4, 9. 3, 10. 3, 13. 20, 13. 47, 16. 127, 16. 184, 18. 33, 19. 17, 20. 40, 27. 98, 34. 43.

ஐயர் என்று தொண்டர்கள் குறிக்கப்படுதல்

*கண்ணப்பர்* 16. 70, 103, *திருநாளைப்போவார்* 24. 30, *திருநீலகண்டயாழ்ப்பாணர்* 34. 133, 179, 450, 451.

கடவுள் இடப வாகனராய்க் காட்சி தருதல்

*அதிபத்தர்* 49. 18, *அரிவாட்டாயர்* 19. 21, *ஆனாயர்* 20. 38, *இயற்பகையார்* 9. 31, *இளையான்குடிமாறர்* 10. 25, *கலியர்* 51. 16, *சண்டேசர்* 26. 52, *சாக்கியர்* 40. 17, *சிறுத்தொண்டர்* 42. 85, *சுந்தரமூர்த்தி சுவாமிகள்* 6. 66, *திருக்குறிப்புத்தொண்டர்* 25. 126, *திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்* 34. 64, *திருநீலகண்ட நாயனார்* 8. 40, *மனுச்சோழன்* 4. 45, *மானக்கஞ்சாறர்* 18. 31.

கடவுள் கூறப்படும் வகை

*உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன்* 1. 1, *தன்னையார்க்கும் அறிவரியான்* 2. 1, *இன்னதன்மையன் என்றறியாச்சிவன்* 2. 13, *அருமறை முறையிட்டின்னும் அறிவதற்கரியான்* 6. 46, *யாவர்களும் அறிவரிய இறைவன்* 34. 1025, *அரியயனுக்கரியானை அடியவருக் கெளியானை* 27. 144, *அருட்கருணைத் திருவாளன்* 34 1012, *கருணை திருவடிவான சீரிணங்கு சிவபெருமான்* 34. 67, *எதிரிலின்பம் இம்மையே தருவார்* 35. 52, *அடியார் இடுக்கண்தரியாதார்* 35. 324, *கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி* 7. 2, *வலிய ஆட்கொள்ளும் வள்ளல்* 6. 61, *கொடுமை இல்லான்* 8. 27, *எளியார் வலியாம் இறைவாசிவதா அளியார் அடியார் அறிவே சிவதா* 14. 16, *மெய்ம் மறந்து நினைந்துற்ற விடத்துதவும் விடையவர்* 30. 25, *எப்பொருளும் தரும் ஈசர்* 34. 290, *எவ்வுயிர்க்குந் தாயானான்* 34. 482, *தாயினும் இனிய தங்கள் தம்பிரானார்* 34.584, *அடியவர்பால் மெய்த்தாயினுமினியான்* 6. 74, *யாவர்க்கும் தந்தை தாயெனுமிவர்* 34. 69, *அத்தனாய் அன்னையாய் ஆருயிராய் அமிர்தாகி முத்தனும் முதல்வன்* 63.12, *ஆவியினினிய எங்களத்தனார்* 16. 174, *மேவினார் பிரியமாட்டா விமலனார்* 16. 174, *கருநாமம் தவிர்ப்பார்* 27. 334, *கருச்சுற்றில்*

அடையாமற் கைதருவார் 34. 391, கருச்சுழியில் வீழாமற்காப்பார் 43. 111, எப்பொருளும் நீங்காத நிலைமையினர் 35. 180, அன்பின் மிக்க தொண்டர்தம் சிந்தை நீங்காத அந்நிலை அரனார் 14. 5, உள்ள நிலைப்பொருளாய உம்பர்பிரான் 18. 21, எவ்வுயிர்க்கும் சான்றாம் ஒருவன் 27. 134, வானாகிநிலனாகி அனலுமாகி மாருதமாய் இருசுடராய் நீருமாகி ஊனாகி உயிராகி உணர்வுமாகி உலகங்கள் அனைத்துமாய் உலகுக்கப்பால் ஆனதவடிவாகி நின்றார். 34. 563, நாதங்கொள்வடிவாய் நின்ற நதிபொதி சடையார் 34. 591, எப்பொருளுமாய் நின்றார் 34. 399, முழுதும் ஆனவர் 34. 375, நிகரிலா மேருவரை அணுவாக நீண்டானை நுகர்கின்ற தொண்டர் தமக்கமுதாகி நொய்யானை 34. 402, அருவாகி உருவாகி அனைத்துமாய் நின்ற பிரான் 67. 1, ஆதாரமா யனைத்துமாகி நின்ற அங்கணன் 69. 1, குணங்கடந்த தனிக்கூத்தர் 34. 1139, தொல்லுலகம் முழுதும் அளித்தழித்தாக்கும் முதல்வர் 35. 285, அகிலலோகங்கள் முழுதும் அளித்தமுதல்வனார் 37. 12, முழுதுலகுந் தரும் இறைவர் 34. 1119, வினையெலாம் விளைக்கவல்லார் 35. 356, மாயைவல்லான் 6. 56, எல்லாம் தான்வைத்துவாங்கவல்லான் 8. 20. எவ்வுயிர்க்கும் காவலனார் 34. 1118, ஏழுலகும் உடையான் 34. 1025, தேவரையும் மாலயன் முதல் திருவின்மிக்கோர்யாவரையும் வேறடிமையாவுடைய எம்மான் 6. 37, உடையவர் 34. 307, எல்லாம் உடைய ஈசனே இறைவன் 40. 7, ஆதியும் முடிவுமில்லா அற்புதத்தனிக் கூத்தாடும் நாதனார் 8. 1, முன்னாகி எப்பொருட்கும் முடிவாகி நின்றான் 27. 151, எல்லை முடிவில்லான் 6. 36, முடிவிலாதான் 6. 45, என்றுங்கேடிலாதான் 6. 128, நித்தனார் 8. 18, ஊழி முதல்வர் 34. 162, முடிவில் பரம்பொருளானார் 34. 414, அகிலகாரணமும் ஆனார் 34 520, ஆதிமுதல்வர் 34. 985, புலன்கள் ஐந்தும் செற்றவர் 34, 343, பவபாசம் அறுத்தவர் 34. 879, நின்மலன் 35. 21, விமலர் 34. 521, தவஅரசாள உய்க்கும் தனிக்குடை நிழற்றச்சாரும் பவமறுத்தாளவல்லார் 34. 1206, பாசவினைத்தொடக்கறுப்பார் 43. 122, முந்தை மறையாயிரம் மொழிந்த திருவாயான் 6. 33, நான்மறைபாடும் வாயார்

6. 70, ஐந்தெழுத்தும் பாடிய பொருளாய் உள்ளான் 6. 71, அரு மறைகள் துணிந்த வான் பொருள் 34. 428, ஆரணத்தின் உட்பொரு ளாய் நின்றார் 34. 976, மெய்த்தநெறி வைதிகம் விளைந்த முதலே 6. 32, புண்ணியப்பொருளாய் நின்றான் 8. 26, ஆதியாய் நடுவுமாகி... ஏகமாகிப்பெண்ணுமாயாணுமாகி...நிற்கும் 7. 1, அறுசமயத்தலைவர் 40. 1, அன்பூட்டி ஆட்கொண்டார் 35. 122.

கண்ணப்ப நாயனார்

கருங்கதிர் விரிக்கும் மேனிகாமரு குழவி 16. 16, திண்ணனார்... மணி நீல மலையொன்று வந்ததென்ன......வணங்கும் போதில் 16. 52, வேடர் தம் கரிய செங்கண் வில்லியார் 16. 92, மைவ்வரை என்ன ஐயர் மருங்கு நின்றகலா நின்றார் 16. 127, கருங்கடல் என்ன நின்று கண் துயிலாத வீரர் 16. 132, கையில் ஏந்தற் கருமையால் உரி மைப் பேரும் திண்ணன் என்றியம்பும் 16. 17, புண்ணியக் கங்கை நீரிற் புனிதமாம் திருவாய் நீரில் உள்நனைந்தமுத மூறி ஒழுகிய மழலைத் தீஞ்சொல் 16. 22, இரு சுடர்க் குறுகண் தீர்க்கும் எழில் வளர் கண்ணீர் 16. 23, என்மேற் பாரம் போவதொன்றுளது போலும் ஆசையும் பொங்கி மேன்மேல் மேவிய நெஞ்சம் வேறோர் விருப்புற விரையா நிற்கும் 16. 97, முன்பு செய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக் காட்ட 16. 102, நாண னும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத்தாமும் பேணுதத்துவங்களென் னும் பெருகு சோபானமேறி ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல 16. 103, மயிர்க்கால் தோறும் வடிவெலாம் புள கம் பொங்க மலர்கண்ணீர் அருவி பாய 16. 106, கன்றகல் புனிற்றாப் போல்வர் 16. 112, வாயில் மஞ்சன நீர் தன்னை விளைத்த அன்புமிழ் வார்போல விமலனார் முடிமேல் விட்டார் 16. 123, பல்லிறால் அதுக்கி நாவிற் பழகிய இனிமை பார்த்துப் படைத்த இவ்விறைச்சி சால அழகிது நாயனீரே அமுது செய்தருளுமென்றார் 16. 125, அவ னுடைய வடிவெல்லாம் நம்பக்க லன்பென்றும் அவனுடைய அறி வெல்லாம் நமையறியும் அறிவென்றும் அவனுடைய செயலெல்லாம் நமக்கினியவா மென்றும்.........அருள்செய்தார் 16. 157, உற்ற

நோய் தீர்ப்பது ஊனுக்கூன் எனும் உரை முன்கண்டார் 16. 177, கும்பிட்ட பயன் காண்பார்போல் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார் 34. 1022.

## கல்வியின் தொழில்

பொருள் நீத்தங் கொளவீசிப் புலன் கொளுவ மனமுகிழ்த்த சுருள் நீக்கி மலர்விக்குங் கலைபயிலத் தொடங்குவித்தார் 27 20, ஐந்து வருடம் அவர்க்கணைய.........முந்தை அறிவின் தொடர்ச்சியினால் முகைக்கு மலரின் வாசம்போல் சிந்தைமலர உடன் மலரும் செவ்வி உணர்வு சிறந்ததால் 26. 13, மூவாண்டில்.........சிந்தைமலர் சொற்றெளிவிற் செழுங்கலைகள் பயிலத்தம் பந்தமற வந்தவரைப் பள்ளியினிலிருத்தினார் 42. 22.

## கல்வியின் பயன்

உள்ள நிறை கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்றவற்றால் தெள்ளி வடித்தறிந்த பொருள் சிவன் கழலிற் செறிவென்றே கொள்ளு முணர்வினில்.........42. 4, அலகில் கலையின் பொருட்கெல்லை ஆடுங் கழலே எனக் கொண்ட செலவு மிகுந்த சிந்தையினில் தெளிந்தார் 26. 15, செய்யுள் நிகழ் சொற்றெளிவும் செவ்விய நூல் பல நோக்கும் மெய்யுணர்வின் பயனிதுவே எனத்துணிந்து விளங்கி யொளிர்மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார் 46. 1, தென்தமிழும் வடகலையும் தேசிகமும் பேசுவன மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக ஒன்றிய மெய்யுணர்வோடும் உள்ளுருகிப் பாடுவார் 65. 2.

## கற்புடைமை

மேம்படு சடையனார்க்கு ஏதமில் கற்பின் வாழ்க்கை மனை இசை ஞானியார் 6. 3, மனைவியாரும் அருந்ததி கற்பின் மிக்கார் 8. 4, கற்புறு மனைவியாரும் கணவனார்க்கான எல்லாம் பொற்புறு மெய்யுறாமல் பொருந்துவ போற்றிச்செய்தே......அற்புறு புணர்ச்சியின்மை அயலறியாமை வாழ்ந்தார் 8. 8, தம்மனை வாழ்க்கைக் கற்பு மேம்படு

காதலியாரை விதிமணக்குல மடந்தை இன்றுனை இம்மெய்த்தவர்க்கு நான் கொடுத்தனன் என்ன...மொழிவார் 9. 8, நீர் உரைத்த தொன்றை நான் செயும் அத்தனையல்லால் உரிமை வேறுளதோ 9. 9, தேற்றம் மருவிய தெய்வக் கற்பின் மனைவியார் 9. 34, மழைக் குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தியார் 18. 11, வட நெடுவான மீனையனையவர் 19. 13, மாதினியார் சுற்றமுடன் மக்களையும் துக ளாகவே நீத்துப் பெற்றிமையால் உடனென்றும் பிரியாத உலகெய் தும் கற்புநெறி வழுவாமல் கணவனுருடன் சென்றார் 27. 28, மனைப் பதியாகிய வணிகன்......நீராடிப் புகுந்தடிசில் புரிந்தயிலக் கற்பு டைய மடவாரும் கடப்பாட்டில் ஊட்டுவார் 30. 22, சற்புடை நெறி யால் கணவனுரை காவாமை மெய்வழி யன்றென விளம்பல் விட மாட்டார் 30. 27, இவனுக்காகத் தாங்கிய வனப்புநின்ற தசைப் பொதி கழித்து...பேய் வடிவு...வேண்டும் 30. 49, மூன்று தீ வளர்த் துளார் இரு பிறப்பாளர்...அத்தீயை வாய்ந்தகற்புடன் நான்கெனு வளர்ப்பர்கள் மடவார் 32. 3, வடமீன் கற்பின் மனைவாழ்க்கைக் குல மகளிர் வளம்பொலிவ மாடங்கள் 34. 10, பகவதியார்...கற்பு மேம்படு சிறப்பால் கணவனுர் கருத்தமைந்தார் 34. 16, வாளரவு தீண்டவுந் தான் தீண்டகில்லாள் 34. 474, கற்புவளர் கொடியேயனைய மனைவி யார் 35. 210, கலிக்காமர் தேவியாரும் பொருவருங் கணவரோடு போவது புரியுங்காலை 35. 398, எந்தையும் எம் அனையும் அவர்க் கெனைக் கொடுக்க இசைந்தார்கள் அந்த முறையால் அவர்க்கே உரி யது நான் ஆதலினுல் இந்தவுயி ரவருயிரோ டிசைவிப்பன் எனத் துணிய 27. 32, திருவெண்காட்டு நங்கையெனும் காதல் மனைக்கிழத் தியார் கருத்தொன்றவரும் பெருமை நீதிமனையறம் புரியும் நீர்மை யினைநிலை நிற்பார் 42.12,பெருகுதிரு மனையறத்தின் வேராகி விளங்கு திருவெண்காட்டு நங்கை 42.17, அன்புமிக்க பெருங்கற்பின் அணங்கு திருவெண்காட்டம்மை 42. 53, அரிய கற்பின் மனைவியார் 42. 55.

கனவிற் கடவுள் பேசியது

27. 48, 16. 156, 27. 276, 32. 18, 33. 26, 34. 554, 563, 35 71, 237, 37. 12, 13, 43. 112, 62. 4, 75. 3.

கன்றும் ஆவும் கதறும் அன்புக்குவமை

ஈன்ற ஆன்கனைப்புக் கேட்ட கன்றுபோல் கதறி நம்பி...புராக மாக 6. 68, போனவர் மீண்டு செல்வர் புல்லுவர் மீளப் போவர் காத லின் நோக்கி நிற்பர் கன்றகல் புனிற்றாப் போல்வர் 16. 112, கன்று தடையுண் டெதிரழைக்கக் கதறிக் கனைக்கும் புனிற்றாப் போல் ஒன் றும் உணர்வால்...43. 135, சேணிடை விட்டகன்று கோவினைக் கண்டணைந்த தெனக் காதலின் விரைந்தெய்தி...78. 42, ஆவின் பின் கன்றணைந்தாற்போலணைந்து...பேசுவார் 64. 1.

காஞ்சிபுரத்திலிருந்த அதிசயங்கள்

தம்முருமாய மற்றுளாரைத் தாம் காண்பிடம்...யோகபீடம்... போக பீடம்...25. 83, உருத்திரசோலை...தீண்டில் யாவையும் செம் பொனுக்குவதோர் சிலை...25. 84.

காரைக்காலம்மையார்

மயிலைப் புறங்கொள் மென்சாயல் மகளிர் கிளவி யாழினொடும் குயிலைப் பொருவும் காரைக்காலம்மை 29. 11, திருமடந்தை அவ தரித்தாளென வந்து பொங்கிய பேரழகு மிகப் புனிதவதியார் பிறந் தார் 30. 2, பொருவிடையார் திருவடிக்கீழ் ஓங்கிய அன்புறு காதல் ஒழிவின்றி மிகப் பெருகப் பாங்கில் வரும் மனையறத்தின் பண்பு வழாமையிற் பயில்வார் 30. 14, இம்மையிலே புவியுள்ளோர் யாருங் காண ஏழுலகும் போற்றிசைப்ப எம்மையாளும் அம்மை 34. 1008.

காவியச் சுவை

மொய்யளி சூழ்கிரை நீல முழுவலயங்களின் அலையச் செய்ய தளிர் நறுவிரலின் செழுமுகையின் நகஞ் சிறப்ப மெய்யொளியின் நிழற் காணும் ஆடியென வெண்மதியை வையமகள் கையணைத்தாற் போலுயர்வ மலர்ச்சோலை 27. 9, பரந்த விளைவயற் செய்ய பங்கய மாம் பொங்கெரியில் வரம்பில் வளர்தேமாவின் கனிகிழிந்த மதுநறு நெய் நிரந்தரம் நீள் இலைக்கடையால் ஒழுகுதலால் நெடிதவ் வூர் மரங்களும் ஆகுதி வேட்கும் தகையவென மணந்துளதால் 34.7,

*வென்றி மங்கை வேடர் வில்லின் மீதுமேவு பாதம் முன்சென்று மீளுமாறு போல்வசெய்ய நாவின் வாயவாய் ஒன்றொடொன்று நேர் படாமல் ஓடு நாய்கள் மாடெலாம்* 16. 69, *வண்டு பாடப்புனல்தடத்து மலர்ந்து கண்ணீர் (=கள்நீர்) அரும்புவன கொண்ட வாசமுகை யவிழ்ந்தகுளிர்பங்கயங்களேயல்ல அண்டர் பெருமான் திருப்பாட்டின் அமுதம் பெருகச்செவிமடுக்கும் தொண்டர் வதனபங்கயமும் துளித்த கண்ணீர் அரும்புமால்* 22. 4, *அன்னமாடு மகன்றுறைப் பொய்கை யிற் றுன்னு மேதிபடியத்துதைந் தெழுங்கன்னிவாளை கமுகின் மேற் பாய்வன மன்னுவான் மிசைவானவில் போலுமால்* 3. 19, (இன்னம் நூற்றுக்கணக்கான பாடல்களுள்ளன ; சொல்லழகு, சொல்லடுக்கு, உவமையழகு முதலிய தலைப்புக்களையுங் காண்க.)

## கொடையிற் சிறந்த முறைகள்

*யாவையும் நேர் கூறுவதன்முன் அவர்தம் குறிப்பறிந்து கொடுத்துள்ளார்* 18. 9, *அடியார்கள் யாரேனும் வேண்டும் யாவையும் இல்லையென்னாதே......கொடுக்கும் இயல்பின் நின்றவர் உலகியற் பகையார்* 9. 2, *நீறு சேர்திருமேனியர் மனத்து நினைத்தயாவையும் வினைப்பட முடித்து......பேறெலாம் அவர் ஏவின செய்யும் பெரு மையே யெனப்பேணி* 9. 3, *நெற்பண்டாரமுமன்றிக் குறைவில் நிதிப்பண்டாரமென எல்லாங்கொள்ளை முகந்திறைவனடியார் கவர்ந்து கொள்கவென எம்மருங்கும் பறையறையப்பண்ணுவித்தார்* 60.9.

## சங்கிலியார்

*மலையான் மடந்தை மலர்ப்பாதம் மறவா அன்பால் வந்தநெறி தலையாம் உணர்வு வந்தணையத்தாமே யறிந்த சங்கிலியார்* 35. 208, *காதல் புரிந்து தவம்புரியுங் கன்னியார்* 35. 222, *பண்டுகயிலைத்திரு மலையிற் செய்யும் பணியின் பான்மை மனங்கொண்ட உணர்வுதலை நிற்பக் குலவு மலர்மென் கொடியனையார்* 35. 223, *அன்புநாரா அஞ் செழுத்து நெஞ்சுதொடுக்க அலர்தொடுத்தே......மின்போல் மறை யுஞ் சங்கிலியார்* 35. 226, *பெருகுந்தவத்தால் ஈசர்பணி பேணுங் கன்னியார்* 35. 229, *உலகில் யாவருக்கும் எய்தவொண்ணு இருக்*

தவத்துக் கொம்பை 35. 235, தாவாத பெருந்தவத்துச் சங்கிலியார் 35. 260.

சந்தனக் காப்பு

ஆலவாயில் எந்தைக்கணி சந்தனக்காப்பிடை என்றும் முட்டா அந்தச்செயலின்.........21. 10.

சமணசமயமும் சமணரும்

கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயம் 27. 37, தவ மென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும் அவமொன்று நெறி 27. 47, தவமென்று வினை பெருக்கிச் சார்பல்லா நெறி 27. 52, பொய்வாய்மை பெருக்கிய புன்சமயப் பொறியில் சமண் நீசர் புறத்துறையாம் அவ்வாழ்குழி 27. 73, தெளியாதொரு பொருளே பொய்யும் மெய்யும் ஆமென்னும் பொருள் மேற்கொள் ளும் புரைநெறி 33.10, படுபொருளின்றி நெல்லிற்பதடிபோல் உள்ளி லார் மெய் அடுபவர் பொருளை அத்திநாத்தி யென்றெழுதி 34. 814, தடுமாறும் நெறியதனைத் தவமென்று தம்முடலை அடுமாறு செய் தொழுகும் அமண்வலை 56. 1, புண்தலைவன் முருட்டமணர் 27. 53, பொய்தருமால் உள்ளத்துப் புன்சமணர் 27. 61, கொலையும் பொய்ம் மையு மிலவென்று கொடுமையே புரிவோர் 27. 81, அறந்துறந்து தமக்குறுதியறியாத புல்லறிவோர் 27. 95, உள்ள வாறறிகிலாதார் 34. 800, பருப்பொருளுணர்ந்தார் 34. 806.

சமயகுரவர் கோயிலை வழிபட்டமுறை

உருகிய அன்புறுகாதல் உள்ளுருகி நனைசரம் பெற்றாற்போல மருவு திருமேனியெலாம் முகிழ்த்தெழுந்த மயிர்ப் புளகம் வளர்க்கு நீராய் அருவிசொரி திருநயனத் தாரைந்த வெள்ளமிழிந்தலையநின்று பொருவில் பதிகம் போக மார்த்த பூண்முலையாள் என்றெடுத்துப் போற்றி 34. 456, அன்பினுக்களவு காணார் ஆனந்த வெள்ளமூழ்கி என்பு நெக்குருக நோக்கி இறைஞ்சி நேர்விழுந்து நம்பர்முன்பு நிற் பதுவுமாற்றார் மொழிதடுமாற எத்தி மின்புரைசடையார் தம்மைப்பதி

கங்கள் விளம்பிப்போந்தார் 34. 585, மருவிய ஏழிசைபொழிய மனம் பொழியும் பேரன்பால் பெருகியகண் மழைபொழியப் பெரும்புகலிப் பெருந்தகையார் உருகிய அன்புள்ளலைப்ப உமைதழுவக் குழைந்த வரைப்பருகிய மெய்யுணர்வினொடும் பரவியே புறத்தணைந்தார் 34. 997, கையுந்தலைமிசை புனையஞ்சலியன கண்ணும் பொழிமழை ஒழியாதே பெய்யுந்தகையன கரணங்களும் உடனுருகும் பரிவின பேறெய்தும் மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரு மின் தாழ் சடையொடு நின்றாடும் ஐயன் திருநடம் எதிர்கும்பிடுமவர் ஆர்வம் பெருகுத லளவின்றால் 27. 167, கண்டுதொழுது காசறுநி அங்கமெலாம்கொண்ட புளகங்களாக எழுந்தன்பு கூரக்கண்கள் தண்துளி மாரி பொழியத் திரு மூலட்டானர் தம்மைப்புண்டரிகக்கழல் போற்றித்திருத்தாண்டகம் புனைந்து 27. 222, காண்டலுந்தொழுது வீழ்ந்துடனெழுந்து கரையிலன்பென்பினை உருக்கப்பூண்ட ஐம்புலனில் புலப்படா இன்பம் புணர்ந்து மெய்யுணர்வினிற் பொங்க......அந்நிலைமை விளைவையார் அளவறிந்துரைப்பார் 35. 90.

## சமயத் தோண்டரைப் பயிற்றும் தோண்டு

திருத்தோணி நாயனார்க்கு நற்றிருப்பணியாயின நாளும் அன்பொடு செய்து மேய அத்திருத்தொண்டினில் விளங்குவார் விரும்பி வந்தணைவார்க்குத் தூய கைத்திருத்தொண்டினில் அவர்தமைத்துறை தொறும் பயில்விப்பார்44.2, நல்ல நந்தனவனப்பணி செய்பவர் நறுந்துணர்மலர் கொய்வோர்...திருமெழுக்கமைப்போர்கள்...திருமுறை எழுதுவோர் வாசிப்போர் 44. 3, இனைய பல்திருப்பணிகளில் அணைந்தவர்க்கேற்ற........குறையெலாம் முடித்து மேவிடச்செய்தே...... தொண்டரை ஆக்கி......வழிபடுக்தொழில் மிக்கார் 44. 4.

## சமயப் போருள்களை நினைவூட்டும் உவமைகள்

புண்ணியம் திரண்டுள்ளது போல்வது கயிலைமலை 2. 2, பூதம் யாவையின் உள்ளலர்போதென......ஆரூர் மலர்ந்ததால் 2· 33, ஆளுடைய நாயகி உள் நெகிழ்கருணையின் ஒழுக்கம் போன்றது காவிரி 3. 6, அரனுக்கன்பர் ஆலினசிந்தைபோல அலர்ந்தன கதிர்களெல்

லாம் 3. 21, பத்தியின் பாலராகிப் பரமனுக்காளாம் அன்பர் தத்தமில் கூடினார்கள் தலையினால் வணங்குமாபோல்.........விளைந்தன சாலி யெல்லாம் 3. 22, நீற்றொளியால் நிறை தூய்மையால் புரந்த அஞ் செழுத்தோசை பொலிதலால்.........பாற்கடல் போல்வது (தேவா சிரிய மண்டபம்) 5. 3, பரன் அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர் நெஞ்சம் என்ன இருண்டது நீண்டவான் 6. 159, பாசப்பழிமுதல் பறிப்பார்போலப் பறித்தவைகறிக்கு நல்க 10. 21, மூட்டாதார் கொல்களத்தைவிட்டு நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்டபோதில் அலைப்பட்ட ஆர்வமுதற்குற்றம் போலாயினார் 15. 27, சினமொடுகவர் ராய் நிலவிய இருவினை வலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர் புலனுற மனனிடை தடைசெய்த பொறிகளினளவுளவே 16. 85, பேணுதத் துவங்களென்னும் பெருகு சோபானமேறி ஆணையாம் சிவத்தைச்சார அணைபவர்போல ஐயர் நீள்நிலை மலையை ஏறி 16. 103, ஊட்டியும் அரியா நின்றார் உறுபிறப்பரிவார் ஒத்தார் 19. 17, செய்த விரைத்தாமமெனை மன்றல் மலர்த்துணர் தூக்கி மருங்கு தாழ் சடையார்போல் நின்ற நறுங்கொன்றை 20. 21, ஆங்கு வளா ரெயிலினுடன் விளங்கும் வாயில் அப்பதியில் வாழ்பெரியோருள் ளம் போல ஓங்கு நிலைத்தன்மைய 25. 88, சந்திரகாந்தம்...... புனிற்றுமதி கண்டுருகிப்பொழிந்த நீரால்......அன்புருகி மெய் பொழியக்கண்ணீர் வாரும் அடியவரும் அனைய 25. 92, அடியார் தந்தூசுடைய துகள்மாசு கழிப்பார்போல் தொல்லைவினை ஆசுடைய மலமூன்றும் அணையவரும் பெரும் பிறவி மாசுதனை விடக்கழித்து 25·114, ஓதுகிடைசூழ் சிறுவர்களும் உதவும் பெருமை ஆசானும் போதின் விளங்கும் தாரகையும் மதியும்போல 26·3, அருட்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம் அன்பு செறிகடலுமாம் எனவும் ஓங் கும் பொருட்சமய முதற் சைவநெறி தான்பெற்ற புண்ணியக் கண் ணிரண்டெனவும் புவனமுய்ய இருட்கடவுண் டவாருளும் அகில மெல்லாம் ஈன்றாள் தன் திருவருளும் எனவும் கூடித் தெருட்கலை ஞானக்கன்றும் அரசும் சென்று 27·185, அருளுடையார் உளமனைய தண்ணளித்தாய்.........குளிர்தூங்கும்.........தண்ணீர்ப்பந்தர் 30. 5, தாமரையும்......செழுஞ்சாமம் பாடுமால் 34.9, மாமறையோர்......

*அறுவை உத்தரியந் தனிவிசும்பில் எறிந்தார்க்கும்......சிவாநந்தப் பெருக்காறுபோத......நுரைக்குமிழி யெழுந்திழிவனபோல் 34·95, வெண்தரளப் பந்தர்நிழல்......எடுத்த திருவடிநீழலென 34·395, (திருநீற்றுத் தொண்டர் குழாம்) புண்ணியத்தின் படையெழுச்சி போலெய்தும் பொலிவெய்த 34.650, இட்ட ஏடு மருவுறும் பிறவி யாற்றில் மாதவர் மனம் சென்றுறற்போற் பொருபுனல் வைகையாற் றில் எதிர்ந்து நீர் கிழித்துப்போகும் 34.846, ஓங்கிய ஞானவெள்ளம் உள்நிறைந் தெழுவதென்ன...பாங்கொளி பரப்பிநின்றார் 34.1228, சங்கரனார் திருவருள்போல் தண்ணீரின் சுவை ஆர்ந்து 35.162, அக நோக்குங் குறிப்பேயன்றிப் புறநோக்குங் கண்டவுணர்வு துறந்தார் போல் பிறந்தபொழுதே கண்காணார் 37.1, பெருஞ் செல்வம்...அவர் இருவினைபோல் மாண்டது 51. 8, (திருநீற்றை நினைவூட்டும் உவமை கள் என்ற தலைப்பையும் பார்க்க.)*

## சாதுரியமான ஐயப்பாடுகள்

*பேரழகு மூத்த வடிவேயோ...மூப்பெனுமதன் படிவமேயோ... ஐயமுற6. 32, எதிர்கொண்ட சீரடியாரவர்களோ நம்பியாரூரர் தாமோ முன்பிறைஞ்சினர் யாவரென்றறியா முறைமையால் 6.98, நாயகிக்கு மகிழ்ந்தியவோ பிரியநங்கைதா னறியாமையோ அறியோம்...ஆர்த்த வேடமும் தோன்ற...வந்தார் 9·4, பொன்னிநீர் படிந்துவந்தாரோ... கங்கைநீர் தோய்ந்து வந்தாரோ 13·17, தம்பெருமான் அருளாலேயோ மேனியினிலேயும் அசைவினயர்வாலோ அறியோம்...உறக்கம் வந்த ணைய33·26, தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும் பிள்ளைமைதானோ... அம்மேயப்பா என்றென் றழைத்தருளி யழுதருள 34·63, மறிவண் கையார் அருளேயோ மலர்க்கண் துயில்வந் தெய்தியதால் 35.48, திரு விளையாட்டினை மகிழ்ந்தோ...சங்கிலியார் வழியடிமைப் பெருமையோ அஞ்சிருள் மீளவுமணைந்தார் 35·250, என்பூடுருக்கும் புலவியோ பிரிவோ இரண்டின் இடைப்பட்டார் 35. 315, நம்பிக்குத் தாமே பொன் கொடுப்பதலால் ஒருவர் கொடுப்பக்கொள்ள ஒண்ணாமைக் கது வாங்கிப் பெருகருளால் தாங்கொடுக்கப் பெறுவதற்கோ அது அறி யோம் 43. 165.*

## சில அற்புத நிகழ்ச்சிகளின் காரணம்

அன்பர்தம் அன்பிடும் தட்டுக்கு முதல்வர்மட்டு நின்ற தட்டுஅரு ளொடுந் தாழ்வுறும் வழக்கால்...தாழ்ந்தது கோவணத் தட்டு 13. 35, கோவண மதுவும்...அடியவர் அடிமைத் தொண்டும் ஒத்தலால் ஒத்து நேர்நின்றதத் துலைதான் 13. 44, வேழம் திரிந்து மேற்கதுவ அச்சம் தாய் தலையன்பின் முன்பு நிற்குமே...தடக்கை...அணித்தார் 14. 24, நண்ணிய ஒருமையன்பின் நாருறு பாசத்தாலே திண்ணிய தொண்டர் பூட்டி இழுத்தபின் திறம்பிநிற்க ஒண்ணுமோ...அண்ணலார் நேரே நின்றார் 17. 28, பொடியார்க்குந் திருமேனிப் புனிதற்கு...முன்னை விடம் அமுதானால்...அடியார்க்கு நஞ்சமுதமாவதுதான் அற்புதமோ 27. 105, இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின் வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட அருளுமெய் யஞ்செழுத்தரசை இக்கடல்ஒரு கல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ 27. 129, கைத்தொண்டாகும்படிமையினால் வாசியில்லாக் காசுபடி பெற்றுவந்தார் வாகீசர்... திருமுலைப்பால் தேசமுய்ய உண்டவர்தாம் திருமாமகனார் ஆதலினால் காசு வாசியுடன் பெற்றார் 27.260, பயன்துய்ப்பான் தெண்ணீரணிந் தார்திருக்காப்பு நீக்கத் தாழ்க்க...இரக்கமொன் றிலீரென் றுபாடி27. 268, ஆதிமந்திரம் அஞ்செழுத்தோதுவார் நோக்கும் மாதிரத்தினும் மற்றை மந்திர விதிவருமே...சாதனைகள் சாதியா வகைகண்டமண் குண்டர்கள் தளர்ந்தார் 34. 698, இட்ட ஏட்டினில்...பதிகம்... அட்ட மூர்த்தியைப் பொருளென உடைமையால்...தீயிடைப்பச்சையாய் விளங்கியதன்றே 34. 786, ஆகமப்பொருளை...திருமூலர் வாக்கினால் தமிழ்வகுப்ப...அவ்வுடலைக் கரப்பிக்க...ஈசரருளென உணர்ந்தார் 36. 23.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் புகழப்படும் வகை

மேருவரையின் மேம்பட்ட தவத்தான் 35. 239, மிக்கவிழுத் தவவேந்தர் 6. 130, செய்தவப் பெரியோன் 6. 105, நீத்தாருந் தொடர்வரிய நெறிநின்றார் 35. 134, தம்பிரானைத் தன்னுள்ளந் தழீஇயவன் நம்பி ஆரூரன் நாம் தொழும் தன்மையான் 2. 19, எம்பி

ரான் அந்தமில்புகழ் ஆலால சுந்தரன் 5. 11, நுணங்கிய கேள்வி மேலோன் 6. 14, எண்ணம்மிக்கான் 6. 54, விண்கொள்ளாப்பேரொளி யான் 6. 143, சென்றுறிடர்களைவார் 78. 9, நிகரில்லான் 6.36, 6.75, தமிழ்நாதன் 6. 86, ஞாலமுய்ய எழுந்தருளு நம்பி 35. 337, உடைய நம்பி 6. 149, தம்பிரான் தோழர் 6. 129, மாசிலா மரபில் வந்த வள்ளல் 6. 40.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் பொன் பெற்ற இடங்கள்

திருப்புகலூர் 35. 50, திருப்பாச்சிலாச்சிராமம் 35. 82, திருமுதுகுன்றம் 35. 107, திருஓணகாந்தன்றளி 35. 191, திருநாகைக் காரோணம் 43. 63, திருமுருகன்பூண்டி 43. 171

## சைவ சமயத்தின் அடிப்படைக் கோள்கைகள்

செய்வினையும் செய்வானும் அதன் பயனும் கொடுப்பானும் மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள்...இவ்வியல்பு சைவ நெறி அல்லவற்றுக்கில்லை 40. 5, எல்லாம் உடைய ஈசனே இறைவன்...அல்லார் கண்டர் தமக்கிந்த அகிலமெல்லாம் ஆள் 40. 7.

## சைவமே வேத சாரம்

கருத்தின் பயனும் எழுத்தஞ்சும்...வேதப் பயனும் சைவமும் போல் 26. 9, வேத உள்ளுறையாவன விரிபுனல் வேணி நாதர் தம்மையும் அவரடியாரையும் நயந்து பாதம் அர்ச்சனை புரிவதும் பணிவதும் என்றே 32. 5, தென்தமிழும் வடகலையும் தேசிகமும் பேசுவன மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக 65. 2, அருமறைப் பயனாகிய உருத்திரம் 23. 7

## சொல்லடுக்குகள் சில

அல்ல...அல்ல 3. 15, ஆடும்...ஆடும் 14. 4, இளம்...இளம் 6. 134, எங்கும்...எங்கும் 34. 13, 3. 28—33, எல்லாம்...எல்லாம் 3. 17, 27. 4, ஒலிக்க...ஒலிக்க 25. 113, காட்டும்...காட்டும் 18. 3, 27. 14, சிவதா...சிவதா 14. 16—18, சூழும்...சூழும் 14. 3, 22. 1.

பரவை...பரவை 6. 148, பயிலும்...பயிலும் 33. 2, முத்து...முத்து 12. 2.

சொல்லழகும் பொருட்செறிவும்

மூப்பு வந்து தளர்வொடு சாய்க்கும் அன்பு தம்பிரான் திறத்துச் சாயார் 8. 9, ஓலமென்றான் மயக்கறு மறை ஓலிட்டு மாலயன் தேடநின்றான் 9. 29, வளஞ் சுருங்கவும்...மனஞ் சுருங்குதலின்றி 10. 7, புன்செய்க் குறும்பயிர் தடவிப் பாசப் பழிமுதல் பறிப்பார் போலப் பறித்து 10. 21, நெஞ்சில் வாலிய நேசங் கொண்டு மலர்க்கையில் தண்டும் கொண்டு 14. 10, களிற்றொடும் பாகர் வீழ்ந்த படுகளம் குறுகச் சென்றான்...அடுகளிற்றென்ன நின்ற அன்பரை முன்பு கண்டான் 14. 34, மண்படுவான் கண்படான் 15. 30, ஊட்டியும் அரியா நின்றார் உறுபிறப்பரிவார் ஒத்தார் 19. 17, சிவம்பெருக்கும் திருவாமூர் திருவாமூர் 27. 12, உயிர்தாங்கி அம்பொன்மணி நூல் தாங்கா தனைத்துயிர்க்கு மருள் தாங்கி 27. 34, முதலை வாய்நின்று மீட்டார் கழல்கள் நினைவாரை மீளாவழியின் மீட்பனவே 33. 33, ஒருபிறப்பும் எய்தாமையுடையார்தம்மை......இருபிறப்பின் நிலைமையினைச் சடங்கு காட்டி எய்துவிக்கும் 34. 264, கைதவம் பேசமாட்டேனென்று கைதவனுஞ் சொன்னான் 34. 749, பயத்தால் நெஞ்சு சோரவும் பீலிகை சோர்ந்திலர் 34. 788, பிள்ளையார்......சிவிகை மேலேறிச் சென்றார்...மன்னன்மா ஏறிச் சென்றான்...உள்ளவாறறிகிலாதார் உணர்வுமாலேறிச் சென்றார். 34. 800, எழிசை பொழிய மனம்பொழியும் பேரன்பால் பெருகிய கண்மழைபொழிய 34. 997, அஞ்செழுத்து நெஞ்சுதொடுக்க அலர் தொடுத்தே 35. 226, என்னாருயிரும் எழில்மலருங் கூடப்பிணைக்குமிவள் 35. 230, கங்குல் பகலாய்ப்பகல் கங்குலாகிக்கழியா நாளெல்லாம்......புலர்வார் 35. 313, கூனுங்குருடுந்தீர்த்தேவல் கொள்வார் குலவுமலர்ப்பாதம் யானும் பரவித்தீர்க்கின்றேன் எழுபிறப்பின் முடங்குகூன் 45. 9, திருவாரூர்க் குளத்திலெடுத்தார் வினையின் குழிவாய் நின்றெனையெடுத்தார் 53. 9, வேடர்வழிபறிக்கப்பறி யுண்டவரெம்பழவினை வேர் பறிப்பார் 58. 7 (இவைபோன்ற சொற்றொடர்கள் எண்ணிலாதன உள்ளன)

## தமிழும் தமிழ் நாடும்

*ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ்* 21. 3, *அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின்துறைவெல்ல* 34. 24, *பொருள்பொழியும் பெருகன்பு தழைத்தோங்கிப் புவி ஏத்தத் தெருள் பொழிவண்தமிழ் நாட்டு* 42. 35.

## திருச்சிற்றம்பலம்

*அருமறை முதலில் நடுவினில் கடையில் அன்பர்தம் சிந்தையில் அலர்ந்த திருவளர் ஒளிசூழ்திருச்சிற்றம்பலம்* 6. 104, *அருமறை சிரத்தின்மேலாம் சிற்பரவியோமமாகுந் திருச்சிற்றம்பலம்* 7. 2, *அண்ணலார்தமக்களித்த மெய்ஞ்ஞானமேயான அம்பலம்* 34. 160, *அறிவின் எல்லையாய திருத்தில்லை* 43. 61.

## திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் புகழப்படும்வகை

*குறைவிலா நிறைஞானக் கொண்டலார்* 34. 108, *மாமறை முதற்கலை அகிலமும் ஓதாதுணர்ந்த முத்தமிழ்விரகன்* 34. 223, *ஓதாது ஞானமெலா முணர்ந்தார்* 34. 489. *தெருளுமெய்க்கலை விளங்கவும் பாருளோர் சிந்தையிருளும் நீங்கவும் எழுதுசொன் மறையளிப்பவர்* 34. 224, *வண் தமிழால் எழுதுமறை மொழிந்தபிரான்* 27. 180, *புதிய செந்தமிழ்ப் பழமறை மொழிந்த பூசுரனார்* 32. 33, *ஆதிஞானம் மலரும் திருவாக்குடை வள்ளலார்* 34. 845, *மதுர முத்தமிழ்வாசகர்* 34. 378, *சந்தமுத்தமிழ் விரகர்* 34. 507, *இயலிசைத்தலைவனார்* 34. 361, *சராசரங்களெலாம் சிவம்பெருக்கும் பிள்ளையார்* 34. 26, *சைவசிகாமணியார்* 34. 459, *நம் மலத்துயர்தீர்க்க வந்தருளிய ஞானச்செம்மலார்* 34.417, *இந்த மாநிலத்தின் இருள்நீங்கிட வந்த வைதிகமாமணி* 34. 190, *திருத்தொண்டின் உண்மை நோக்கி இருள்கெடமண்ணில் வந்தார்* 34. 870, *திருத்தொண்டென்னும் வான்பயிர்தான் ஓங்குதற்குச்சூழும் பெருவேலி* 34. 942, *வேதமொடு சைவநெறி விளங்கவந்த கவுணியனார்* 34. 985, *எழிசையும் பலகலையும் எவ்வுலகுந்தனித்தனியே வாழவருமவர்*

34. 48, வையமெலாமுய்யவரு மறைச்சிறுவர் 34. 103, மண்ணெலாம் உய்ய வந்த வள்ளலார் 34. 862, பரசமயம் நிராகரித்து நீறாக்கும் புனைமணிப்பூண் காதலன் 34. 19, வைதிகசூளா மணியை மாதவத்தோர் பெருவாழ்வை மைதிகழும் திருமிடற்றார் அருள்பெற்ற வான் பொருளை 34. 873, தவநெறி வளர்க்கவந்தார் 34. 1244, விடுத்த வேட்கையர் 34. 1091, புண்ணிய விளைவுபோல்வார் 34. 1225, ஏக மாஞ் சிவமெய்ஞ்ஞானம் இசைந்தவர் 34. 1237, பூசுரர்தம் சிங்கமனை யார் 34. 172, மறையனைத்தும் ஒருவடிவாமென நிறை மதிப்பிள்ளை 34. 188, சைவமாமறைத் தலைவர் 34. 221, அருங்கலைக்கோன் 34. 197. ஒரு பிறப்பு மெய்தாமையுடையார் 34. 264, கற்றவர்கள் தொழுதேத்தும் காழிவேந்தர் 34. 481, அஞ்செழுத்தின்மெய்யுணர்ந்தவர் 34. 512, பேருணர்விற் பொலிகின்ற பிள்ளையார் 34. 72.

## திருத்தொண்டத் தொகை

ஈசனடியார் பெருமையினை எல்லாவுயிருந்தொழ எடுத்துத்தேச முய்யத்திருத்தொண்டத் தொகை முன்பணித்த 26. 60, ஞாலமுய்ய நாமுய்ய நம்பி சைவ நன்னெறியின் சீலமுய்யத் திருத்தொண்டத் தொகை முன்பாட 12. 9, தென்தமிழ்ப் பயனுயுள்ள திருத்தொண்டத்தொகை 7. 9, மாதவம் செய்ததென்றிசை வாழ்ந்திட தீதிலாத் திருத்தொண்டத் தொகைதர 2. 25, சுந்தரத் திருத்தொண்டத் தொகைத்தமிழ் 5. 11, புற்றிடத் தெம்புராணர் அருளினாற் சொற்ற மெய்த்திருத்தொண்டத் தொகை 2. 38, மூலமான திருத்தொண்டத் தொகை 78. 1.

## திருத்தொண்டர் இலக்கணமும் பெருமையும்

சிவனார் செய்ய கழல்பற்றி எப்பற்றினையும் அற எறிவார் 12. 4, எப்பற்றினையு மறுத் தேறுகைத் தேறுவார்தாள் மெய்ப் பற்றெனப் பற்றி விடாத விருப்பின் மிக்கார் 21. 8, மனம் முதலாயின மூன்றும் அண்ணலார் சேவடியின் சார்வாக அணைவிப்பார் 25. 112, களவு பொய்காமம் கோபம் முதலிய குற்றங் காய்ந்தார் 31. 2, துன்றும் புலனைந்துடன் ஆறு தொகுத்தகுற்றம் வென்று......இன்பமுற்றார்

39. 5, கோதிலாத குணப் பெருங்குன்றனூர் 5. 7, நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலும் நடந்தாலும்......மன்றாடு மலர்ப்பாத மொருகாலு மறவாமை......குணமிக்கார் 64. 7, பூசுநீறு போலுள்ளும் புனிதர்கள் 5. 6, ஈசனுக்கே யன்பானூர் யாவரையுந் தாங் கண்டால்...... ஆவின் பின் கன்றணைந்தாற் போலணைந்து......இனியனவே பேசுவார் 64. 1, ஈசனையே பணிந்துருகி இன்ப மிகக் களிப்பெய்திப் பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை......உடல் கம்பித்திடுவோர் 64. 6, கேடும் ஆக்கமும் கெட்ட திருவினூர் 5. 8, கூடு மன்பினிற் கும்பிடலே யன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினூர் 5. 8.

## திருநாவுக்கரசு சுவாமிகள் புகழப்படும் வகை

உடைய அரசு உலகேத்தும் உழவாரப் படையாளி 6. 83, அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ உலகில் வரு மிருள் நீக்கி ஒளிவிளங்கு கதிர்போல மலரும் மருணீக்கியார் 27. 18, பரசமயப் பற்றறுத்த பான்மையினூர் 27. 91, கிறைதவத்தோர் 27. 92, இன்தமிழ்க்கு மன்னனை வாகீசத் திருமுனி 27. 147, தமிழ்மொழித் தலைவர் 34. 598, தேச முய்யவந்தவர் 31. 21, வாக்கின் பெருவிறல் மன்னர் 34. 269, அத்தனூர் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகும் மெய்த்தன்மை யுணர்வுடைய விழுத்தவத்து மேலோர் 27. 422, அன்புறு பத்தி வடிவான வாகீசர் 27. 425, ஆண்ட அரசு 27. 232, 429.

## திருநீற்றுச் செல்வம்

உறுவது நீற்றின் செல்வம்......பெறுவது சிவன் பாலன்பாம் பேறு 7. 6, ஆய்ந்த மெய்ப்பொருள் நீறெனை வளர்க்கும் அக்காப்பு 32. 3, தூய்மை திருநீற்றடைவே மெய்ப் பொருள் 33. 5, ஆதிமுதல்வர் திருநீற்றின் அடைவே பொருள் 38. 3.

## திருநீற்றை நினைவூட்டும் உவமைகள்

பொன்னின் வெண்திருநீறு புனைந்தெனப் பன்னு நீள்பனி மால்வரை 2. 1, பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள் 5. 6, நல்லோர்

மனம்போல் அவாணிந்த சேமம் நிலவுதிருநீற்றின் சிறந்த வெண்மை 22. 2, வண்டலர் கைதை குன்று நீறு புனை மேனியவாகித் தூயநீறு புனை தொண்டர்களென்ன 6. 96, அண்ணல் வெண்ணீற்றின் பேரொளி போன்றது நீள் நிலா 6. 162, கிளர்ந்த திருநீற்றொளியிற் கெழுமிய நண்பகலும் 34. 6, திருநீற்றின் சோதி நல்லொளி வட்டமாகி நண்ணிமேல் வருவதென்ன வில்வளர் தரளக்கோவை வெண்குடை நிழற்ற 34. 743, சந்தமென் மலர்த்தாதணி நீறு மெய்தரித்து ...கண்டிகை பூண்டு...எழுந்தது மருத்து 34. 1194.

## திருமகளனைய பெண்மணிகள்

சடங்கவி மகள் 6. 7, திருநீலகண்டர் மனைவி 8. 5, இயற்பகையார் மனைவி 9. 9, இளையான்குடிமாறர் மனைவி 10. 24, மெய்ப்பொருளார் மனைவி 11. 14, மானக்கஞ்சாறர் புதல்வி 18. 16, திலகவதியார் 27. 17, 31, காரக்காலம்மையார் 30. 2, 19, 42, மங்கையர்க்கரசியார் 34. 647, 72. 1, பூம்பாவை 34. 1090, திருவெண்காட்டு நங்கை 42. 57.

## திலகவதியார்

செங்கமல நிரையிதழின் அகவயினில் திகழவருந் திருவனைய திலகவதியார் 27. 17, செம்மலர் மேற்றிருவனைய திலகவதியார் 27. 31, அணங்கனைய திலகவதியார் 27. 24, அம்பொன்மணி நூல்தாங்காதனைத் துயிர்க்குமருள் தாங்கி இம்பர் மனைத்தவம் புரிந்து திலகவதியாரிருந்தார் 27. 34, தூண்டுதவ விளக்கனையார் 27. 46, மன்னு தபோதனியார் 27. 48, 66, அருந்தவத்தார் 27. 56, உயர் தவத்தோர் 27. 65, தாபதியார் 27. 78.

## துயில்விட்டெழும்முறை

மாலையாமம் புலர்வுறும் வைகறை வேலைசெய்வினைமுற்றிவெண்ணீறணி கோலமேனியராய்க் கைம்மலர் குவித்தேல அஞ்செழுத்தோதி எழுந்தனர் 34. 208.

தேவாரப் பாடல்கள் சிலவற்றின் கருத்துகூறல்

9. 2, 11. 15, 27. 75, 28. 2, 34. (75, 77, 78, 79, 174, 486, 557, 705, 820 - 843, 965, 1009), 35. 53, 37. 1, 43. (25, 33, 35, 56)

தொண்டர்க்குற்ற தீங்கைக்கூற வாக்கெழாமை

*தான் முன் நினைந்த அப்பரிசே செய்ய* 11. 15, *தன் கருத்தே முற்றுவித்தான்* 15. 40, *மன்னவன் சொன்னபடி முடித்தார் அப்பதகர்* 27. 124, *வந்து தந்தொழில் புரிந்தனர்* 34. 700.

நாயனார் என்ற சொல்வழக்கு

*கடவுளைக் குறித்தல்* 16. 110, 123, 173, 180, 28. 9, 32. 7, 34. 244, 527, 35. 16, 328, 384, 44. 2, 52. 7, 57. 7, *தொண்டரைக் குறித்தல்* 1. 4, 11. 4, 13. 33, 34. 802, 34. 1013, 43. 86.

நாயன்மார் நாம மந்திரம்

*மீனவன் செவியினூடு...ஞானசம்பந்தர் என்னும் நாம மந்திர முஞ் செல்ல...அயர்வு தன்னை அகன்றிட* 34. 721, *அரசின் நாமம் ஏத்தி எப்பொருளும்நாளும் அவ்வருந்தவர் பொற்றாளே எனவுணர்ந் தடைவார்* 31. 44, *நம்பிஆரூரர் நாமம் நவின்ற நலத்தாலே ஆளும் படியால் அணிமாதி சித்தியான அணைந்ததற்பின்* 29. 6

பஞ்சகவ்விய அபிடேகம்

*வேணித் திருமுடிமேல்...திருமஞ்சனம் ஐந்துமளிக்கும்* 26. 20, *ஆன்பெற்ற அஞ்சேந்திச் சென்றார்* 19. 14.

பஞ்சநாதங்களின் முழக்கம்

6. 69, 16. 101, 27. 428, 49. 19, 78. 34.

பலவகைக் குறிப்புகள்

*அட்டமா சித்திகள்* 36. 2, *அட்டமாய்விடுதல்* 16. 76, *அணங்கு சார்ந்தாள்* 16. 49, *அத்தாணி மண்டபம்* 47. 13, *அந்தணர் பேரவை*

பனைமரங்கட்கும் சிவப்பேறு

*பிள்ளையார் தந்திருவாக்கிற் பிறத்தலால் அத்தாலமும் முன் புள்ள பாசம் விட்டகல ஒழியாப் பிறவிதனை யொழித்துக் கொள்ளு நீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடின* 34. 983.

மரபுக் கேற்ற தொண்டு

*அளவிலா மரபின் வாழ்க்கை மட்கலம் அமுதுக் காக்கி...அடி யார்க் கென்றும்...ஓடளித் தொழுகும் நாளில்* 8. 3, *வருபிறப்பின் வழிவந்த அறம்புரி கொள்கையராயே* 24. 12, *தம்மறம் புரிமரபினில் தரும் பெருந்தொண்டு மெய்ம்மையே புரிஅதிபத்தர்* 49. 20, *வருமர பில் உள்ளோர்பால் எண்ணெய்மாறிக் கொணர்ந்து...பணிசெய்வார்* 51. 9, *உடையொடு நல்ல கீளும் ஒப்பில் கோவணமும் நெய்து... அளித்து* 73. 4.

மனம் வாக்குக் காயங்கள் இறைபணி நிற்றல்

*மனத்தின் செய்கை அானடிப் போதுக் காக்கி ஓங்கிய வாக்கின் செய்கை உயர்ந்த அஞ்செழுத்துக் காக்கித் தாங்கு கைத்தொழிலின் செய்கை தம்பிரான் அடியார்க்காக*...73. 3.

முற்பிறவி கூறப்படும் இடங்கள்

2. 27, 6. 67, 131, 27. 48, 49, 35. 207, 74. 8.

முற்பிறவி நினைவு

35. 229, 74. 12

மூன்று மலங்கள்

6. 92, 16. 154, 27. 129, 42. 35, 69. 6.

வரலாறுகள் சில

*அகத்தியர்காவிரியைத் தோற்றுவித்தல்* 3. 2, *அம்பலமுகட்டிற் பாக்கொங்குப் பொன்னால் ஆதித்த சோழன் வேய்தல்* 60. 3, *இமய*

*மலையிற் சோழன் புலிக்குறிபொறித்தல்* 3. 1, 14. 2, 47. 1, *இலக்குமி திருவாரூரில் வழிபட்டது.* 4. 1, *உபமன்னியமுனிவர் கிருஷ்ணனுக்குச் சிவதீக்ஷை செய்வித்தது.* 2. 14, *உபமன்யர் திருப்பாற் கடலுண்டது* 2. 15, *உமையம்மை காஞ்சிபுரத்தில் சிவபூசை செய்தது* 25 - 52 - 68, *உமையம்மை முப்பத்திரண்டறம் வளர்த்தது* 25. 70, 71, 35. 284, *உறையூர்ச் சோழன் ஆற்றில் விழுந்த முத்தாரம் திருமஞ்சனக் குடத்திற்புகுந்து அரன்முடி மீதேறியது* 35. 76, 77, *எழுத்தறியும் பெருமான் ஒற்றியூர் நீங்கலென்றெழுதியது* 25. 39, 35. 204, *பெண்ணையாறு துறையூரின் தெற்கிலிருந்தது* 6. 81, 82, *காஞ்சிபுரத்தைக் கரிகாற்பெருவளத்தான் புதுக்கியது* 25. 85, *சிபிச் சோழன்* 74. 1, *சிவபூசை செய்து பரசுராமன் பரசு பெற்றது* 12. 1, *சேக்கிழாருக்கு இறைவன் அடியெடுத்துக்கொடுத்தது* 1. 9.

வழிபாட்டிற் கண்ணீரும் கம்பலையும்

16. (106, 113, 173), 27. (72, 140, 167, 171, 176, 186, 222. 225, 238, 253, 309, 316, 323, 335, 346, 380, 387, 411), 34, (161, 220, 227, 303, 368, 414, 421, 433, 456, 470, 490, 584, 865, 881, 902, 971, 976, 994, 997, 1024, 1032, 1124) 35. (84, 89, 113, 141, 182 194), 43. (86, 89), 64. 6.

வள்ளலார் என்ற சொல் வழக்கு

*கடவுளைக் குறித்தல்* 13. 49, 16. 133, 34. 59, 206, *தொண்டரைக்குறித்தல்* 9. 13, 10. 17, 16. 66, 180, 18. 19, 21, 20. 29, 21. 34, 26. 31, 27. 242, 397, 34 (143, 256, 258, 315, 406, 439, 458, 525, 719, 800) 35. 409, 41. 6, 42. 54, 59.

வானவர்கள் பூமாரி பெய்த சந்தர்ப்பங்கள்

4. 45, 6. 69, 8. 39, 9. 35, 13. 45, 14. 49, 16. 14, 16. 184, 17. 29, 18. 31, 20. 41, 24. 33, 25. 126, 26. 57, 27. 428, 30. 51, 34. (80, 105, 217, 848, 1093), 35. (135, 266, 405), 37. 20, 47. 40, 49. 18, 59. 11, 78. 12, 78. 34.

விளையாட்டு வகைகள்

3. 16, 16. 4, 30. 5, 34. 45—52, 43. 126, 155.

வேள்வியிற் சிறந்தது யாது ?

*தில்லைசூழ் எல்லையில் மறையவர் பயில் வேள்விச்சிவம் தரும்பய னுடைய ஆகுதிகளின் செழும்புகை* 34. 152.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பெரிய புராணம்

என வழங்கும்

# திருத்தொண்டர் புராணம்

## பாயிரம்

### வாழ்த்து

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம். க

ஊன டைந்த உடம்பின் பிறவியே
தான டைந்த உறுதியைச் சாருமால்
தேன டைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மான டஞ்செய் வரதர்பொற் றாள்தொழ. உ

எடுக்கும் மாக்கதை யின்தமிழ்ச் செய்யுளாய்
நடக்கும் மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீள்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம். ங

### திருக்கூட்டம்

மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயும் நாயன்மார் தூய சொல்மலர்

பொதிகலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே. ௪

## அவையடக்கம்

அளவி லாத பெருமைய ராகிய
அளவி லாஅடி யார்புகழ் கூறுகேன்
அளவு கூட உரைப்பரி தாயினும்
அளவி லாசை துரப்ப அறைகுவேன். ௫

தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ருஞ்சீர் புகலலுற் றேன்முற்றப்
பெருகு தெண்கட லூற்றுண் பெருநசை
ஒருசு ணங்கனை யொக்குந் தகைமையேன். ௬

செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவருங் கொள்வரால்
இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினும்
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால். ௭

மேய இவ்வுரை கொண்டு விரும்புமாம்
சேய வன்திருப் பேரம்ப லம்செய்ய
தூய பொன்னணி சோழன்நீ டூழிபார்
ஆய சீர்அந பாயன் அரசவை. ௮

அருளின் நீர்மைத் திருத்தொண் டறிவரும்
தெருளின் நீரிது செப்புதற் காமெனின்
வெருளின் மெய்ம்மொழி வான்நிழல் கூறிய
பொருளின் ஆகும் எனப்புகல் வாமன்றே. ௯

## நூற்பெயர்

இங்கிதன் நாமம் கூறின் இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டில் மாக்கள் சிந்தையுள் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்கு கின்ற [பாம்.
செங்கதி ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர் புராணம் என்



## முதற் காண்டம்

# திருமலைச் சருக்கம்

# ௨. திருமலைச் சிறப்பு

பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னும் நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கும் அறிவரி யானென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை. ௧

அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலின்
நண்ணும் மூன்றுல குந்நான் மறைகளும்
எண்ணில் மாதவஞ் செய்ய வந்தெய்திய
புண்ணி யந்திரண் டுள்ளது போல்வது. ௨

நிலவு மெண்ணில் தலங்களும் நீடொளி
இலகு தண்தளி ராக எழுந்ததோர்
உலக மென்னும் ஒளிமணி வல்லிமேல்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை. ௩

மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர்
கான வீணையின் ஓசையும் காரெதிர்
தான மாக்கள் முழக்கமும் தாவில்சீர்
வான துந்துபி ஆர்ப்பும் மருங்கெலாம். ௪

பனிவி சும்பில் அமரர் பணிந்துசூழ்
அனித கோடி அணிமுடி மாலையும்
புனித கற்பகப் பொன்னரி மாலையும்
முனிவர் அஞ்சலி மாலையும் முன்னெலாம். ௫

கூருகிர்மெல் லடியளகின் குறும்பார்ப்புக் குழூச்சுழலும்
வார்பயின்முன் றிலில்நின்ற வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்
காரிரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிறார் கவர்ந்தோட
ஆர்சிறுமென் குரைப்படக்கும் அரைக்கசைத்த இருப்புமணி.

வன்சிறுதோல் மிசையுழத்தி மகவுறக்கு நிழல்மருதும்
தன்சினைமென் பெடையொடுங்குந் தடங்குழிசிப் புதைநீழல்
மென்சினைய வஞ்சிகளும் விசிப்பறைதூங் கினமாவும்
புன்தலைநாய்ப் புனிற்றுமுழைப் புடைத்தெங்கும் உடைத்தெங்கும்.

செறிவலித்திண் கடைஞர்வினைச் செயல்புரிவை கறையாமக்
குறியளக்க உளைக்குஞ்செங் குடுமிவா ரணச்சேக்கை
வெறிமலர்த்திண் சினைக்காஞ்சி விரிநீழல் மருங்கெல்லாம்
நெறிகுழற்புன் புலைமகளிர் நெற்குறுபாட் டொலிபரக்கும். கூ

புள்ளுந்தண் புனற்கலிக்கும் பொய்கையுடைப் புடைஎங்கும்
தள்ளுந்தாள் நடையசையத் தளையவிழ்பூங் குவளைமது
விள்ளும்பைங் குழற்கதிர்நெல் லிலைச்சியபுன் புலைச்சியர்கள்
கள்ளுண்டு களிதூங்கக் கறங்குபறை யுங்கலிக்கும். க0

இப்படித்தா கியகடைஞர் இருப்பின்வரைப் பினின்வாழ்வார்
மெய்ப்பரிவு சிவன்கழற்கே விளைத்தஉணர் வொடும்வந்தார்
அப்பதியில் ஊர்ப்புலைமை ஆன்றதொழில் தாயத்தார்
ஒப்பிலவர் நந்தனா ரெனஒருவ ருளரானார். கக

பிறந்துணர்வு தொடங்கியபின் பிறைக்கண்ணிப் பெருந்தகைபால்
சிறந்தபெருங் காதலினால் செம்மைபுரி சிந்தையராய்
மறந்துமயல் நினைவின்றி வருபிறப்பின் வழிவந்த
அறம்புரிகொள் கையராயே அடித்தொண்டின் நெறிநின்றார்.

ஊரில்விடும் பறைத்துடவை உணவுரிமை யாக்கொண்டு
சார்பில்வருந் தொழில்செய்வார் தலைநின்றார் தொண்டினால்
கூரிலைய முக்குடுமிப் படையண்ணல் கோயில்தொறும்
பேரிகையே முதலாய முகக்கருவி பிறவினுக்கும். கங

போர்வைத்தோல் விசிவாரென் றினையனவும் புகலுமிசை
நேர்வைத்த வீணைக்கும் யாழுக்கும் நிலைவகையில்

சேர்வுற்ற தந்திரியும் தேவர்பிரான் அர்ச்சனைக்குக்
கார்வத்தி னுடன்கோரோ சனையும்இவை அளித்துள்ளார்

இவ்வகையால் தந்தொழிலின் இயன்றனவெலாம் எவ்விடத்தும்
செய்வனவும் கோயில்களில் திருவாயிற் புறநின்று
மெய்விரவு பேரன்பு மிகுதியினா லாடுதலும்
அவ்வியல்பில் பாடுதலு மாய்நிகழ்வா ரந்நாளில். கரு

திருப்புன்கூர்ச் சிவலோகன் சேவடிகள் மிகநினைந்து
விருப்பினொடுந் தம்பணிகள் வேண்டுவன செய்வதற்கே
அருத்தியினால் ஒருப்பட்டங் காதனூர் தனில்நின்றும்
வருத்தமுறுங் காதலினால் வந்தவ்வூர் மருங்கணைந்தார். கசு

சீரேறும் இசைபாடித் திருத்தொண்டர் திருவாயில்
நேரேகும் பிடவேண்டும் எனநினைந்தார்க் கதுநேர்வார்
காரேறும் எயிற்புன்கூர்க் கண்ணுதலார் திருமுன்பு
போரேற்றை விலங்கஅருள் புரிந்தருளிப் புலப்படுத்தார். கஎ

சிவலோக முடையவர்தந் திருவாயில் முன்னின்று
பவலோகங் கடப்பவர்தம் பணிவிட்டுப் பணிந்தெழுந்து
சுவலோடு வாரணையப் போவார்பின் பொருசூழல்
அவலொடும் அடுத்ததுகண் டாதரித்துக் குளந்தொட்டார்.

வடங்கொண்ட பொன்னிதழி மணிமுடியார் திருவருளால்
தடங்கொண்ட குளத்தளவு சமைத்ததற்பின் தம்பெருமான்
இடங்கொண்ட கோயில்புறம் வலங்கொண்டு பணிந்தெழுந்து
நடங்கொண்டு விடைகொண்டு தம்பதியில் நண்ணினார். கக

இத்தன்மை ஈசர்மகிழ் பதிபலவுஞ் சென்றிறைஞ்சி
மெய்த்ததிருத் தொண்டுசெய்து விரவுவார் மிக்கெழுந்த
சித்தமொடுந் திருத்தில்லைத் திருமன்று சென்றிறைஞ்ச
உய்த்தபெருங் காதலுணர் வொழியாது வந்துதிப்ப. உ0

அன்றிரவு கண்துயிலார் புலர்ந்ததற்பின் "அங்கெய்த
ஒன்றியணை தருதன்மை உறுகுலத்தோ டிசைவில்லை"
என்"றிதுவும் எம்பெருமான் ஏவல்"எனப் போக்கொழிவார்
நன்றுமெழுங் காதல்மிக "நாளைப்போவேன்"என்பார். உக

"நாளைப்போ வேன்" என்று நாள்கள்செலத் தரியாது
பூளைப்பூ வாம்பிறவிப் பிணிப்பொழியப் போவாராய்ப்
பாளைப்பூங் கமுகுடுத்த பழம்பதியின் நின்றும்போய்
வாளைப்போத் தெழும்பழனஞ் சூழ்தில்லை மருங்கணைவார்.

செல்கின்ற போழ்தந்தத் திருவெல்லை பணிந்தெழுந்து
பல்குஞ்செந் தீவளர்த்த பயில்வேள்வி எழும்புகையும்
மல்குபெருங் கிடையோது மடங்கள்நெருங் கினவுங்கண்
டல்குந்தம் குலநினைந்தே அஞ்சிஅணை கிலர்நின்றார். உ௩

நின்றவரங் கெய்தரிய பெருமையினை நினைப்பார்முன்
சென்றிவையுங் கடந்தூர்சூழ் எயிற்றிருவா யிலைப்புக்கார்
குன்றனைய மாளிகைகள் தொறுங்குலவும் வேதிகைகள்
ஒன்றியமூ வாயிரமங் குளஎன்பார் ஆகுதிகள். உச

"இப்பரிசா யிருக்கவெனக் கெய்தல்" அரி தென்றஞ்சி
அப்பதியின் மதிற்புறத்தின் ஆராத பெருங்காதல்
ஒப்பரிதாய் வளர்ந்தோங்க உள்ளுருகிக் கைதொழுதே
செப்பரிய திருவெல்லை வலங்கொண்டு செல்கின்றார். உரு

இவ்வண்ணம் இரவுபகல் வலஞ்செய்தங் கெய்தரிய
அவ்வண்ணம் நினைந்தழிந்த அடித்தொண்டர் அயர்வெய்தி
"மைவண்ணத் திருமிடற்றார் மன்றில்நடங் கும்பிடுவ
தெவ்வண்ணம்" எனநினைந்தே ஏசறவி னொடுந்துயில்வார்.

"இன்னல்தரும் இழிபிறவி இதுதடை" என் றேதுயில்வார்
அந்நிலைமை அம்பலத்துள் ஆடுவார் அறிந்தருளி
மன்னுதிருத் தொண்டரவர் வருத்தமெலாந் தீர்ப்பதற்கு
முன்னணைந்து கனவின்கண் முறுவலோடும் அருள்செய்வார்.

"இப்பிறவி போய்நீங்க எரியினிடை நீமூழ்கி
முப்புரிநூல் மார்பருடன் முன்னணைவாய்" என்னமொழிந்
தப்பரிசே தில்லைவாழ் அந்தணர்க்கும் எரியமைக்க
மெய்ப்பொருளா னாருளி அம்பலத்தே மேவினார். உஅ

தம்பெருமான் பணிகேட்ட தவமறையோ ரெல்லாரும்
அம்பலவர் திருவாயின் முன்பச்ச முடன்ஈண்டி

"எம்பெருமான் அருள்செய்த பணிசெய்வோம்" என்றெத்தித்
தம்பரிவு பெருகவருந் திருத்தொண்டர் பாற்சார்ந்தார். உகூ

"ஐயரே ! அம்பலவர் அருளாலிப் பொழுதணைந்தோம்
வெய்யஅழல் அமைத்துமக்குத் தரவேண்டி" எனவிளம்ப
மையுமனத் திருத்தொண்டர் "நான்உய்ந்தேன்" எனத்தொழுதார்
தெய்வமறை முனிவர்களும் தீயமைத்த படிமொழிந்தார். ௩௦

மறையவர்கள் மொழிந்ததற்பின் தென்திசையின் மதிற்புறத்துப்
பிறையுரிஞ்சுந் திருவாயின் முன்னாகப் பிஞ்ஞகர்தம்
நிறையருளால் மறையவர்கள் நெருப்பமைத்த குழியெய்தி
இறையவர்தாள் மனங்கோண்டே எரிசூழ வலங்கொண்டார்.

கைதொழுது நடமாடுங் கழலுன்னி அழல்புக்கார்
எய்தியஅப் பொழுதின்கண் எரியின்கண் இம்மாயப்
போய்தகையும் உருவோழித்துப் புண்ணியமா முனிவடிவாய்
மெய்திகழ்வெண் நூல்விளங்க வேணிமுடி கொண்டெழுந்தார்.

செந்தீமேல் எழும்பொழுது செம்மலர்மேல் வந்தெழுந்த
அந்தணன்போல் தோன்றினார் அந்தரதுந் துபிநாதம்
வந்தெழுந்த திருவிசும்பில் வானவர்கள் மகிழ்ந்தார்த்துப்
பைந்துணர்மந் தாரத்தின் பனிமலர்மா ரிகள்பொழிந்தார்.

திருவுடைய தில்லைவா ழந்தணர்கள் கைதொழுதார்
பரவரிய தொண்டர்களும் பணிந்துமனம் களிபயின்றார்
அருமறைசூழ் திருமன்றில் ஆடுகின்ற கழல்வணங்க
வருகின்றார் திருநாளைப் போவாராம் மறைமுனிவர். ௩௪

தில்லைவாழ் அந்தணரும் உடன்செல்லச் சென்றெய்திக்
கொல்லைமான் மறிக்கரத்தார் கோபுரத்தைத்தொழுதிறைஞ்சி
ஒல்லைபோய் உள்புகுந்தார் உலகுய்ய நடமாடும்
எல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களுங் கண்டிலரால். ௩௫

அந்தணர்கள் அதிசயித்தார் அருமுனிவர் துதிசெய்தார்
வந்தணைந்த திருத்தொண்டர் தம்மைவினை மாசறுத்துச்
சுந்தரத்தா மரைபுரையுந் துணையடிகள் தொழுதிருக்க
அந்தமிலா ஆனந்தப் பெருங்கூத்தர் அருள்புரிந்தார். ௩௬

மாசடம்பு விடத்தீயின் மஞ்சனஞ்செய் தருளியெழுந்
தாசில்மறை முனியாகி அம்பலவர் தாளடைந்தார்
தேசுடைய கழல்வாழ்த்தித் திருக்குறிப்புத்தொண்டர்வினைப்
பாசமற முயன்றவர்தம் திருத்தொண்டின் பரிசுரைப்பாம்.

# உரு. திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணம்



ஏயு மாறுபல் லுயிர்களுக் கெல்லையில் கருணைத்
தாய னாள்தனி யாயின தலைவரைத் தழுவ
ஆயு நான்மறை போற்றநின் றருந்தவம் புரியத்
தூய மாதவம் செய்தது தொண்டைநன் னாடு. க

நன்மை நீடிய நடுநிலை ஒழுக்கத்து நயந்த
தன்மை மேவிய தலைமைசால் பெருங்குடி தழைப்ப
வன்மை ஓங்கெயில் வளம்பதி பயின்றது வரம்பின்
தொன்மை மேன்மையில் நிகழ்பெருந் தொண்டைநன் னாடு. உ

நற்றி றம்புரி பழையனூர்ச் சிறுத்தொண்டர் நவைவந்
துற்ற போதுதம் உயிரையும் வணிகனுக் கொருகால்
சொற்ற மெய்ம்மையுந் தூக்கிஅச் சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மையில் நிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு. ௩

ஆனை யாமென நீறுகண் டடிச்சேரன் என்னும்
சேணு லாவுசீர்ச் சேரனார் திருமலை நாட்டு
வாணி லாவுபூண் வயவர்கள் மைத்துனக் கேண்மை
பேண நீடிய முறையது பெருந்தொண்டை நாடு. ௪

கறைவி ளங்கிய கண்டர்பாற் காதல்செய் முறைமை
நிறைபு ரிந்திட நேரிழை அறம்புரிந் ததனால்
பிறையு ரிஞ்செயிற் பதியயில் பெருந்தொண்டை நாடு
முறைமை யாமென உலகினில் மிகுமொழி உடைத்தால். ரு

தூவில் செம்மணி அருவியா றிழிவன சாரல்
பூவில் வண்டினம் புதுநற வருந்துவ புறவம்
வாவி நீள்கயல் வரம்பிற உகைப்பன மருதம்
நீவி நித்திலம் பரத்தியர் உணக்குவ நெய்தல். ௬

குறவர் பன்மணி அரித்திதை விதைப்பன குறிஞ்சி
கறவை ஆன்நிரை மானுடன் பயில்வன கானம்
பறவை தாமரை யிருக்கிற வருந்துவ பழனம்
சுறவ முன்மருப் பணங்கயர் வனகழிச் சூழல். ௭

கொண்டல் வானத்தின் மணிசொரி வனகுல வரைப்பால்
தண்து ணர்க்கொன்றை பொன்சொரி வனதள வயற்பால்
வண்டல் முத்தநீர் மண்டுகால் சொரிவன வயற்பால்
கண்டல் முன்துறைக் கரிசொரி வனகலங் கடற்பால். ௮

தேனி றைந்தசெந் தினையிடி தருமலைச் சீறூர்
பானி றைந்தபுற் பதத்தன முல்லையின் பாடி
தூநெ லன்னம்நெய் கன்னலின் கனியதண் டுறையூர்
மீனி றைந்தபே ருணவின வேலைவைப் பிடங்கள். ௯

குழல்செய் வண்டினங் குறிஞ்சியாழ் முரல்வன குறிஞ்சி
முழவு கார்கொள முல்லைகள் முகைப்பன முல்லை
மழலை மென்கிளி மருதமர் சேக்கைய மருதம்
நிழல்செய் கைதைசூழ் நெய்தலங் கழியன நெய்தல். ௧௦

மல்கு மப்பெரு நிலங்களில் வரைபுணர் குறிஞ்சி
எல்லை எங்கணும் இறவுளர் ஏனல்முன் விளைக்கும்
பல்பெ ரும்புனம் பயில்வன படர்சிறைத் தோகை
சொல்லு மப்புனங் காப்பவுஞ் சுரிகுழல் தோகை. ௧௧

அங்கண் வான்மிசை அரம்பையர் கருங்குழற் சுரும்பு
பொங்கு பூண்முலைக் கொடிச்சியர் குழல்மூழ்கிப் போகாச்
செங்கண் மால்விடை யார்திருக் காளத்தி என்னும்
மங்குல் சூழ்வரை நிலவிய வாழ்வினால் மல்கும். ௧௨

பேறு வேறுசூழ் இமையவர் அரம்பையர் பிறந்து
மாறில் வேடரும் மாதரு மாகவே வணங்கும்

ஆறு சூழ்சடை அண்ணலார் திருவிடைச் சுரமும்
கூறு மேன்மையின் மிக்கதந் நாட்டுவண் குறிஞ்சி. கங

அம்பொன் வார்குழற் கொடிச்சிய ருடனர மகளிர்
வம்பு லாமலர்ச் சுனைபடிந் தாடுநீள் வரைப்பின்
உம்பர் நாயகர் திருக்கழுக் குன்றமும் உடைத்தால்
கொம்பர் வண்டுசூழ் குறிஞ்சிசெய் தவங்குறை உளதோ. கச

கோல முல்லையும் குறிஞ்சியும் அடுத்தசில் இடங்கள்
நீல வாட்படை நீலிகோட் டங்களும் நிரந்து
கால வேனிலிற் கடும்பகற் பொழுதினைப் பற்றிப்
பாலை யுஞ்சொல லாவன வுளபரல் முரம்பு. கரு

சோல்லும் எல்லையின் புறத்தன துணர்ச்சுரும் பலைக்கும்
பல்பெ ரும்புனற் கானியா றிடையிடை பரந்து
கொல்லை மெல்லிணர்க் குருந்தின்மேற் படர்ந்தபூம் பந்தர்
முல்லை மென்புதல் முயலுகைத் தடங்குநீள் முல்லை. கசூ

பிளவு கொண்டதன் மதிநுதற் பேதையர் எயிற்றைக்
களவு கொண்டது தளவெனக் களவலர் தூற்றும்
அளவு கண்டவர் குழல்நிறங் கனியுமக் களவைத்
தளவு கண்டெதிர் சிரிப்பன தமக்குமுண் டென்று. கஎ

மங்கை யர்க்குவாள் விழியிணை தோற்றமான் குலங்கள்
எங்கும் மற்றவ ரிடைக்கிடை மலர்க்கொடி எங்கும்
அங்கண் முல்லையின் தெய்வமென் றருந்தமிழ் உரைக்கும்
செங்கண் மால்தொழுஞ் சிவன்மகிழ் திருமுல்லை வாயில். கஅ

நீறு சேர்திரு மேனியர் நிலாத்திகழ் முடிமேல்
மாறில் கங்கைதான் அவர்க்குமஞ் சனந்தர அணைந்தே
ஊறு நீர்தரும் ஓலிமலர்க் கலிகைமா நகரை
வேறு தன்பெரு வைப்பென விளங்குமா முல்லை. ககூ

வாச மென்மலர் மல்கிய முல்லைசூழ் மருதம்
வீசு தெண்டிரை நதிபல மிக்குயர்ந் தோடிப்
பாச டைத்தடம் தாமரைப் பழனங்கள் மருங்கும்
பூசல் வன்கரைக் குளங்களும் ஏரியும் புகுவ. உ௦

துங்க மாதவன் சுரபியின் திருமுலை சோரிபால்
பொங்கு தீர்த்தமாய் நந்திமால் வரைமிசைப் போந்தே
அங்கண் நித்திலம் சந்தனம் அகிலொடு மணிகள்
பங்க யத்தடம் நிறைப்பவந் திழிவது பாலி. உக

பிள்ளை தைவரப் பெருகுபால் சோரிமுலைத் தாய்போல்
மள்ளர் வேனிலின் மணல்திடர் பிசைந்துகை வருட
வெள்ள நீரிரு மருங்குகால் வழிமிதந் தேறிப்
பள்ள நீள்வயல் பருமடை உடைப்பது பாலி. உஉ

அணைய வாகிய நதிபரந் தகன்பணை மருங்கில்
கணைநெ டும்புனல் நிறைந்துதிண் கரைப்பெருங் குளங்கள்
புணையி ருங்கடி மதகுவாய் திறந்திடப் புறம்போய்
வினைஞ ரார்ப்பொலி எடுப்பநீர் வழங்குவ வியன்கால். உங

மாறில் வண்பகட் டேர்பல நெருங்கிட வயல்கள்
சேறு செய்பவர் செந்நெலின் வெண்முளை சிதறி
நாறு வார்ப்பவர் பறிப்பவர் நடுபவ ராகி
வேறு பல்வினை யுடைப்பெரும் கம்பலை மிகுமால். உச

வருப்பு னற்பெருங் கால்களை மறித்திட வாளை
பெருங்கு லைப்பட விலங்குவ பிறங்குநீர்ப் பழனம்
நெருங்கு சேற்குல முயர்த்துவ நீள்கரைப் படுத்துச்
சுருங்கை நீர்வழக் கறுப்பன பருவரால் தொகுதி. உரு

தலைத்த டம்பணை எழுந்தசெந் தாமரைத் தவிசின்
இலைத்த சூல்வளை கண்படுப் பனஇடை எங்கும்
விளைத்த பாசொளி விளங்குநீள் விசும்பிடை ஊர்கோள்
வளைத்த மாமதி போன்றுள மருதநீர் வைப்பு. உசு

ஓங்கு செந்நெலின் புடையன உயர்கழைக் கரும்பு
பூங்க ரும்பயல் மிடைவன பூகமப் பூகப்
பாங்கு நீள்குலைத் தெங்குபைங் கதலிவண் பலவு
தூங்கு தீங்கனிச் சூதநீள் வேலிய சோலை. உஎ

நீடு தண்பணை உடுத்தநீள் மருங்கினை நெல்லின்
கூடு துன்றிய இருக்கைய விருந்தெதிர் கொள்ளும்

நீடு தங்கிய பெருங்குடி மனையறம் பிறங்கும்
மாடம் ஓங்கிய மறுகன மல்லல்மூ தூர்கள். ௨௮

தொல்லை நான்மறை முதற்பெருங் கலையொலி துவன்றி
இல்ல றம்புரிந் தாகுதி வேள்வியில் எழுந்த
மல்கு தண்புகை மழைதரு முகிற்குலம் பரப்பும்
செல்வ மோங்கிய திருமறை யவர்செழும் பதிகள். ௨௯

தீது நீங்கிடத் தீக்கலி யாமவு ணற்கு
நாதர் தாமருள் புரிந்தது நல்வினைப் பயன்செய்
மாதர் தோன்றிய மரபுடை மறையவர் வல்லம்
பூதி சாதனம் போற்றிய பொற்பினால் விளங்கும். ௩௰

அருவி தந்தசெம் மணிகளும் புறவில்ஆய் மலரும்
பருமி ஓடைகள் நிறைந்திழி பாலியின் கரையின்
மருவு கங்கைவாழ் சடையவர் மகிழ்ந்தமாற் பேறும்
பொருவில் கோயிலும் சூழ்ந்ததப் பூம்பணை மருதம். ௩௧

விரும்பு மேன்மையென் பகர்வது விரிதிரை நதிகள்
அருங்க ரைப்பயில் சிவாலய மனேகமு மணைந்து
பருங்கை யானையை உரித்தவர் இருந்தவப் பாசூர்
மருங்கு சூழ்தவம் புரிந்ததன் றேமற்ற மருதம். ௩௨

பூம ரும்புனல் வயற்களம் பாடிய பொருநர்
தாம ருங்கிளை யுடன்தட மென்மலர் மிலைந்து
மாம ருங்குதண் ணீழலின் மருதயாழ் முரலும்
காமர் தண்பணைப் புறத்தது கருங்கழி நெய்தல். ௩௩

தூய வெண்டுறைப் பரதவர் தொடுப்பன வலைகள்
சேய நீள்விழிப் பரத்தியர் தொடுப்பன செருந்தி
ஆய பேரளத் தளவர்கள் அளப்பன உப்பு
சாயல் மெல்லிடை அளத்தியர் அளப்பன தரளம். ௩௪

கோடுவி னைத்தொழில் நுளையர்கள் கொடுப்பன கொழுமீன்
படும ணற்கரை நுளைச்சியர் கொடுப்பன பவளம்
தொடுக டற்சங்கு துறையவர் குளிப்பன அவர்தம்
வடுவ கிர்க்கண்மங் கையர்குளிப் பனமணற் கேணி. ௩௫

சுழிப்பு னற்கடல் ஓதமுன் சூழ்ந்துகொண் டணிய
வழிக்க ரைப்பொதிப் பொன்னவிழ்ப் பனமலர்ப் புன்னை
விழிக்கு நெய்தலின் விரைமலர்க் கட்சுரும் புண்ணக்
கழிக்க ரைப்பொதி சோறவிழ்ப் பனமடற் கைதை. ௩௬

காயல் வண்கரைப் புரைநெறி அடைப்பன கனிமுள்
சேய தண்ணறுஞ் செழுமுகை செறியுமுண் டகங்கள்
ஆய நுண்மணல் வெண்மையை மறைப்பன அன்னம்
தாய முன்றுறைச் சூழல்சூழ் ஞாழலின் தாது. ௩௭

வாம்பெ ருந்திரை வளாகமுன் குடிபயில் வரைப்பில்
தாம்ப ரப்பிய கயல்களின் விழிக்கயல் தவிரக்
காம்பி னேர்வருந் தோளியர் கழிக்கயல் விலைசெய்
தேம்பொ திந்தசின் மழலைமென் மொழியசெவ் வழியாழ்.

மருட்கொ டுந்தொழில் மன்னவன் இறக்கிய வரியை
நெருக்கி முன்திரு வொற்றியூர் நீங்கவென் றெழுதும்
ஒருத்தர் தம்பெருங் கோயிலின் ஒருபுறஞ் சூழ்ந்த
திருப்ப ரப்பையும் உடையதத் திரைக்கடல் வரைப்பு. ௩௯

மெய்த ரும்புகழ்த் திருமயி லாபுரி விரைசூழ்
மொய்த யங்குதண் பொழில்திரு வான்மியூர் முதலாப்
பைத ரும்பணி அணிந்தவர் பதியெனைப் பலவால்
நெய்த லெய்தமுன் செய்தஅந் நிறைதவம் சிறிதோ. ௪௦

கோடு கொண்டெழும் திரைக்கடற் பவளமென் கொழுந்து
மாடு மொய்வரைச் சந்தனச் சினைமிசை வளரும்
நீடு நெய்தலும் குறிஞ்சியும் புணர்நிலம் பலவால்
ஆடு நீள்கொடி மாடமா மல்லையே அனைய. ௪௧

மலைவி ழிப்பன எனவயற் சேல்வரைப் பாறைத்
தலையு கைப்பவும் தளைச்செறு விடைநெடுங் கருமான்
கலைகு திப்பன கரும்பகட் டேர்நிகர்ப் பவுமாய்
அலைபு னற்பணை குறிஞ்சியோ டணைவன அநேகம். ௪௨

புணர்ந்த ஆனிரைப் புறவிடைக் குறுமுயல் பொருப்பின்
அணைந்த வான்மதி முயலினை இனமென அணைந்து

மணங்கொள் கொல்லையில் வரகுபோர் மஞ்சன வரைக்கார்
இணைந்து முல்லையுங் குறிஞ்சியுங் கலப்பன எங்கும். ௪௩

கவரும் மீன்குவை கழியவர் கானவர்க் களித்துச்
சிவலும் சேவலும் மாறியும் சிறுகழிச் சியர்கள்
அவரை ஏனலுக் கெயிற்றியர் பவளமுத் தளந்தும்
உவரி நெய்தலும் கானமும் கலந்துள ஒழுக்கம். ௪௪

அயல் நறும்புற வினிலிடைச் சியரணி எயையும்
வியன் நெடும்பணை உழத்தியர் சாயலும் விரும்பி
இயலும் அன்னமும் தோகையும் எதிரெதிர் பயில
வயலும் முல்லையும் இயைவன பலவுள மருங்கு. ௪௫

மீளும் ஓதமுன் கொழித்தவெண் தரளமும் கமுகின்
பாளை உக்கவும் விரவலிற் பரத்தியர் பணைமென்
தோளு ழத்தியர் மகளிர்பா ருடிமுன் தொகுக்கும்
நீளு நெய்தலும் மருதமும் கலந்துள நிலங்கள். ௪௬

ஆய நானிலத் தமைதியில் தத்தமக் கடுத்த
மேய செய்தொழில் வேறுபல் குலங்களின் விளங்கித்
தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத்
தூய மாந்தர்வாழ் தொண்டைநாட் டியல்புசோல் வரைத்தோ.

இவ்வ ளந்தரு பெருந்திரு நாட்டிடை என்றும்
மெய்வ ளந்தரு சிறப்பினால் உலகெலாம் வியப்ப
எவ்வு கங்களும் உள்ளதென் றியாவரும் ஏத்தும்
கைவி ளங்கிய நிலையது காஞ்சிமா நகரம். ௪௮

ஆன தொல்நகர் அம்பிகை தம்பெரு மானை
மான அர்ச்சனை யாலொரு காலத்து வழிபட்
டூன மில்லறம் அனேகமும் உலகுய்ய வைத்த
மேன்மை பூண்டஅப் பெருமையை அறிந்தவா விளம்பில்.

வெள்ளி மால்வரைக் கயிலையில் வீற்றிருந் தருளித்
துள்ளு வார்புனல் வேணியார் அருள்செயத் தொழுது
தெள்ளு வாய்மையின் ஆகமத் திறனெலாந் தெரிய
உள்ள வாறுகேட் டருளினள் உலகைஆ ளுடையாள். ௫௦

எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை எனவுரைத் தருள
அண்ண லார்தமை அர்ச்சனை புரியஆ தரித்தாள்
பெண்ணின் நல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து. ருக

நங்கை உள்நிறை காதலை நோக்கி நாயகன் திரு உள்ளத்து மகிழ்ந்தே, அங்கண் எய்திய முறுவலுந் தோன்ற "அடுத்த தென்கொல்நின் பால்"என வினவ, "இங்கு நாதநீ மொழிந்தஆ கமத்தின் இயல்பி னாலுனை அர்ச்சனை புரியப், பொங்கு கின்றதென் ஆசை"என் றிறைஞ்சிப் போக மார்த்தபூண் முலையினாள் போற்ற. ருஉ

தேவ தேவனும் அதுதிரு வுள்ளஞ் செய்து "தென் திசை மிக்கசெய் தவத்தால், யாவ ருந்தனை அடைவது மண் மேல் என்றும் உள்ளது காஞ்சிமற் றதனுள், மாவ மர்ந்தநம் இருக்கையில் அணைந்து மன்னு பூசனை மகிழ்ந்துசெய் வாய்" என், றேவ எம்பெரு மாட்டியும் பிரியா இசைவு கொண்டெழுந் தருளுதற் கிசைந்தாள். ருந

ஏத மில்பல யோனியெண் பத்து நான்குநூ றாயி ரத்தினுள் வைத்த, பேத மும்புரந் தருளுமக் கருணைப் பிரான் மொழிந்தஆ கமவழி பேணிப், போது நீர்மையில் தொழுதனள் போதப் பொருப்பில் வேந்தனும் விருப்பில்வந் தெய்தி, மாத வம்புரிந் தருளுதற் கமைந்த வளத்தொ டும்பரி சனங்களை விடுத்தான். ருச

துன்னு பல்லுயிர் வானவர் முதலாச் சூழ்ந்து டன்செலக் காஞ்சியில் அணையத், தன்னை நேர்வரும் பதுமமா நாகம் தம்பி ராட்டிதாள் தலைமிசை வைத்தே, "அன்னை யாயுல கனைத்தையும் ஈன்றாய் அடியனேன்உறை பிலமத னிடையே, மன்னு கோயில்கொண் டருளுவாய்" என்ன மலைம டந்தைமற் றதற்கருள் புரிந்து. ருரு

அங்கு மண்ணுல கத்துயிர் தழைப்ப அளவில் இன்பத்தி னருட்கரு விருத்தித், திங்கள் தங்கிய புரிசடை யார்க்குத்

திருந்து பூசனை விரும்பினள் செய்ய, எங்கும் நாடவுந் திரு விளை யாட்டால் ஏக மாமுதல் எதிர்ப்படா தொழியப், பொங்கு மாதவஞ் செய்துகாண் பதற்கே புரிவு செய்தனள் பொன்மலை வல்லி. ருக

நேஞ்சம் ஈசனைக் காண்பதே விரும்பி நிரந்த ரந்திரு வாக்கினில் நிகழ்வ, தஞ்செ முத்துமே ஆகஆ ஞடைய அம்மை செம்மலர்க் கைகுவித் தருளித், தஞ்ச மாகிய அருந் தவம் புரியத் தரிப்ப ரேஅவள் தனிப்பெருங் கணவர், வஞ் சம் நீக்கிய மாவின்மூ லத்தில் வந்து தோன்றினர் மலைமகள் காண. ருஎ

கண்ட போதிலப் பெருந்தவப் பயனும் கம்பம் மேவிய தம்பெரு மானை, வண்டு லாங்குழற் கற்றைமுன் தாழ வணங்கி வந்தெழும் ஆசைமுன் பொங்கக், கொண்ட காதலின் விருப் பள வின்றிக் குறித்த பூசனை கொள்கைமேற் கொண்டு, தொண்டை யங்கனி வாயுமை நங்கை தூய அர்ச்சனை தொடங் குதல் புரிவாள். ருஅ

உம்பர் நாயகர் பூசனைக் கவர்தாம் உரைத்த ஆகமத் துண்மைமே தலைநின், றெம்பி ராட்டியர்ச் சனைபுரி வதனுக் கியல்பில் வாழ்திருச் சேடிய ரான, கொம்ப ஞர்கள்பூம் பிடகைகொண் டணையக் குலவு மென்தளி ரடியிணை ஒதுங்கி, அம்பி காவன மாந்திரு வனத்தி லான தூநறும் புதுமலர் கொய்தாள். ருகூ

கோய்த பன்மலர் கம்பைமா நதியில் குலவு மஞ்சனம் நிலவுமெய்ப் பூச்சு, செய்த ருங்கொழுந் தூபதீ பங்கள் நிறைந்த சிந்தையில் நீடிய அன்பின், மெய்தரும்படி வேண் டின எல்லாம் வேண்டும் போதினில் உதவமெய்ப் பூசை, எய்த ஆகம விதியெலாஞ் செய்தாள் உயிர்கள் யாவையும் ஈன்றஎம் பிராட்டி. ௬௦

கரந்த ரும்பயன் இதுவென உணர்ந்து கம்பம் மேவிய உம்பர்நா யகர்பால், நிரந்த காதல்செய் உள்ளத்த ளாகி நீடு

நன்மைகள் யாவையும் பெருக, வரந்த ரும்பொரு ளாம்மலை வல்லி மாறி லாவகை மலர்ந்தபே ரன்பால், சிரம்ப ணிந்தெழு பூசைநாள் தோறும் திருவு ளங்கொளப் பெருகிய தன்றே. கூக

நாத ரும்பெரு விருப்பொடு நயந்து நங்கை யர்ச்சனை செய்யுமப் பொழுதில், காதல் மிக்கவோர் திருவிளை யாட்டில் கனங்குழைக்கருள் புரிந்திட வேண்டி, ஓத மார்கடல் ஏழுமொன் ருகி ஓங்கி வானமும் உட்படப் பரந்து, மீது செல்வது போல்வரக் கம்பை வெள்ள மாந்திரு வுள்ளமுஞ் செய்தார். கூஉ

அண்ண லாரருள் வெள்ளத்தை நோக்கி அங்க யற்கண்ணி தம்பெரு மான்மேல், விண்ணி லாங்கொள வரும்பெரு வெள்ளம் மீதுவந்துறு மேனவேருக் கொண்டே, உள்நிலாவிய பதைப்புறு காத லுடன்தி ருக்கையால் தடுத்தும்நில் லாமை, தண்ணி லாமலர் வேணியி னுரைத் தழுவிக் கொண் டனள் தன்னையே ஒப்பாள். கூ௩

மலைக்கு லக்கொடி பரிவுறு பயத்தால் மாவின் மேவிய தேவநா யகரை, முலைக்கு வட்டோடு வளைக்கையால் நெருக்கி முறுகு காதலால் இறுகிடத் தழுவச், சிலைத்த னிக்கிரு நுதல்திரு முலைக்கும் செந்த ளிர்க்கரங் களுக்குமெத் தெனவே, கொலைக்க ளிற்றுரி புனைந்ததம் மேனி குழைந்து காட்டினர் விழைந்தகொள் கையினர். கூச

கம்பர் காதலி தழுவமெய் குழையக் கண்டு நிற்பவுஞ் சரிப்பவு மான, உம்ப ரேமுதல் யோனிகள் எல்லாம் உயிரும் யாக்கையு முருகியொன் ருகி, "எம்பி ராட்டிக்கு மெல்லிய ராஞர் என்றும் ஏகம்பர்" என்றெடுத் தேத்த, வட்பு லாமலர் நிறையவிண் பொழியக் கம்பை யாறுமுன் வணங்கிய தன்றே. கூரு

யாகிய புனிதநீ ருடிப் பொங்கு கங்கைதோய் முடிச்சடை புனைந்து, காதில் வெண்குழை கண்டிகை தாழக்

கலந்த யோகத்தின் மருவிய கருத்தால், ஆதி தேவனு ராயுமா தவஞ்செய் அவ்வ ரங்கொலோ அகிலமீன் றளித்த, மாது மெய்ப்பயன் கொடுப்பவே கொண்டு வளர்த்த மும்புடன் முலைச்சுவ டணிந்தார். கூகூ

கோதி லாஅமு தனையவள் முலைக்குக் குழைந்த தம் மணவாளநற் கோலம், மாது வாழவே காட்டிமுன் நின்று "வரங்கள் வேண்டுவ கொள்க" என் றருள, வேத காரண ராயஏ கம்பர் விரைமல ர்ச்செய்ய தாமரைக் கழற்கீழ், ஏதம் நீங்கிய பூசனை முடிந்த தின்மை தானறி விப்பதற் கிறைஞ்சி.

அண்டர் நாயகர் எதிர்நின்று கூறும் அளவி னுலஞ்சி அஞ்சலி கூப்பிக், "கொண்ட இறைவன் பூசனை இன்னும் குறைநி ரம்பிடக் கொள்க" என் றருள, வண்டு வார்குழல் மலைமகள் கமல வதனம் நோக்கிஅம் மலர்க்கண்நெற் றியின் மேல், முண்ட நீற்றர் "நின் பூசனை என்றும் முடிவ தில்லை நம பாலென மொழிய. கூஅ

"மாறி லாதஇப் பூசனை என்றும் மன்ன எம்பிரான் மகிழ்ந்துகொண் டருளி, ஈறி லாதஇப் பதியினுள் எல்லா அறமும் யான்செய அருள்செய வேண்டும், வேறு செய் வினை திருவடிப் பிழைத்தல் ஒழிய இங்குளார் வேண்டின செயினும், பேறு மாதவப் பயன்கொடுத் தருளப் பெறவும் வேண்டும்" என் றனள்பிறப் பொழிப்பாள். கூகூ

விடையின் மேலவர் மலைமகள் வேண்ட விரும்பு பூசனை மேவிவீற் றிருந்தே, இடைய றுஅறம் வளர்க்கும்வித் தாக இகப ரத்திரு நாழிநெல் அளித்துக், கடைய ராகியும் உயர்ந்த வராயும் காஞ்சி வாழ்பவர் தாஞ்செய்தீ வினையும், தடைப டாதுமெய்ந் நெறியடை வதற்காந் தவங்க ளாகவும் உவந்தருள் செய்தார். எ0

எண்ண ரும்பெரு வரங்கள்முன் பெற்றங் கெம்பி ராட்டிதம் பிரான்மகிழ்ந் தருள, மண்ணின் மேல்வழி பாடு செய் தருளி மனைய றம்பெருக் குங்கரு ணையினால், நண்ணும்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன் மலர்சிலம்படி நீழலெய்திய திருத்தொண்டர்கள் வரலாற்றை விளக்கும் இத்தெய்வத் தமிழ் நூல் நமது சமாஜத்தின் முதற்பதிப்பாக மூன்றாண்டுகட்கு முன்னர் வெளியிடப்பெற்று நாளடைவில் விற்று முதல் செய்யப்பட்டு வந்தது. சில மாதங்களாக இப்பதிப்பை விரும்பி வாங்குவோருக்கு விலைக்குத் தரப் பிரதிகளின் எண்ணிக்கை அருகிவிட்டபடியாலும், தமிழ் நாட்டுப் பேரறிஞர்களும் சைவசீலர்களும் நமது சமாஜத்தின் பதிப்புக்களாகப் பன்னிருதிருமுறைகளும் எஞ்ஞான்றும் கிடைத்தற்குரியனவாக இருத்தல் வேண்டுமென்று பொது வாகக் கட்டளையிட்டுள்ளபடியாலும் இவ்விரண்டாம் பதிப்பு மிக விரைவாக அச்சிடப்பெற்றுச் சமாஜ முப்பத்திரண்டாம் ஆண்டு நிறைவிழாவின் தொடக்கத் திருத்தொண்டாக இராய வேலூரில் இன்று பொற்புடன் நடஞ் செய்கின்ற பூங்கழற் காணிக்கையாகச் சமர்ப்பிக்கப் பெறுகின்றது.

இப்பதிப்பு அச்சியற்றப் பெற்றபோது, அச்சுத் தாள்களைப் பல பிரதிகளோடு கூர்ந்து நோக்கி ஒப்பிட்டுப் பிழைகளைத் திருத்தி யுபகரித்தவர்கள் திருவாளர்கள் திரு. வி. உலகநாத முதலியாரவர்களும் மா. துரைசாமி முதலியாரவர்களுமாவார்கள். இவர்களுட் பின்னையவர் பெரிய புராண யாப்பாராய்ச்சிக் குறிப்புகளையும் திரட்டித் தந்தனர். இவ்விரு

பெரியார்கட்கும், இப்பதிப்பை மிக விரைவில் மிகச் செம்மையாக அச்சிட்டு முடித்த சாது அச்சுக்கூடத்தினருக்கும் நமது சமாஜம் மனமார்ந்த நன்றி செலுத்துகின்றது.

இப்பதிப்பைக் கண்குளிரக் காணும் புண்ணிய சீலர்கள், சமாஜ இரண்டாம் பதிப்புக்களாக வெளிவருதற்குரிய அ, கூ, க0, கக-ம் திருமுறைகட்கு முன்பணம் உதவி அவைகளை வெளியிடத் துணைபுரிவார்களாக. இப்பதிப்பை இடையறாது பயின்றுருகித் திளைத்து என்றும் இன்பம் பெறுகுக உலகெலாம்.

இராயவேலூர்
ஈசுவர௵ மார்கழி௴ கரு௳
29—12—1937.

இங்ஙனம்
ம. பாலசுப்பிரமணியன்
காரியதரிசி
சைவசித்தாந்த மகாசமாஜம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சேக்கிழார் சுவாமிகள் வரலாறு*

தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னற்சொல வல்ல பிரானெங்கள்
பாக்கி யப்பய னப்பதி குன்றைவாழ்
சேக்கி ழானடி சென்னி இருத்துவாம்.

—சிவஞான சுவாமிகள்.

உலகினில் ஒழுக்கம் என்றும் உயர்பெருந் தொண்டை நாட்டு நலமிகு சிறப்பின் மிக்க குன்றத்தூரிலே, தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத்தூய வேளாளர் குலத்துச் சேக்கிழார் குடியிலே அருண்மொழித்தேவர் என்ற சேக்கிழார் சுவாமிகள் இற்றைக்கு ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் திருவவதாரம் செய்தார்கள். இளமையிலேயே கல்வி அறிவு ஒழுக்கங்களிற் றலைசிறந்து விளங்கிய இவரை, அந் நாளில் அரசு புரிந்த அநபாயன், அபயன், திருநீற்றுச் சோழன் முதலிய கீர்த்திப் பெயர்களையுடைய இரண்டாம் குலோத்துங்கசோழன் தனது முதல் மந்திரியாக்கி இவருக்கு உத்தமசோழப்பல்லவன் என்ற பட்டத்தையும் பெரும் பொருளையும் கொடுத்தான்.

---

*இது திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி. ஏ., பி. எல். அவர்களால் எழுதப்பெற்றது.

சேக்கிழார் தமது அமைச்சுப் பணியை மிகத் திறமை யாகவும் நிரம்பிய கருணையோடும் நடாத்தி வந்தார்; சீவக சிந்தாமணி என்ற சமண காவியத்தில் அளவு கடந்து ஈடு பட்டிருந்த அரசனுக்குச் சிவனடியார்களின் பெருமையை எடுத்துக் கூறினர். அரசன் அவ்வடியார்கள் வரலாற்றை யறிய விரும்பினன். சேக்கிழார், அவனது வேண்டுகோளுக் கிரங்கித் தில்லைமாநகரடைந்தார்; அம்பலவன் "உலகெலாம்" என்று அடி எடுத்துத் தரத் "திருத்தொண்டர் புராணத் தை"ப் பதின்மூன்று சருக்கங்களாக, சஉருக பாடல்களிற் பாடி முடித்தனர்.

அரசன் தில்லையை யடைந்து பேரவை கூட்டி ஓராண்டு முழுமையும் இந்நூலைச் செவியினுற் பருகி அரங்கேற்று வித்தான். இறுதியில் சேக்கிழார் சுவாமிகளையும் திருத் தொண்டர் புராணத்தையும் யானைமீதேற்றித் தானும் பின் னிருந்து கவரிவீசி ஊர்வலமாக வந்து வணங்கினன். இந் நூலைப் பன்னிரண்டாந் திருமுறையாக வகுத்துச் சேக் கிழாருக்குத் தொண்டர் சீர்பரவுவார் என்ற பட்டத்தையு மளித்தான். சேக்கிழார் தில்லையிலேயே தவம் புரிந்து இனித்தமுடைய எடுத்த பொற்பாத நீழலடைந்தார்.

அரசன், பாலறுவாயர் என்ற சேக்கிழார் தம்பி யாருக்கு அமைச்சுரிமை வழங்கித் தொண்டைமான் என்ற பட்டத்தையுந் தந்தான். சேக்கிழார் வரலாற்றை இந்நூலி னிறுதியிலுள்ள சேக்கிழார் புராணத்திற் பரக்கக் காணலாம்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உள்ளுறை

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அரும்பொருளகராதி

ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி. ஏ., பி. எல்.

தொகுத்தது.

இவ்வகராதியிற் பற்பல அரும்பொருள்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. சிலவற்றிற்கு எல்லாக் குறிப்புக்களும், ஏனையவற்றிற்கு எடுத்துக் காட்டுக்களாகச் சில குறிப்புக்களும் தரப்பட்டுள்ளன. இவ்வகராதியைத் தொகுத்ததின் நோக்கம்,அன்பர்களைப் புராணம் முழுவதையும் பலமுறை படித்துணர ஊக்குவிப்பதற்கே யன்றிப் புராணத்தைப் பயிலாமலே அதிற் காணப்படும் செம்பொருள்களை அறிய வசதி யளிப்பதற்கன்று. இதை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொருவரும் ஆராய்ச்சி செய்து இவ்வகராதியைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். இவ்வகராதியில் ஒவ்வொரு குறிப்பிற்கும் இரண்டு எண்கள் தரப்பட்டுள்ளன. இவற்றுள் முதலாவது எண் புராண எண்; இரண்டாவதெண் பாட்டெண். உதாரணமாக "அகச்சமயம் ஆறு" என்ற தலைப்புள்ள குறிப்பின் இறுதியில் 34. 1203 என்று எண்ணிடப்பட்டுள்ளது. இதன் பொருள் 34-வது எண்ணுள்ள திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராணத்துள் 1203-வது செய்யுளில் "அறுவகை விளங்குஞ் சைவத் தளவிலா......தவத்தினுள்ளோர்" என்ற சொற்றொடர் அமைந்துள்ளது என்பதாகும். இவ்வாறே எல்லாவற்றிற்கும் கொள்க. இவ்வகராதியிலுள்ள குற்றங்குறைகளையும் இதில் இன்றியமையாது சேர்க்கப்படல் வேண்டும் என்று கருதப்படுபவைகளையும் அறிஞர்கள் தெரிவிப்பின் அடுத்த பதிப்புக்குதவியா யிருக்கும்.

### அகச்சமயம் ஆறு

*அறுவகை விளங்கும் சைவத் தளவிலா விரதஞ் சாரும் நெறி வழி நின்ற வேடம் நீடிய தவத்தினுள்ளோர்*...34. 1203.

### அசரீரி வாக்கெழுந்த சந்தர்ப்பங்கள்

*சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாற்றில்* 6. 108, 118, 127, *எறி பத்தர்* 14. 47, *திருநாவுக்கரசு சுவாமிகள்* 27. 74, *நமிநந்தியடிகள்* 33. 11, *திருநீலகண்ட யாழ்ப்பாணர்* 75. 6.

### அஞ்சிமிதிக்கப் பெறுத தலங்கள்

*திருவதிகை* 6. 83, *திருக்கழுமலம்* 6. 112, *திருஆலங்காடு* 34. 1008, 35. 282.

### அடியார் இடர்தீர்க்கும் ஆண்மைத் தொண்டு

*சைவம் ஓங்க.........அன்பர்க் கடாதன அடுத்தபோது......... முரண்கெட எறிந்து தீர்க்கும்......பரசுமுன்னெடுக்கப் பெற்றுர். எறிபத்தர்*—14. 7, *ஆளுடைத் தொண்டர்செய்த ஆண்மையும். எறி பத்தர்*—14. 56, *அன்பரை இத்தலத்தில் இகழ்ந்தியம்பும் உரை வைத்த நாவை வலித்தரி சத்தியால் சத்தியார் எனும் நாமமும் தாங் கினுர். சத்தி நாயனுர்*—52.3, *அன்னதாகிய ஆண்மைத் திருப்பணி... பன்னெடும் பெருநாள் பரிவாற் செய்து......சத்தி நாயனுர்*—52. 5.

### அடியார் வழிபாட்டிற் சிறந்தமுறை

*அன்பர் என்பதொர் தன்மையால் நேரவந்தவர் யாவராயினும் நித்தமாகிய பத்திமுன் கூரவந்தெதிர் கொண்டு கைகள் குவித்து நின்று செவிப்புலத் தீர மென்ம துரப்பதம் பரிவெய்த முன்னுரை செய்தபின்* 10. 3, *கொண்டுவந்து மனைப்புகுந்து குலாவு பாதம் விளக்கியே மண்டு காதலின் ஆசனத்திடை வைத்தருச்சனை செய்த பின் உண்டி நாலு விதத்திலாறு சுவைத்திறத்தினில் ஒப்பிலா அண் டர் நாயகர் தொண்டரிச்சையில் அமுது செய்ய அளித்துளார்* 10-4,

அடியாரை நாடோறும் முறைமையினில் திருவமுது முன்னூட்டிப் பின்னுண்ணும்.........தூய தொழில் தலைநின்றார் 42 13, காதலுடன் அடியார்கள் அமுது செயக் கடைப்பந்தி ஏதமிலாவகை தாமும் அமுது செய்தங்கு......38. 10, தூயதிரு வமுது கனிகன்னல் அறுசுவைக்கறி நெய்பாய தயிர் பால் இனிய பண்ணியம் உண்ணீர் அமுதம் மேய படியால் அமுது செய்விக்க......மனமகிழ்ந்தார் 42. 14, அடியார் தம்மை நயப்பாட்டு வழிபாட்டால் மேதகை யாரவர் முன்பு மிகச்சிறியராய் அடைந்தார் ஆதலினாற் சிறுத்தொண்டர் என நிகழ்ந்தார் 42. 15.

## அடியார் வாழ்க்கையிற் குற்றங் கருதேல்

சீலம் இலரே எனினும் திருநீறு சேர்ந்தாரை ஞாலம் இகழ்ந்தரு நரகம் நண்ணாமல் எண்ணுவார்.........இரட்டிப்புப் பொன் கொடுத்து மேலவரைத் தொழுது இனிய மொழி விளம்பி விடை கொடுத்தார் 48. 7, அடியார் இவர் முன்மேவு நிலை குறித்து வெள்கி நீர் வாரா தொழிந்தாளென்று........கைதறித்து......தாமே அவர் தாள் விளக்கினார் 50. 8.

## அநபாயன் கூறப்படும் இடங்கள்

பேரம்பலம் செய்யதூய பொன்னணி சோழன் நீடுழிபார் ஆய சீர் அநபாயன் 1-8, வென்றிவெண்குடை அநபாயன் செய்யகோல் அபயன் திருமனத்தோங்கும் திருக்கயிலாய நீள் சிலம்பு 2. 12, பொதுக்கடிந்தினிதுகாக்கும் கொற்றவன் அநபாயன் 3. 35, மன்னுசீர் அநபாயன் வழிமுதல் .....மனுவேந்தனே 4. 13, சென்னி வெண்குடை நீடநபாயன் 9. 1, புதுமலையிடித்துப் போற்றும் அந்நெறிவழியேயாக அயல்வழியடைத்த சோழன் மன்னிய அநபாயன் 14. 2, சென்னி அபயன் குலோத்துங்கச் சோழன்தில்லைத் திருவெல்லை பொன்னின்மயமாக்கிய வளவர்பேரே றென்றும் புவிகாக்கும் மன்னர் பெருமான் அநபாயன் 26. 8, அம்புயமலராள்மார்பன் அநபாயன் என்னும் சீர்த்திச் செம்பியன் செங்கோலென்னத்

தென்னன்கூன் நிமிர்த்த தன்றே 34. 847, தில்லைநகர்மணிவீதி அணிவிளக்கும் சென்னிநீ டநபாயன் 47. 8, வள்ளல்கொடை அநபாயன்முந்தைவருங்குல முதலோராயமுதற் செங்கணார் 74. 14.

## அப்பாலும் அடிச்சார்ந்தார்யாவர் ?

மூவேந்தர் தமிழ் வழங்கு நாட்டுக்கப்பால் முதல்வனார் அடிச்சார்ந்த முறைமையோரும் நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறும் நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும் பூவேய்ந்த நெடுஞ்சடைமே லடம்பு தும்பைப் புதியமதி நதியிதழி பொருந்த வைத்த சேவேந்து வெல்கொடியான் அடிச்சார்ந்தாரும் செப்பிய அப்பாலும் அடிச்சார்ந்தார்தாமே. 70. 1.

## அரசன் கடமையும் உரிமையும்

மாநிலங்காவலனாவான் மன்னுயிர் காக்குங்காலைத் தானதனுக் கிடையூறு தன்னால் தன்பரிசனத்தால் ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர் தம்மால் ஆனபயம் ஐந்துந்தீர்த்து அறங்காப்பானல்லனோ 4. 36, மண்ணில் வாழ்தருமன்னுயிர்கட்கெலாம் கண்ணும் ஆவியுமாம் பெருங்காவலான் 4. 14, பன்முறை உயிர்களெல்லாம் பாலித்து ஞாலங்காப்பான் தன்னெடுங் குடைக்கீழ்த்தத்தம் நெறிகளிற் சரித்துவாழும் மன்னரையின்றிவைகும் மண்ணுல கெண்ணுங்காலை இன்னுயிரின்றி வாழும் யாக்கையை ஒக்கும் 21. 29, கூழும் குடியும் முதலாயின கொள்கைத்தேனும் குழும்படைமன்னவன் தோளிணைக்காவலின்றி வாழுந் தகைத்தன்றிந்தவையகம் 21. 28, அறம்பொருளின்பமான அறநெறிவழாமல் புல்லி மறங்கடிந்தரசர் போற்றவையகம் காக்கும் நாளில் 4. 17.

## அரிய சில சொல் வழக்குகள்

அத்தனை 9. 9, அந்நின்ற 15. 40, 20. 40, 27. 71, அருளிப்பாடு 78. 33, 44, இந்நின்ற 20. 40, உப்பாலார் 27. 280, ஓகை 34. 643, 878, 986, ஓமதேனு 26. 29, கண் சாம்பி 34. 562, கில்லேன் 16. 113, குளிரி 6. 173, கைம்மை வினை 10. 22, சும்மை

3. 18, *செக்கின்ற* 27. 71, 34. 1052, *தனிக்கடை* 11. 9, 34. 647, *திருவாளன்* 20. 26, 26. 60, 27. 67, 78. 12, *தீர்வு* 4. 34, 14. 42, *பகவு* 34. 946, *பனவன்* 9. 18, *பிரியாவிடை* 27. 203, *மச்சிறு* 16. 108, *முதலி* 16. 117, *யோகப்புரவி* 6. 19, *வட்டில்* 34. 810, *வேலையில்* 6. 43, 14. 9, *வைகிற்று* 10. 12.

## அன்பைச் சோதித்து வெளிப்படுத்தல்

*தொண்டர் அன்பெனுந்தூநெறி வெளிப்படுப்பாராய்* 13. 9 *தொண்டரை விளக்கங்காண நன்னெறி இதுவாமென்று ஞாலத்தார் விரும்பி உய்யும் அந்நெறி காட்டும் ஆற்றால்* 8. 10, *தொண்டர் மறுத வண்ணமும் காட்டுவான் வந்தார்* 9. 4, *தொண்டினை மண்மேல் காட்டச் செழுந்திருமலரை இன்று சினக்கரி சிந்த......அருளினால் கூடிற்று* 14. 48, *உனக்கவன் தன் செயல்காட்ட நாளை நீ......காண்கின்றாய்* 16. 163, *மேன்மேலெழும் பரிவும் பழைய பான்மை மிகும் பண்பும்......வெளிப்படுப்பான்......மறையோன் கோபமேவும்படி கண்டான்* 26. 48, *ஆண்ட அரசுபணிசெய்ய அவர் நன்னிலைமை காட்டுவார்......பொன்னினொடு நவமணிகள் பொலிந்திலக்க அருள் செய்தார்* 27. 416, *தொண்டரை விளக்கத்தூயோன் அருள் செய* 71. 11.

## அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்காரம்

*அட்டாங்க பஞ்சாங்கமாக முன்பு முறைமையினால் வணங்கி* 6. 126, *மண்ணுற ஐந்துறுப்பால் வணங்கி* 6. 124, *அங்கம் எட்டினும் ஐந்தினும் அளவின்றி வணங்கி* 34. 666, *அங்கம் மாநிலத்தெட்டுற வணங்கி* 34. 953, *எட்டினொடைந்து மாகு முறுப்பினாற் பீடு நீடு நிலத்தின்மேற் பெருகப்பணிந்து* 35. 98, *விரவுமெய் அங்கம் ஐந்தும் எட்டினும் வணங்கி* 35. 114.

## ஆகமம் கூறப்படும் இடங்கள் சில

*பூசனைக்கங்கண் வேண்டும்நிபந்தம் ஆராய்ந்துளான் துங்க ஆகமம் சொன்ன முறைமையால்* 4. 16, *உங்கள் நாயகனார் முன்னமுரைத்த*

*ஆகமநூல் மண்மேலெங்கு மில்லாததொன்று கொடுவந்தேன்* 11. 12, *எய்தியசீர் ஆகமத்திலியம்பிய பூசனைக்கேற்ப* 16. 135, *செப்பிய ஆகம விதியால்...அர்ச்சனை* 16. 152, *அறிந்த நெறிபூசிப்ப மன்னிய ஆகமப்படியால்* 16. 155, *எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும் உண்மையாவது பூசனை* 25. 51, *மெய்த்த ஆகமவிதி வழி வேத காரணரை நித்தன் பூசனை புரிந்தெழு நியமமும்* 32. 6, *புற்றிடங்கொள் புனிதர்க்கமுதுபடி முதலாம்...நிபந்தம்பலவும்...அமைத்தான் வேதாகம நூல் விதி விளங்க* 33. 19, *ஆகமப் பொருளை மண்ணின் மிசைத் திருமூலர் வாக்கினால் தமிழ் வகுப்ப* 36. 23, *சாதனத்தோடு தச்சர் தம்மையும் மனத்தால் தேடி...ஆகமத்தால் அடிநிலை பாரித்தன்பால்...எடுக்கலுற்றார்* 71. 6.

## ஆண்டானடிமை சைவ அடிப்படை

*எல்லாம் உடைய ஈசனே இறைவன் என்ன அறியாதார் பொல்லா வேடச்சாக்கியரேயாகிப் புல்லராகுவார் அல்லார் கண்டர் தமக்கிந்த அகிலமெல்லாம் ஆள் என்ன வல்லார் இவர்* 40. 7.

## ஆதிரை நாள்தோறும் வழிபாடு

*ஆறணிந்த சடைமுடியார்க் காதிரை நாள்தொறுமென்றும் வேறு நிறைவழிபாடு விளங்கிய பூசனைமேவி* 48. 4.

## இசையின் வசீகர சக்தி

*அரவம் மயில்மீது மருண்டு விழும் சலியாத நிலை அரியும் தடங்கரியும் உடன்சாரும் புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும்* 20. 34, *மருவிய கால்விசைத்தசையா...அருவிகளும் கான்யாறும் கலித்தோடா...எழுகடலும் இடைதுளும்பா* 20. 35.

## இருவினையொப்பு

*தென்னவன்...திருநீறு பூசப்பெற்று முன்னைவல்வினையும் நீங்கி முதல்வனை யறியுந் தன்மை துன்னினான் வினைகள் ஒத்துத் துலையென நிற்றலாலே* 34. 819.

## இலிங்கம் எதைக் குறிக்கிறது ?

*காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய் நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்* 40. 8.

## இல்லறம் நடத்தும் முறை

*அரசுகொள் கடன்களாற்றி மிகுதி கொண்டறங்கள் பேணிப் பரவருங் கடவுட் போற்றிக் குரவரும் விருந்தும் பண்பின் விரவிய கிளையுந் தாங்கி விளங்கிய குடிகள்* 3. 26, *பொய்கடிந் தறத்தின் வாழ்வார்...மெய்யடியார்கட்கான பணிசெயும் விருப்பில் நின்றார் வையகம் போற்றும் செய்கை மனையறம் புரிந்து வாழ்வார்* 8. 2, *விருந்தெதிர் கொள்ளும் பீடு தங்கிய பெருங்குடி மனையறம்* 25. 28, *தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத் தூய மாந்தர் வாழ் தொண்டை நாட்டியல்பு* 25. 47, *மண்ணின் துகளன்றித் துகளில்லா நன்மை நிலை ஒழுக்கத்து நலஞ்சிறந்தகுடி* 27. 2.

## இன்னுரையும் கூறும் முறையும்

*கைகள் குவித்து நின்று செவிப்புலத்து ஈரமென் மதுரப்பதம் பரிவெய்த முன்உரை செய்தபின்* 10. 3, *கண்ணுதற்கன்பர் என்னவே வாரமாகி மகிழ்ந்தவர் தாள்மிசை ஆருமன் பொடுவீழ்ந்தஞ்சலி முகிழ்த்தீர நன்மொழி எய்த இசைத்துளார்* 28. 3, *ஈசனுக்கே அன்பானார் யாவரையுந் தாங்கண்டால்...பணிந்த மொழி இனியனவே பேசுவார்* 64. 1.

## உண்ணு விரதம்

*வண்ணங்கண்டு நான் உம்மை வணங்கியன்றிப் போகேன் என்றெண்ண முடிக்கும் வாகீசர் இருந்தார் அமுது செய்யாதே* 27. 296.

## உருத்திர ஜபம்

*அருமறைப் பயனாகிய உருத்திரம் அதனை வருமுறைப் பெரும் பகலும் எல்லியும் வழுவாமே...உவந்தார்* 23.7.

## உருத்திராக்கம்

*ஆரங்கண்டிகை ஆடையுங் கந்தையே பாரம் ஈசன் பணியல தொன்றிலார்* 5. 9, *தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும் ...உடையார்* 27. 140, *திரு அடையாளமாலை எவ்வுல கோரும் எத்தத் தொழுதுதாம் எடுத்துப் பூண்டார்* 34. 1216, *மிக் கெழும் அன்பர்கள் அன்பு திருமேனி விளைந்ததென அக்கு மணி யாற்சன்ன வீரமும் ஆரமும் வடமும் கைக்கணி கொள்வளைச் சரியும் ...சாத்திய ஒண்சுடர் தயங்க* 42. 32.

## உருவ வழிபாட்டில் ஞானிகள் கலக்கும்முறை

*உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை ஒழிவின்றி உரு வின்கண் அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர அருளினை* 34, 161.

## உலகேலாம் என்ற சோல்வரும் இடங்கள்

1. 1, 7. 7, 10. 15, 18. 36, 25. 48, 30. 51, 34. 216, 34. 643. 34. 859, 35. 88, 49. 16, 75. 7, 78. 40, 78. 53, (ஆ 14 இடங்கள்)

## உவமை யழகுட் சில

*முகில்நுழை மதியம்போல...துகில்கொடு குஞ்சி ஈரம் புலர்த்தி* 6. 16, *தண்மதி முதிர்ந்து கதிர்சாய்வதென மீதே வெண்ணரை முடித்தது* 6. 29, *மறையோன் றன்பின் திரிமுகக் காந்தஞ் சேர்ந்த வல்லிரும் பணையுமாபோல் வள்ளலுங் கடிது சென்றார்* 6. 50, *மை பொதி விளக்கே யென்ன மனத்தினுட் கறுப்பு வைத்து* 11. 7, *கதி ரோன் எழ மழுங்கிக் கால்சாயுங் காலை மதிபோல் அழிந்து பொருமற் றவன்* 15. 8, *வெங்கண் புலிகிடந்த வெம்முழையில் சென்றழைக்கும் பைங்கள் குறுநரியே போல்வான்* 15. 10, *பான்மதி உவரி ஈன்ற தென மகப் பயந்தபோது* 16. 13, *அருமைமணியு மளித்ததுவே நஞ்சுமளிக்கு மரவுபோல் இருமைவினைக்கு மொருவடிவாம் எச்ச தத்தன்* 26. 10, *கருவரை காளமேக மேந்திய தென்னத்தாதை*

பொருவரைத் தோள்க ளாரப் புதல்வனை எடுத்துக் கொண்டான் 16. 15, மலையில் தேவர் தம்மைக் கண்டணைத்துக் கொண்டு வங்கி னைப் பற்றிப் போதா வல்லுடும் பென்ன நீங்கான் 16. 116, மேவு செல்வம் களிறுண் விளங்கனி யாவதாகி அழியவும் 19. 8, பொங் கிய ஒளியின் நீழல் பொருவில் அன்புருவமானார் 16. 104, வாயின் மஞ்சன நீர்தன்னை விளைத்த அன்புமிழ்வார் போல விமலனார் முடி மேல் விட்டார் 16. 123, முதல்வனார் அருள் நோக்கால் இன்புறு வேதகத் திரும்பு பொன்னானாற்போல் யாக்கைத் தன் பரிசும் வினை யிரண்டும் மல மூன்று மறஅன்பு பிழம்பாய்த் திரிவார் 16. 154, பொடி மூடுதழ லென்னத் திருமேனிதனில்...திருநீற்றின்...18. 25, செந்தீ மேலெழும் பொழுது செம்மலர்மேல் வந்தெழுந்த அந்தணன் போல் தோன்றினார் 24. 33, பிள்ளை தைவரப் பெருகுபால் சொரி முலைத் தாய்போல் மள்ளர்...கை வருட வெள்ளநீர்...மடை யுடைப் பது பாலி 25. 22, ஒழியாததனம் பெரிதும் பெற்று வந்த வறியோன் போல் மனந்தழைத்தார் 27. 196, பளிக்குமணி மாகத வல்லியிற் கோத்த பான்மை எனத் துளித்தலைமேல் அறுகு பனி தொடுத் தசைய 34. 329 (காவியச் சுவை, சமயப் பொருள் நினைவூட்டு முவமைகள், திருநீற்றை நினைவிக்கு முவமைகள், சொல்லழகு என்ற தலைப்புக்களையும் பார்க்கவும்.)

## ஐந்தெழுத்தோதிச் செய்யப்பெற்றவை

அமர்நீதியார் தராசில் ஏறுதல் 13. 43. ஆனாயர் குழலிசைத்தல் 20. 22, திலகவதியார் மருணீக்கியாருக்குத் திருநீறு தருதல் 27. 66, திருநாவுக்கரசர் கல்மேல் மிதத்தல் 27. 125, திருஞானசம்பந்தர் முத் துச்சிவிகையிலேறுதல் 34. 216, திருஞானசம்பந்தர் பாண்டிநாட்டுக் குப் புறப்படுதல் 34. 619, தண்டியடிகள் சபதங் கூறிக் குளத்தில் முழுகுதல் 37. 19, புகழ்ச்சோழர் தீக்குளித்தல் 47. 39, கழறிற்றறி வார் குதிரையை ஆகாய வீதியிற் செலுத்துதல் 78. 36.

## ஐயர் என்று கடவுளைக் குறிப்பன சில

2. 12, 6. 47, 6. 105, 8. 4, 9. 3, 10. 3, 13. 20, 13. 47, 16. 127, 16. 184, 18. 33, 19. 17, 20. 40, 27. 98, 34. 43.

## ஐயர் என்று தொண்டர்கள் குறிக்கப்படுதல்

*கண்ணப்பர்* 16. 70, 103, *திருநாளைப்போவார்* 24. 30, *திருநீலகண்டயாழ்ப்பாணர்* 34. 133, 179, 450, 451.

## கடவுள் இடப வாகனராய்க் காட்சி தருதல்

*அதிபத்தர்* 49. 18, *அரிவாட்டாயர்* 19. 21, *ஆனாயர்* 20. 38, *இயற்பகையார்* 9. 31, *இளையான்குடிமாறர்* 10. 25, *கலியர்* 51. 16, *சண்டேசர்* 26. 52, *சாக்கியர்* 40. 17, *சிறுத்தொண்டர்* 42. 85, *சுந்தரமூர்த்தி சுவாமிகள்* 6. 66, *திருக்குறிப்புத்தொண்டர்* 25. 126, *திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்* 34. 64, *திருநீலகண்ட நாயனார்* 8. 40, *மனுச்சோழன்* 4. 45, *மானக்கஞ்சாறர்* 18. 31.

## கடவுள் கூறப்படும் வகை

*உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன்* 1. 1, *தன்னையார்க்கும் அறிவரியான்* 2. 1, *இன்னதன்மையன் என்றறியாச்சிவன்* 2. 13, *அருமறை முறையிட்டின்னும் அறிவதற்கரியான்* 6. 46, *யாவர்களும் அறிவரிய இறைவன்* 34. 1025, *அரியயனுக்கரியானை அடியவருக்கெளியானை* 27. 144, *அருட்கருணைத் திருவாளன்* 34 1012, *கருணை திருவடிவான சீரிணங்கு சிவபெருமான்* 34. 67, *எதிரிலின்பம் இம்மையே தருவார்* 35. 52, *அடியார் இடுக்கண்தரியாதார்* 35. 324, *கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி* 7. 2, *வலிய ஆட்கொள்ளும் வள்ளல்* 6. 61, *கொடுமை இல்லான்* 8. 27, *எளியார் வலியாம் இறைவாசிவதா அளியார் அடியார் அறிவே சிவதா* 14. 16, *மெய்ம்மறந்து நினைந்துற்ற விடத்துதவும் விடையவர்* 30. 25, *எப்பொருளும் தரும் ஈசர்* 34. 290, *எவ்வுயிர்க்குந் தாயானான்* 34. 482, *தாயினும் இனிய தங்கள் தம்பிரானார்* 34.584, *அடியவர்பால் மெய்த்தாயினுமினியான்* 6. 74, *யாவர்க்கும் தந்தை தாயெனுமிவர்* 34. 69, *அத்தனாய் அன்னையாய் ஆருயிராய் அமிர்தாகி முத்தனாம் முதல்வன்* 63.12, *ஆவியினினிய எங்களத்தனார்* 16. 174, *மேவினார் பிரியமாட்டா விமலனார்* 16. 174, *கருநாமந் தவிர்ப்பார்* 27. 334, *கருச்சுற்றில்*

அடையாமற் கைதருவார் 34. 391, கருச்சுழியில் வீழாமற்காப்பார் 43. 111, எப்பொருளும் நீங்காத நிலைமையினர் 35. 180, அன்பின் மிக்க தொண்டர்தம் சிந்தை நீங்காத அந்நிலை அரனர் 14. 5, உள்ள நிலைப்பொருளாய உம்பர்பிரான் 18. 21, எவ்வுயிர்க்கும் சான்றும் ஒருவன் 27. 134, வானுகிநிலனுகி அனலுமாகி மாருதமாய் இருசுடராய் நீருமாகி ஊனுகி உயிராகி உணர்வுமாகி உலகங்கள் அனைத்துமாய் உலகுக்கப்பால் ஆனதவடிவாகி நின்றார். 34. 563, நாதங்கொள்வடிவாய் நின்ற நதிபொதி சடையார் 34. 591, எப்பொருளுமாய் நின்றார் 34. 399, முழுதும் ஆனவர் 34. 375, நிகரிலா மேருவரை அணுவாக நீண்டானை நுகர்கின்ற தொண்டர் தமக்கமுதாகி நொய்யானை 34. 402, அருவாகி உருவாகி அனைத்துமாய் நின்ற பிரான் 67. 1, ஆதாரமா யனைத்துமாகி நின்ற அங்கணன் 69. 1, குணங்கடந்த தனிக்கூத்தர் 34. 1139, தொல்லுலகம் முழுதும் அளித்தழித்தாக்கும் முதல்வர் 35. 285, அகிலலோகங்கள் முழுதும் அளித்தமுதல்வனர் 37. 12, முழுதுலகுந் தரும் இறைவர் 34. 1119, வினையெலாம் விளைக்கவல்லார் 35. 356, மாயைவல்லான் 6. 56, எல்லாம் தான்வைத்துவாங்கவல்லான் 8. 20. எவ்வுயிர்க்கும் காவலனர் 34. 1118, ஏழுலகும் உடையான் 34. 1025, தேவரையும் மாலயன் முதல் திருவின்மிக்கோர்யாவரையும் வேறடிமையாவுடைய எம்மான் 6. 37, உடையவர் 34. 307, எல்லாம் உடைய ஈசனே இறைவன் 40. 7, ஆதியும் முடிவுமில்லா அற்புதத்தனிக் கூத்தாடும் நாதனர் 8. 1, முன்னுகி எப்பொருட்கும் முடிவாகி நின்றான் 27. 151, எல்லை முடிவில்லான் 6. 36, முடிவிலாதான் 6. 45, என்றுங்கேடிலாதான் 6. 128, நித்தனர் 8. 18, ஊழி முதல்வர் 34. 162, முடிவில் பரம்பொருளானர் 34. 414, அகிலகாரணமும் ஆனர் 34 520, ஆதிமுதல்வர் 34. 985, புலன்கள் ஐந்தும் செற்றவர் 34, 343, பவபாசம் அறுத்தவர் 34. 879, நின்மலன் 35. 21, விமலர் 34. 521, தவஅரசாள உய்க்கும் தனிக்குடை நிழற்றச்சாரும் பவமறுத்தாளவல்லார் 34. 1206, பாசவினைத்தொடக்கறுப்பார் 43. 122, முந்தை மறையாயிரம் மொழிந்த திருவாயான் 6. 33, தூமறைபாடும் வாயார்

6. 70, ஐந்தெழுத்தும் பாடிய பொருளாய் உள்ளான் 6. 71, அரு மறைகள் துணிந்த வான் பொருள் 34. 428, ஆரணத்தின் உட்பொரு ளாய் நின்றார் 34. 976, மெய்த்தநெறி வைதிகம் விளைந்த முதலே 6. 32, புண்ணியப்பொருளாய் நின்றான் 8. 26, ஆதியாய் நடுவுமாகி... ஏகமாகிப்பெண்ணுமாயாணுமாகி...நிற்கும் 7. 1, அறுசமயத்தலைவர் 40. 1, அன்புபூட்டி ஆட்கொண்டார் 35. 122.

கண்ணப்ப நாயனார்

கருங்கதிர் விரிக்கும் மேனிகாமரு குழவி 16. 16, திண்ணனார்... மணி நீல மலையொன்று வந்ததென்ன......வணங்கும் போதில் 16. 52, வேடர் தம் கரிய செங்கண் வில்லியார் 16. 92, மைவ்வரை என்ன ஐயர் மருங்கு நின்றகலா நின்றார் 16. 127, கருங்கடல் என்ன நின்று கண் துயிலாத வீரர் 16. 132, கையில் ஏந்தற் கருமையால் உரி மைப் பேரும் திண்ணன் என்றியம்பும் 16. 17, புண்ணியக் கங்கை நீரிற் புனிதமாம் திருவாய் நீரில் உள்நனைந்தமுத மூறி ஒழுகிய மழலைத் தீஞ் சொல் 16. 22, இரு சுடர்க் குறுகண் தீர்க்கும் எழில் வளர் கண்ணீர் 16. 23, என்மேற் பாரம் போவதொன்றுளது போலும் ஆசையும் பொங்கி மேன்மேல் மேவிய நெஞ்சம் வேறோர் விருப்புற விரையா நிற்கும் 16. 97, முன்பு செய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக் காட்ட 16. 102, நாண னும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத்தாமும் பேணுதத்துவங்களென் னும் பெருகு சோபானமேறி ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல 16. 103, மயிர்க்கால் தோறும் வடிவெலாம் புள கம் பொங்க மலர்கண்ணீர் அருவி பாய 16. 106, கன்றகல் புனிற்றுப் போல்வர் 16. 112, வாயில் மஞ்சன நீர் தன்னை விளைத்த அன்புமிழ் வார்போல விமலனார் முடிமேல் விட்டார் 16. 123, பல்லினால் அதுக்கி நாவிற் பழகிய இனிமை பார்த்துப் படைத்த இவ்விறைச்சி சால அழகிது நாயனீரே அமுது செய்தருளுமென்றார் 16. 125, அவ னுடைய வடிவெல்லாம் நம்பக்க லன்பென்றும் அவனுடைய அறி வெல்லாம் நமையறியும் அறிவென்றும் அவனுடைய செயலெல்லாம் நமக்கினியவா மென்றும்.........அருள்செய்தார் 16. 157, உற்ற

நோய் தீர்ப்பது ஊனுக்கூன் எனும் உரை முன்கண்டார் 16. 177, கும்பிட்ட பயன் காண்பார்போல் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார் 34. 1022.

## கல்வியின் தொழில்

பொருள் நீத்தங் கொளவீசிப் புலன் கொளுவ மனமுகிழ்த்த சுருள் நீக்கி மலர்விக்குங் கலைபயிலத் தொடங்குவித்தார் 27 20, ஐந்து வருடம் அவர்க்கணைய.........முந்தை அறிவின் தொடர்ச்சியினால் முகைக்கு மலரின் வாசம்போல் சிந்தைமலர உடன் மலரும் செவ்வி உணர்வு சிறந்ததால் 26. 13, மூவாண்டில்.........சிந்தைமலர் சொற்றெளிவிற் செழுங்கலைகள் பயிலத்தம் பந்தமற வந்தவரைப் பள்ளியினிலிருத்தினார் 42. 22.

## கல்வியின் பயன்

உள்ள நிறை கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்றவற்றால் தெள்ளி வடித்தறிந்த பொருள் சிவன் கழலிற் செறிவென்றே கொள்ளு முணர்வினில்.........42. 4, அலகில் கலையின் பொருட்கெல்லை ஆடுங் கழலே எனக் கொண்ட செலவு மிகுந்த சிந்தையினில் தெளிந்தார் 26. 15, செய்யுள் நிகழ் சொற்றெளிவும் செவ்விய நூல் பல நோக்கும் மெய்யுணர்வின் பயனிதுவே எனத்துணிந்து விளங்கி யொளிர்மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார் 46. 1, தென்தமிழும் வடகலையும் தேசிகமும் பேசுவன மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக ஒன்றிய மெய்யுணர்வோடும் உள்ளுருகிப் பாடுவார் 65. 2.

## கற்புடைமை

மேம்படு சடையனார்க்கு ஏதமில் கற்பின் வாழ்க்கை மனை இசை ஞானியார் 6. 3, மனைவியாரும் அருந்ததி கற்பின் மிக்கார் 8. 4, கற்புறு மனைவியாரும் கணவனார்க்கான எல்லாம் பொற்புற மெய்யுறாமல் பொருந்துவ போற்றிச்செய்தே......அற்புறு புணர்ச்சியின்மை அயலறியாமை வாழ்ந்தார் 8. 8, தம்மனை வாழ்க்கைக் கற்பு மேம்படு

காதலியாரை விதிமணக்குல மடந்தை இன்றுணை இம்மெய்த்தவர்க்கு நான் கொடுத்தனன் என்ன...மொழிவார் 9. 8, நீர் உரைத்த தொன்றை நான் செயும் அத்தனையல்லால் உரிமை வேறுளதோ 9. 9, தேற்றம் மருவிய தெய்வக் கற்பின் மனைவியார் 9. 34, மழைக் குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தியார் 18. 11, வட நெடுவான மீனையனையவர் 19. 13, மாதினியார் சுற்றமுடன் மக்களேயும் துக ளாகவே நீத்துப் பெற்றிமையால் உடனென்றும் பிரியாத உலகெய் தும் கற்புநெறி வழுவாமல் கணவனுருடன் சென்றார் 27. 28, மனைப் பதியாகிய வணிகன்......நீராடிப் புகுந்தடிசில் புரிந்தயிலக் கற்பு டைய மடவாரும் கடப்பாட்டில் ஊட்டுவார் 30. 22, சற்புடை நெறி யால் கணவனுரை காவாமை மெய்வழி யன்றெனு விளம்பல் விட மாட்டார் 30. 27, இவனுக்காகத் தாங்கிய வனப்புநின்ற தசைப் பொதி கழித்து...பேய் வடிவு...வேண்டும் 30. 49, மூன்று தீ வளர்த் துளார் இரு பிறப்பாளர்...அத்தீயை வாய்ந்தகற்புடன் நான்கென வளர்ப்பர்கள் மடவார் 32. 3, வடமீன் கற்பின் மனைவாழ்க்கைக் குல மகளிர் வளம்பொலிவ மாடங்கள் 34. 10, பகவதியார்...கற்பு மேம்படு சிறப்பால் கணவனுர் கருத்தமைந்தார் 34. 16, வாளரவு தீண்டவுந் தான் தீண்டகில்லாள் 34. 474, கற்புவளர் கொடியேயனைய மனைவி யார் 35. 210, கலிக்காமர் தேவியாரும் பொருவருங் கணவரோடு போவது புரியுங்காலை 35. 398, எந்தையும் எம் அனையும் அவர்க் கெனைக் கொடுக்க இசைந்தார்கள் அந்த முறையால் அவர்க்கே உரி யது நான் ஆதலினுல் இந்தவுயி ரவருயிரோ டிசைவிப்பன் எனத் துணிய 27. 32, திருவெண்காட்டு நங்கையெனும் காதல் மனைக்கிழத் தியார் கருத்தொன்றவரும் பெருமை நீதிமனையறம் புரியும் நீர்மை யினைநிலை நிற்பார் 42.12, பெருகுதிரு மனையறத்தின் வேராகி விளங்கு திருவெண்காட்டு நங்கை 42.17, அன்புமிக்க பெருங்கற்பின் அணங்கு திருவெண்காட்டம்மை 42. 53, அரிய கற்பின் மனைவியார் 42. 55.

கனவிற் கடவுள் பேசியது

27. 48, 16. 156, 27. 276, 32. 18, 33. 26, 34. 554, 563, 35 71, 237, 37. 12, 13, 43. 112, 62. 4, 75. 3.

கன்றும் ஆவும் கதறும் அன்புக்குவமை

ஈன்ற ஆன்கனைப்புக் கேட்ட கன்றுபோல் கதறி நம்பி...புராக மாக 6. 68, போனவர் மீண்டு செல்வர் புல்லுவர் மீளப் போவர் காத லின் நோக்கி நிற்பர் கன்றகல் புனிற்றாப் போல்வர் 16. 112, கன்று தடையுண் டெதிரழைக்கக் கதறிக் கனைக்கும் புனிற்றாப் போல் ஒன் றும் உணர்வால்...43. 135, சேணிடை விட்டகன்று கோவினைக் கண்டணைந்த தெனக் காதலின் விரைந்தெய்தி...78. 42, ஆவின் பின் கன்றணைந்தாற்போலணைந்து...பேசுவார் 64. 1.

காஞ்சிபுரத்திலிருந்த அதிசயங்கள்

தம்முருமாய மற்றுளாரைத் தாம் காண்பிடம்...யோகபீடம்... போக பீடம்...25. 83, உருத்திரசோலை...தீண்டில் யாவையும் செம் பொனாக்குவதோர் சிலை...25. 84.

காரைக்காலம்மையார்

மயிலைப் புறங்கொள் மென்சாயல் மகளிர் கிளவி யாழினொடும் குயிலைப் பொருவும் காரைக்காலம்மை 29. 11, திருமடந்தை அவ தரித்தாளென வந்து பொங்கிய பேரழகு மிகப் புனிதவதியார் பிறந் தார் 30. 2, பொருவிடையார் திருவடிக்கீழ் ஓங்கிய அன்புறு காதல் ஒழிவின்றி மிகப் பெருகப் பாங்கில் வரும் மனையறத்தின் பண்பு வழாமையிற் பயில்வார் 30. 14, இம்மையிலே புவியுள்ளோர் யாருங் காண ஏழுலகும் போற்றிசைப்ப எம்மையாளும் அம்மை 34. 1008.

காவியச் சுவை

மொய்யளி சூழ்கிரை நீல முழுவலயங்களின் அலையச் செய்ய தளிர் நறுவிரலின் செழுமுகையின் நகஞ் சிறப்ப மெய்யொளியின் நிழற் காணும் ஆடியென வெண்மதியை வையமகள் கையணைத்தாற் போலுயர்வ மலர்ச்சோலை 27. 9, பரந்த விளைவயற் செய்ய பங்கய மாம் பொங்கெரியில் வரம்பில் வளர்தேமாவின் கனிகிழிந்த மதுநறு நெய் நிரந்தரம் நீள் இலைக்கடையால் ஒழுகுதலால் நெடிதவ் வூர் மரங்களும் ஆகுதி வேட்கும் தகையவென மணந்துளதால் 34.7,

வென்றி மங்கை வேடர் வில்லின் மீதுமேவு பாதம் முன்சென்று மீளுமாறு போல்வசெய்ய நாவின் வாயவாய் ஒன்றொடொன்று நேர்படாமல் ஓடு நாய்கள் மாடெலாம் 16. 69, வண்டு பாடப்புனல்தடத்து மலர்ந்து கண்ணீர் (=கள்நீர்) அரும்புவன கொண்ட வாசமுகையவிழ்ந்தகுளிர்பங்கயங்களேயல்ல அண்டர் பெருமான் திருப்பாட்டின் அமுதம் பெருகச்செவிமடுக்கும் தொண்டர் வதனபங்கயமும் துளித்த கண்ணீர் அரும்புமால் 22. 4, அன்னமாடு மகன்றுறைப் பொய்கையிற் றுன்னு மேதிபடியத்துதைந் தெழுங்கன்னிவாளை கமுகின் மேற்பாய்வன மன்னுவான் மிசைவானவில் போலுமால் 3. 19, (இன்னம் நூற்றுக்கணக்கான பாடல்களுள்ளன; சொல்லழகு, சொல்லடுக்கு, உவமையழகு முதலிய தலைப்புக்களையுங் காண்க.)

## கொடையிற் சிறந்த முறைகள்

யாவையும் நேர் கூறுவதன்முன் அவர்தம் குறிப்பறிந்து கொடுத்துள்ளார் 18. 9, அடியார்கள் யாரேனும் வேண்டும் யாவையும் இல்லையென்னாதே......கொடுக்கும் இயல்பின் நின்றவர் உலகியற்பகையார் 9. 2, நீறு சேர்திருமேனியர் மனத்து நினைத்தயாவையும் வினைப்பட முடித்து......பேறெலாம் அவர் ஏவின செய்யும் பெருமையே யெனப்பேணி 9. 3, நெற்பண்டாரமுமன்றிக் குறைவில் நிதிப்பண்டாரமென எல்லாங்கொள்ளை முகந்திறைவனடியார் கவர்ந்து கொள்கவென எம்மருங்கும் பறையறையப்பண்ணுவித்தார் 60.9.

## சங்கிலியார்

மலையான் மடந்தை மலர்ப்பாதம் மறவா அன்பால் வந்தநெறி தலையாம் உணர்வு வந்தணையத்தாமே யறிந்த சங்கிலியார் 35. 208, காதல் புரிந்து தவம்புரியுங் கன்னியார் 35. 222, பண்டுகயிலைத்திரு மலையிற் செய்யும் பணியின் பான்மை மனங்கொண்ட உணர்வுதலை நிற்பக் குலவு மலர்மென் கொடியனையார் 35. 223, அன்புநாரா அஞ்செழுத்து நெஞ்சுதொடுக்க அலர்தொடுத்தே......மின்போல் மறையுஞ் சங்கிலியார் 35. 226, பெருகுந்தவத்தால் ஈசர்பணி பேணுங் கன்னியார் 35. 229, உலகில் யாவருக்கும் எய்தவொண்ணு இருக்

*தவத்துக் கொம்பை* 35. 235, *தாவாத பெருந்தவத்துச் சங்கிலியார்* 35. 260.

சந்தனக் காப்பு

*ஆலவாயில் எந்தைக்கணி சந்தனக்காப்பிடை என்றும் முட்டா அந்தச்செயலின்*.........21. 10.

சமணசமயமும் சமணரும்

*கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயம்* 27. 37, *தவமென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும் அவமொன்று நெறி* 27. 47, *தவமென்று வினை பெருக்கிச் சார்பல்லா நெறி* 27. 52, *பொய்வாய்மை பெருக்கிய புன்சமயப் பொறியில் சமண் நீசர் புறத்துறையாம் அவ்வாழ்குழி* 27. 73, *தெளியாதொரு பொருளே பொய்யும் மெய்யும் ஆமென்னும் பொருள் மேற்கொள்ளும் புரைநெறி* 33.10, *படுபொருளின்றி நெல்லிற்பதடிபோல் உள்ளிலார் மெய் அடுபவர் பொருளை அத்திநாத்தி யென்றெழுதி* 34. 814, *தடுமாறும் நெறியதனைத் தவமென்று தம்முடலை அடுமாறு செய் தொழுகும் அமண்வலை* 56. 1, *புண்தலைவன் முருட்டமணர்* 27. 53, *பொய்தருமால் உள்ளத்துப் புன்சமணர்* 27. 61, *கொலையும் பொய்ம் மையு மிலவென்று கொடுமையே புரிவோர்* 27. 81, *அறந்துறந்து தமக்குறுதியறியாத புல்லறிவோர்* 27. 95, *உள்ள வாறறிகிலாதார்* 34. 800, *பருப்பொருளுணர்ந்தார்* 34. 806.

சமயகுரவர் கோயிலை வழிபட்டமுறை

*உருகிய அன்புறுகாதல் உள்ளுருகி நனைசரம் பெற்றாற்போல மருவு திருமேனியெலாம் முகிழ்த்தெழுந்த மயிர்ப் புளகம் வளர்க்கு நீராய் அருவிசொரி திருநயனத் தாரைத வெள்ளமிழிந்தலையநின்று பொருவில் பதிகம் போக மார்த்த பூண்முலையாள் என்றெடுத்துப் போற்றி* 34. 456, *அன்பினுக்களவு காணார் ஆனந்த வெள்ளமூழ்கி என்பு நெக்குருக நோக்கி இறைஞ்சி நேர்வீழ்ந்து நம்பர்முன்பு நிற் பதுவுமாற்றார் மொழிதடுமாற எத்தி மின்புரைசடையார் தம்மைப்பதி*

கங்கள் விளம்பிப்போந்தார் 34. 585, மருவிய ஏழிசைபொழிய மனம் பொழியும் பேரன்பால் பெருகியகண் மழைபொழியப் பெரும்புகலிப் பெருந்தகையார் உருகிய அன்புள்ளலைப்ப உமைதழுவக் குழைந்த வரைப்பருகிய மெய்யுணர்வினொடும் பரவியே புறத்தணைந்தார் 34. 997, கையுந்தலைமிசை புனையஞ்சலியன கண்ணும் பொழிமழை ஒழியாதே பெய்யுந்தகையன கரணங்களும் உடனுருகும் பரிவின பேறெய்தும் மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரு மின் தாழ் சடையொடு நின்றாடும் ஐயன் திருநடம் எதிர்கும்பிடுமவர் ஆர்வம் பெருகுத லளவின்றால் 27. 167, கண்டுதொழுது காசறுநிறி அங்கமெலாம்கொண்ட புளகங்களாக எழுந்தன்பு கூரக்கண்கள் தண்துளி மாரி பொழியத் திரு மூலட்டானர் தம்மைப்புண்டரிகக்கழல் போற்றித்திருத்தாண்டகம் புனைந்து 27. 222, காண்டலுங்தொழுது வீழ்ந்தடனெழுந்து கரையிலன்பென்பினை உருக்கப்பூண்ட ஐம்புலனில் புலப்படா இன்பம் புணர்ந்து மெய்யுணர்வினிற் பொங்க......அந்நிலைமை விளைவையார் அளவறிந்துரைப்பார் 35. 90.

## சமயத் தொண்டரைப் பயிற்றும் தொண்டு

திருத்தோணி நாயனார்க்கு நற்றிருப்பணியாயின நாளும் அன்பொடு செய்து மேய அத்திருத்தொண்டினில் விளங்குவார் விரும்பி வந்தணைவார்க்குத் தூய கைத்திருத்தொண்டினில் அவர்தமைத்துறை தொறும் பயில்விப்பார்44.2, நல்ல நந்தனவனப்பணி செய்பவர் நறுந்துணர்மலர் கொய்வோர்...திருமெழுக்கமைப்போர்கள்...திருமுறை எழுதுவோர் வாசிப்போர் 44. 3, இனைய பலதிருப்பணிகளில் அணைந்தவர்க்கேற்ற........குறையெலாம் முடித்து மேவிடச்செய்தே...... தொண்டரை ஆக்கி......வழிபடுந்தொழில் மிக்கார் 44. 4.

## சமயப் பொருள்களை நினைவூட்டும் உவமைகள்

புண்ணியம் திரண்டுள்ளது போல்வது கயிலைமலை 2. 2, பூதம் யாவையின் உள்ளலர்போதென......ஆரூர் மலர்ந்ததால் 2· 33, ஆளுடைய நாயகி உள் நெகிழ்கருணையின் ஒழுக்கம் போன்றது காவிரி 3. 6, அரனுக்கன்பர் ஆலினசிந்தைபோல அலர்ந்தன கதிர்கள்ளெல்

லாம் 3. 21, பத்தியின் பாலராகிப் பரமனுக்காளாம் அன்பர் தத்தமில் கூடினர்கள் தலையினல் வணங்குமாபோல்.........விளைந்தன சாலி யெல்லாம் 3. 22, நீற்றொளியால் நிறை தூய்மையால் புரந்த அஞ் செழுத்தோசை பொலிதலால்.........பாற்கடல் போல்வது (தேவா சிரிய மண்டபம்) 5. 3, பரன் அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர் நெஞ்சம் என்ன இருண்டது நீண்டவான் 6. 159, பாசப்பழிமுதல் பறிப்பார்போலப் பறித்தவைகறிக்கு நல்க 10. 21, மூட்டாதார் கொல்களத்தைவிட்டு நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்டபோதில் அலைப்பட்ட ஆர்வமுதற்குற்றம் போலாயினர் 15. 27, சினமொடுசெவர் ராய் திலவிய இருவினை வலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர் புலனுற மனனிடை தடைசெய்த பொறிகளினளவுளவே 16. 85, பேணுதத் துவங்களென்னும் பெருகு சோபானமேறி ஆணையாம் சிவத்தைச்சார அணைபவர்போல ஐயர் நீள்நிலை மலையை ஏறி 16. 103, ஊட்டியும் அரியா நின்ருர் உறுபிறப்பரிவார் ஒத்தார் 19. 17, செய்த விரைத்தாமமென மன்றல் மலர்த்துணர் தூக்கி மருங்கு தாழ் சடையார்போல் நின்ற நறுங்கொன்றை 20. 21, ஆங்கு வள ரெயிலினுடன் விளங்கும் வாயில் அப்பதியில் வாழ்பெரியோருள் ளம் போல ஓங்கு நிலைத்தன்மைய 25. 88, சந்திரகாந்தம்...... புனிற்றுமதி கண்டுருகிப்பொழிந்த நீரால்......அன்புருகி மெய் பொழியக்கண்ணீர் வாரும் அடியவரும் அனைய 25. 92, அடியார் தந்தூசுடைய துகள்மாசு கழிப்பார்போல் தொல்லைவினை ஆசுடைய மலமூன்றும் அணையவரும் பெரும் பிறவி மாசுதனை விடக்கழித்து 25·114, ஓதுகிடைசூழ் சிறுவர்களும் உதவும் பெருமை ஆசானும் போதின் விளங்கும் தாரகையும் மதியும்போல 26·3, அருட்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம் அன்பு செறிகடலுமாம் எனவும் ஓங் கும் பொருட்சமய முதற் சைவநெறி தான்பெற்ற புண்ணியக் கண் ணிரண்டெனவும் புவனமுய்ய இருட்கடுவுண் டவராருளும் அகில மெல்லாம் ஈன்றுள் தன் திருவருளும் எனவும் கூடித் தெருட்கலை ஞானக்கன்றும் அரசும் சென்று 27·185, அருளுடையார் உளமனைய தண்ணளித்தாய்.........குளிர்தூங்கும்.........தண்ணீர்ப்பந்தர் 30. 5, தாமரையும்......செழுஞ்சாமம் பாடுமால் 34.9, மாமறையோர்......

அறுவை உத்தரியந் தனிவிசும்பில் எறிந்தார்க்கும்......சிவாநந்தப் பெருக்காறுபோத......நுரைக்குமிழி யெழுந்திழிவனபோல் 34·95, வெண்தரளப் பந்தர்நிழல்......எடுத்த திருவடிநீழலென 34·395, (திருநீற்றுத் தொண்டர் குழாம்) புண்ணியத்தின் படையெழுச்சி போலெய்தும் பொலிவெய்த 34.650, இட்ட ஏடு மருவுறும் பிறவி யாற்றில் மாதவர் மனம் சென்றுற்றபோற் பொருபுனல் வைகையாற் றில் எதிர்ந்து நீர் கிழித்துப்போகும் 34.846, ஓங்கிய ஞானவெள்ளம் உள்நிறைந் தெழுவதென்ன...பாங்கொளி பரப்பிநின்றார் 34.1228, சங்கரனார் திருவருள்போல் தண்ணீரின் சுவை ஆர்ந்து 35.162, அக நோக்குங் குறிப்பேயன்றிப் புறநோக்குங் கண்டவுணர்வு துறந்தார் போல் பிறந்தபொழுதே கண்காணார் 37.1, பெருஞ் செல்வம்...அவர் இருவினைபோல் மாண்டது 51. 8, (திருநீற்றை வினையூட்டும் உவமை கள் என்ற தலைப்பையும் பார்க்க.)

## சாதுரியமான ஐயப்பாடுகள்

பேரழகு மூத்த வடிவேயோ...மூப்பெனுமதன் படிவமேயோ... ஐயமுற6. 32,எதிர்கொண்ட சீரடியாரவர்களோ நம்பியாரூரர் தாமோ முன்பிறைஞ்சினர் யாவரென்றறியா முறைமையால் 6.98, நாயகிக்கு மகிழ்ந்தறியவோ பிரியாநங்கைதா னறியாமையோ அறியோம்...தூர்த்த வேடமும் தோன்ற...வந்தார் 9·4, பொன்னிநீர் படிந்துவந்தாரோ... கங்கைநீர் தோய்ந்து வந்தாரோ 13·17, தம்பெருமான் அருளாலேயோ மேனியினிலேயும் அசைவினயர்வாலோ அறியோம்...உறக்கம் வந்த ணையு33·26, தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும் பிள்ளைமைதானோ... அம்மேயப்பா என்றென் றழைத்தருளி யழுதருள 34·63, மறிவண் கையார் அருளேயோ மலர்க்கண் துயில்வந் தெய்தியதால் 35.48, திரு விளையாட்டினை மகிழ்ந்தோ...சங்கிலியார் வழியடிமைப் பெருமையோ துஞ்சிருள் மீளவுமணைந்தார் 35·250, என்பூடுருக்கும் புலவியோ பிரிவோ இரண்டின் இடைப்பட்டார் 35. 315, நம்பிக்குத் தாமே பொன் கொடுப்பதலால் ஒருவர் கொடுப்பக்கொள்ள ஒண்ணாமைக் கது வாங்கிப் பெருகருளால் தாங்கொடுக்கப் பெறுவதற்கோ அது அறி யோம் 43. 165.

## சில அற்புத நிகழ்ச்சிகளின் காரணம்

*அன்பர்தம் அன்பிடுந் தட்டுக்கு முதல்வர்மட்டு நின்ற தட்டுஅரு ளொடுந் தாழ்வுறும் வழக்கால்...தாழ்ந்தது கோவணத் தட்டு* 13. 35, *கோவண மதுவும்...அடியவர் அடிமைத் தொண்டும் ஒத்தலால் ஒத்து நேர்நின்றதத் துலைதான்* 13. 44, *வேழம் திரிந்து மேற்கதுவ அச்சம் தாய் தலையன்பின் முன்பு நிற்குமே...தடக்கை...அணித்தார்* 14. 24, *நண்ணிய ஒருமையன்பின் நாருறு பாசத்தாலே திண்ணிய தொண்டர் பூட்டி இளைத்தபின் திறம்பிநிற்க ஒண்ணுமோ...அண்ணலார் நேரே நின்றார்* 17. 28, *பொடியார்க்குந் திருமேனிப் புனிதற்கு...முன்னை விடம் அமுதானால்...அடியார்க்கு நஞ்சமுதமாவதுதான் அற்புதமோ* 27. 105, *இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின் வருபவக் கட லில்வீழ் மாக்கள் ஏறிட அருளுமெய் யஞ்செழுத்தரசை இக்கடல்ஒரு கல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ* 27. 129, *கைத்தொண்டா கும்படிமையினால் வாசியில்லாக் காசுபடி பெற்றுவந்தார் வாகீசர்... திருமுலைப்பால் தேசமுய்ய உண்டவர்தாம் திருமாமகனார் ஆதலினால் காசு வாசியுடன் பெற்றார்* 27.260, *பயன்துய்ப்பான் தெண்ணீரணிந் தார்திருக்காப்பு நீக்கத் தாழ்க்க...இரக்கமொன் றில்லீரென் றுபாடி*27. 268, *ஆதிமந்திரம் அஞ்செழுத்தோதுவார் நோக்கும் மாநிரத்தினும் மற்றை மந்திர விதிவருமே...சாதனைகள் சாதியா வகைகண்டமண் குண்டர்கள் தளர்ந்தார்* 34. 698, *இட்ட ஏட்டினில்...பதிகம்... அட்ட மூர்த்தியைப் பொருளென உடைமையால்...தீயிடைப்பச்சை யாய் விளங்கியதன்றே* 34. 786, *ஆகமப்பொருளை...திருமூலர் வாக்கி னால் தமிழ்வகுப்ப...அவ்வுடலைக் கரப்பிக்க...ஈசருளென உணர்ந் தார்* 36. 23.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் புகழப்படும் வகை

*மேருவரையின் மேம்பட்ட தவத்தான்* 35. 239, *மிக்கவிழுத் தவவேந்தர்* 6. 130, *செய்தவப் பெரியோன்* 6. 105, *நீத்தாருந் தொடர்வரிய நெறிநின்றார்* 35. 134, *தம்பிரானைத் தன்னுள்ளந் தழீஇயவன் நம்பி ஆரூரன் நாம் தொழும் தன்மையான்* 2. 19, *எம்பி*

*ரான் அந்தமில்புகழ் ஆலால சுந்தரன்* 5. 11, *நுணங்கிய கேள்வி மேலோன்*6. 14, *எண்ணம்மிக்கான்* 6. 54, *விண்கொள்ளாப்பேரொளி யான்* 6. 143, *சென்றுநிடர்களைவார்* 78. 9, *நிகரில்லான்* 6.36, 6.75, *தமிழ்நாதன்* 6. 86, *ஞாலமுய்ய எழுந்தருளு நம்பி* 35. 337, *உடைய நம்பி* 6. 149, *தம்பிரான் தோழர்* 6. 129, *மாசிலா மரபில் வந்த வள்ளல்* 6. 40.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் பொன் பெற்ற இடங்கள்

*திருப்புகலூர்* 35. 50, *திருப்பாச்சிலாச்சிராமம்* 35. 82, *திருமுதுகுன்றம்* 35. 107, *திருஓணகாந்தன்றளி* 35. 191, *திருநாகைக் காரோணம்* 43. 63, *திருமுருகன்பூண்டி* 43. 171

சைவ சமயத்தின் அடிப்படைக் கோள்கைகள்

*செய்வினையும் செய்வானும் அதன் பயனும் கொடுப்பானும் மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள்...இவ்வியல்பு சைவ நெறி அல்லவற்றுக்கில்லை* 40. 5, *எல்லாம் உடைய ஈசனே இறைவன்...அல்லார் கண்டர் தமக்கிந்த அகிலமெல்லாம் ஆள்* 40. 7.

சைவமே வேத சாரம்

*கருத்தின் பயனும் எழுத்தஞ்சும்...வேதப் பயனும் சைவமும் போல்* 26. 9, *வேத உள்ளுறையாவன விரிபுனல் வேணி நாதர் தம்மையும் அவரடியாரையும் நயந்து பாதம் அர்ச்சனை புரிவதும் பணிவதும் என்றே* 32. 5, *தென்தமிழும் வடகலையும் தேசிகமும் பேசுவன மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக* 65. 2, *அருமறைப் பயனாகிய உருத்திரம்* 23. 7

சொல்லடுக்குகள் சில

*அல்ல...அல்ல* 3. 15, *ஆடும்...ஆடும்* 14. 4, *இளம்...இளம்* 6. 134, *எங்கும்...எங்கும்* 34. 13, 3. 28—33, *எல்லாம்...எல்லாம்* 3. 17, 27. 4, *ஒலிக்க...ஒலிக்க* 25. 113, *காட்டும்...காட்டும்* 18. 3, 27. 14, *சிவதா...சிவதா* 14. 16—18, *சூழும்...சூழும்* 14. 3, 22. 1,

பரவை...பரவை 6.148, பயிலும்...பயிலும் 33. 2, முத்து...முத்து 12. 2.

சொல்லழகும் பொருட்செறிவும்

மூப்பு வந்து தளர்வொடு சாய்ந்தும் அன்பு தம்பிரான் திறத்துச் சாயார் 8. 9, ஓலமென்றான் மயக்கறு மறை ஓலிட்டு மாலயன் தேடநின்றான் 9. 29, வளஞ் சுருங்கவும்...மனஞ் சுருங்குதலின்றி 10. 7, புன்செய்க் குறும்பயிர் தடவிப் பாசப் பழிமுதல் பறிப்பார் போலப் பறித்து 10. 21, நெஞ்சில் வாலிய நேசங் கொண்டு மலர்க்கையில் தண்டும் கொண்டு 14. 10, களிற்றொடும் பாகர் வீழ்ந்த படுகளம் குறுகச் சென்றான்...அடுகளிறென்ன நின்ற அன்பரை முன்பு கண்டான் 14. 34, மண்படுவான் கண்படான் 15. 30, ஊட்டியும் அரியா நின்றார் உறுபிறப்பரிவார் ஒத்தார் 19. 17, சிவம்பெருக்கும் திருவாரூர் திருவாரூர் 27. 12, உயிர்தாங்கி அம்பொன்மணி நூல் தாங்காதனைத்துயிர்க்கு மருள் தாங்கி 27. 34, முதலை வாய்நின்று மீட்டார் கழல்கள் நினைவாரை மீளாவழியின் மீட்பனவே 33. 33, ஒருபிறப்பும் எய்தாமையுடையார்தம்மை......இருபிறப்பின் நிலைமையினைச் சடங்கு காட்டி எய்துவிக்கும் 34. 264, கைதவம் பேசமாட்டேனென்று கைதவனுஞ் சொன்னான் 34. 749, பயத்தால் நெஞ்சு சோரவும் பீலிகை சோர்ந்திலர் 34. 788, பிள்ளையார்......சிவிகை மேலேறிச் சென்றார்...மன்னன்மா ஏறிச் சென்றான்...உள்ளவாறறிகிலாதார் உணர்வுமாலேறிச் சென்றார். 34. 800, எழிசை பொழிய மனம்பொழியும் பேரன்பால் பெருகிய கண்மழைபொழிய 34. 997, அஞ்செழுத்து நெஞ்சுதொடுக்க அலர் தொடுத்தே 35. 226, என்னுருயிரும் எழில்மலருங் கூடப்பிணைக்குமிவள் 35. 230, கங்குல் பகலாய்ப்பகல் கங்குலாகிக்கழியா நாளெல்லாம்......புலர்வார் 35. 313, கூனுங்குருடுந்தீர்த்தேவல் கொள்வார் குலவுமலர்ப்பாதம் யானும் பரவித்தீர்க்கின்றேன் எழுபிறப்பின் முடங்குகூன் 45. 9, திருவாரூர்க் குளத்திலெடுத்தார் வினையின் குழிவாய் நின்றெனை யெடுத்தார் 53. 9, வேடர்வழிபறிக்கப்பறி யுண்டவரொம்பழவினை வேர் பறிப்பார் 58. 7 (இவைபோன்ற சொற்றொடர்கள் எண்ணிலாதன உள்ளன)

### தமிழும் தமிழ் நாடும்

ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ் 21. 3, அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின்துறைவெல்ல 34. 24, பொருள்பொழியும் பெருகன்பு தழைத்தோங்கிப் புவி ஏத்தத் தெருள் பொழிவண்தமிழ் நாட்டு 42. 35.

### திருச்சிற்றம்பலம்

அருமறை முதலில் நடுவினில் கடையில் அன்பர்தம் சிந்தையில் அலர்ந்த திருவளர் ஒளிசூழ்திருச்சிற்றம்பலம் 6. 104, அருமறை சிரத்தின்மேலாம் சிற்பரவியோமமாகுந் திருச்சிற்றம்பலம் 7. 2, அண்ணலார்தமக்களித்த மெய்ஞ்ஞானமேயான அம்பலம் 34. 160, அறிவின் எல்லையாய திருத்தில்லை 43. 61.

### திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் புகழப்படும்வகை

குறைவிலா நிறைஞானக் கொண்டலார் 34. 108, மாமறை முதற்கலை அகிலமும் ஓதாதுணர்ந்த முத்தமிழ்விரகன் 34. 223, ஓதாது ஞானமெலா முணர்ந்தார் 34. 489. தெருளுமெய்க்கலை விளங்கவும் பாருளோர் சிந்தையிருளும் நீங்கவும் எழுதுசொன் மறையளிப்பவர் 34. 224, வண் தமிழால் எழுதுமறை மொழிந்தபிரான் 27. 180, புதிய செந்தமிழ்ப் பழமறை மொழிந்த பூசுரனார் 32. 33, ஆதிஞானம் மலரும் திருவாக்குடை வள்ளலார் 34. 845, மதுர முத்தமிழ்வாசகர் 34. 378, சந்தமுத்தமிழ் விரகர் 34. 507, இயலிசைத்தலைவனார் 34. 361, சராசரங்களெலாம் சிவம்பெருக்கும் பிள்ளையார் 34. 26, சைவசிகாமணியார் 34. 459, நம் மலத்துயர்தீர்க்க வந்தருளிய ஞானச்செம்மலார் 34.417,இந்த மாநிலத்தின் இருள்நீங்கிட வந்த வைதிகமாமணி 34. 190, திருத்தொண்டின் உண்மை நோக்கி இருள்கெடமண்ணில் வந்தார் 34. 870, திருத்தொண்டென்னும் வான்பயிர்தான் ஓங்குதற்குச்சூழும் பெருவேலி 34. 942, வேதமொடு சைவநெறி விளங்கவந்த கவுணியனார் 34. 985, ஏழிசையும் பலகலையும் எவ்வுலகுந்தனித்தனியே வாழவருமவர்

34. 48, வையமெலாமுய்யவரு மறைச்சிறுவர் 34. 103, மண்ணெலாம் உய்ய வந்த வள்ளலார் 34. 862, பரசமயம் நிராகரித்து நீறாக்கும் புனைமணிப்பூண் காதலன் 34. 19, வைதிகசூளா மணியை மாதவத்தோர் பெருவாழ்வை மைதிகழும் திருமிடற்றார் அருள்பெற்ற வான் பொருளை 34. 873, தவநெறி வளர்க்கவந்தார் 34. 1244, விடுத்த வேட்கையர் 34. 1091, புண்ணிய விளைவுபோல்வார் 34. 1225, ஏக மாஞ் சிவமெய்ஞ்ஞானம் இசைந்தவர் 34. 1237, பூசுரர்தம் சிங்கமனையார் 34. 172, மறையனைத்தும் ஒருவடிவாமென நிறை மதிப்பிள்ளை 34. 188, சைவமாமறைத் தலைவர் 34. 221, அருங்கலைக்கோன் 34. 197. ஒரு பிறப்பு மெய்தாமையுடையார் 34. 264, கற்றவர்கள் தொழுதேத்தும் காழிவேந்தர் 34. 481, அஞ்செழுத்தின்மெய்யுணர்ந்தவர் 34. 512, பேருணர்விற் பொலிகின்ற பிள்ளையார் 34. 72.

## திருத்தொண்டத் தொகை

ஈசனடியார் பெருமையினை எல்லாவுயிருந்தொழ எடுத்துத்தேச முய்யத்திருத்தொண்டத் தொகை முன்பணித்த 26. 60, ஞாலமுய்ய நாமுய்ய நம்பி சைவ நன்னெறியின் சீலமுய்யத் திருத்தொண்டத் தொகை முன்பாட 12. 9, தென்தமிழ்ப் பயனாயுள்ள திருத்தொண்டத்தொகை 7. 9, மாதவம் செய்ததென்றிசை வாழ்ந்திட தீதிலாத் திருத்தொண்டத் தொகைதர 2. 25, சுந்தரத் திருத்தொண்டத் தொகைத்தமிழ் 5. 11, புற்றிடத் தெம்புராணர் அருளினாற் சொற்ற மெய்த்திருத்தொண்டத் தொகை 2. 38, மூலமான திருத்தொண்டத் தொகை 78. 1.

## திருத்தொண்டர் இலக்கணமும் பெருமையும்

சிவனார் செய்ய கழல்பற்றி எப்பற்றினையும் அற எறிவார் 12. 4, எப்பற்றினையு மறுத் தேறுகைத் தேறுவார்தாள் மெய்ப் பற்றெனப் பற்றி விடாத விருப்பின் மிக்கார் 21. 8, மனம் முதலாயின மூன்றும் அண்ணலார் சேவடியின் சார்வாக அணைவிப்பார் 25. 112, களவு பொய்காமம் கோபம் முதலிய குற்றங் காய்ந்தார்31. 2, துன்றும் புலனைந்துடன் ஆறு தொகுத்தகுற்றம் வென்று......இன்பமுற்றார்

39. 5, கோதிலாத குணப் பெருங்குன்றனார் 5. 7, நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலும் நடந்தாலும்......மன்றாடு மலர்ப்பாத மொருகாலு மறவாமை......குணமிக்கார் 64. 7, பூசுநீறு போலுள்ளும் புனிதர்கள் 5. 6, ஈசனுக்கே யன்பானார் யாவரையுந் தாங் கண்டால்...... ஆவின் பின் கன்றணைந்தாற் போலணைந்து......இனியனவே பேசுவார் 64. 1, ஈசனையே பணிந்துருகி இன்ப மிகக் களிப்பெய்திப் பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை......உடல் கம்பித்திடுவோர் 64. 6, கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார் 5. 8, கூடு மன்பினிற் கும்பிடலே யன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினார் 5. 8.

## திருநாவுக்கரசு சுவாமிகள் புகழப்படும் வகை

உடைய அரசு உலகேத்தும் உழவாரப் படையாளி 6. 83, அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ உலகில் வருமிருள் நீக்கி ஒளிவிளங்கு கதிர்போல மலரும் மருணீக்கியார் 27. 18, பரசமயப் பற்றறுத்த பான்மையினார் 27. 91, கிறைதவத்தோர் 27. 92, இன்தமிழ்க்கு மன்னனை வாகீசத் திருமுனி 27. 147, தமிழ்மொழித் தலைவர் 34. 598, தேச முய்யவந்தவர் 31. 21, வாக்கின் பெருவிறல் மன்னர் 34. 269, அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகும் மெய்த்தன்மை யுணர்வுடைய விழுத்தவத்து மேலோர் 27. 422, அன்புறு பத்தி வடிவான வாகீசர் 27. 425, ஆண்ட அரசு 27. 232, 429.

## திருநீற்றுச் செல்வம்

உறுவது நீற்றின் செல்வம்......பெறுவது சிவன் பாலன்பாம் பேறு 7. 6, ஆய்ந்த மெய்ப்பொருள் நீறெண வளர்க்கும் அக்காப்பு 32. 3, தூய்மை திருநீற்றடைவே மெய்ப் பொருள் 33. 5, ஆதிமுதல்வர் திருநீற்றின் அடைவே பொருள் 38. 3.

## திருநீற்றை நினைவூட்டும் உவமைகள்

பொன்னின் வெண்திருநீறு புனைந்தெனப் பன்னு நீள்பனி மால்வரை 2. 1, பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள் 5. 6, நல்லோர்

மனம்போல் அவாணிந்த சேமம் நிலவுதிருநீற்றின் சிறந்த வெண்மை 22. 2, வண்டலர் கைதை துன்று நீறு புனை மேனியவாகித் தூயநீறு புனை தொண்டர்களென்ன 6. 96, அண்ணல் வெண்ணீற்றின் பேரொளி போன்றது நீள் நிலா 6. 162, கிளர்ந்த திருநீற்றொளியிற் கெழுமிய நண்பகலும் 34. 6, திருநீற்றின் சோதி நல்லொளி வட்ட மாகி நண்ணிமேல் வருவதென்ன வில்வளர் தரளக்கோவை வெண் குடை நிழற்ற 34. 743, சந்தமென் மலர்த்தாதணி நீறு மெய்தரித்து ...கண்டிகை பூண்டு...எழுந்தது மருத்து 34. 1194.

## திருமகளனைய பெண்மணிகள்

சடங்கவி மகள் 6. 7, திருநீலகண்டர் மனைவி 8. 5, இயற்பகை யார் மனைவி 9. 9, இளையான்குடிமாறர் மனைவி 10. 24, மெய்ப் பொருளார் மனைவி 11. 14, மானக்கஞ்சாறர் புதல்வி 18. 16, திலக வதியார் 27. 17, 31, காரக்காலம்மையார் 30. 2, 19, 42, மங்கையர்க் கரசியார் 34. 647, 72. 1, பூம்பாவை 34. 1090, திருவெண்காட்டு நங்கை 42. 57.

## திலகவதியார்

செங்கமல நிரையிதழின் அகவயினில் திகழவருந் திருவனைய திலகவதியார் 27. 17, செம்மலர் மேற்றிருவனைய திலகவதியார் 27. 31, அணங்கனைய திலகவதியார் 27. 24, அம்பொன்மணி நூல்தாங்கா தனைத் துயிர்க்குமருள் தாங்கி இம்பர் மனைத்தவம் புரிந்து திலகவதி யாரிருந்தார் 27. 34, தூண்டுதவ விளக்கனையார் 27. 46, மன்னு தபோதனியார் 27. 48, 66, அருந்தவத்தார் 27. 56, உயர் தவத்தோர் 27. 65, தாபதியார் 27. 78.

## துயில்விட்டெழும்முறை

மாலையாமம் புலர்வுறும் வைகறை வேலைசெய்வினைமுற்றிவெண் ணீறணி கோலமேனியராய்க் கைம்மலர் குவித்தேதல அஞ்செழுத் தோதி எழுந்தனர் 34. 208.

தேவாரப் பாடல்கள் சிலவற்றின் கருத்துகூறல்

9. 2, 11. 15, 27. 75, 28. 2, 34. (75, 77, 78, 79, 174, 486, 557, 705, 820 - 843, 965, 1009), 35. 53, 37. 1, 43. (25, 33, 35, 56)

தொண்டர்க்குற்ற தீங்கைக்கூற வாக்கேழாமை

*தான் முன் நினைந்த அப்பரிசே செய்ய* 11. 15, *தன் கருத்தே முற்றுவித்தான்* 15. 40, *மன்னவன் சொன்னபடி முடித்தார் அப்பதகர்* 27. 124, *வந்து தந்தொழில் புரிந்தனர்* 34. 700.

நாயனூர் என்ற சொல்வழக்கு

*கடவுளைக் குறித்தல்* 16. 110, 123, 173, 180, 28. 9, 32. 7, 34. 244, 527, 35. 16, 328, 384, 44. 2, 52. 7, 57. 7, *தொண்டரைக் குறித்தல்* 1. 4, 11. 4, 13. 33, 34. 802, 34. 1013, 43. 86.

நாயன்மார் நாம மந்திரம்

*மீனவன் செவியினூடு...ஞானசம்பந்தர் என்னும் நாம மந்திரமுஞ் செல்ல...அயர்வு தன்னை அகன்றிட* 34. 721, *அரசின் நாமம் ஏத்தி எப்பொருளும்நாளும் அவ்வருந்தவர் பொற்றுளே எனவுணர்ந்தடைவார்* 31. 44, *நம்பிஆரூரர் நாமம் நவின்ற நலத்தாலே ஆளும் படியால் அணிமாதி சித்தியான அணைந்ததற்பின்* 29. 6

பஞ்சகவ்விய அபிடேகம்

*வேணித் திருமுடிமேல்...திருமஞ்சனம் ஐந்துமளிக்கும்* 26. 20, *ஆன்பெற்ற அஞ்சேந்திச் சென்றூர்* 19. 14.

பஞ்சநாதங்களின் முழக்கம்

6. 69, 16. 101, 27. 428, 49. 19, 78. 34.

பலவகைக் குறிப்புகள்

*அட்டமா சித்திகள்* 36. 2, *அட்டமாய்விடுதல்* 16. 76, *அணங்கு சார்ந்தாள்* 16. 49, *அத்தாணி மண்டபம்* 47. 13, *அந்தணர் பேரவை*

பனைமரங்கட்கும் சிவப்பேறு

*பிள்ளையார் தந்திருவாக்கிற் பிறத்தலால் அத்தாலமும் முன் புள்ள பாசம் விட்டகல ஒழியாப் பிறவிதனை யொழித்துக் கொள்ளு நீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடின* 34. 983.

மரபுக் கேற்ற தொண்டு

*அளவிலா மரபின் வாழ்க்கை மட்கலம் அமுதுக் காக்கி...அடியார்க் கென்றும்...ஓடளித் தொழுகும் நாளில்* 8. 3, *வருபிறப்பின் வழிவந்த அறம்புரி கொள்கையாரே* 24. 12, *தம்மறம் புரிமரபினில் தரும் பெருந்தொண்டு மெய்ம்மையே புரிஅதிபத்தர்* 49. 20, *வருமரபில் உள்ளோர்பால் எண்ணெய்மாறிக் கொணர்ந்து...பணிசெய்வார்* 51. 9, *உடையொடு நல்ல கீளும் ஒப்பில் கோவணமும் நெய்து... அளித்து* 73. 4.

மனம் வாக்குக் காயங்கள் இறைபணி நிற்றல்

*மனத்தின் செய்கை அரனடிப் போதுக் காக்கி ஓங்கிய வாக்கின் செய்கை உயர்ந்த அஞ்செழுத்துக் காக்கித் தாங்கு கைத்தொழிலின் செய்கை தம்பிரான் அடியார்க்காக*...73. 3.

முற்பிறவி கூறப்படும் இடங்கள்

2. 27, 6. 67, 131, 27. 48, 49, 35. 207, 74. 8.

முற்பிறவி நினைவு

35. 229, 74. 12

மூன்று மலங்கள்

6. 92, 16. 154, 27. 129, 42. 35, 69. 6.

வரலாறுகள் சில

*அகத்தியர்காவிரியைத் தோற்றுவித்தல்* 3. 2, *அம்பலமுகட்டிற் பாக்கொங்குப் பொன்னால் ஆதித்த சோழன் வேய்தல்* 60. 3, *இமய*

*மலையிற் சோழன் புலிக்குறிபொறித்தல்* 3. 1, 14. 2, 47. 1, *இலக்குமி திருவாரூரில் வழிபட்டது.* 4. 1, *உபமன்னியமுனிவர் கிருஷ்ணனுக்குச் சிவதீக்ஷை செய்வித்தது.* 2. 14, *உபமன்யர் திருப்பாற் கடலுண்டது* 2. 15, *உமையம்மை காஞ்சிபுரத்தில் சிவபூசை செய்தது* 25 - 52 - 68, *உமையம்மை முப்பத்திரண்டறம் வளர்த்தது* 25. 70, 71, 35. 284, *உறையூர்ச் சோழன் ஆற்றில்விழுந்த முத்தாரம் திருமஞ்சனக் குடத்திற்புகுந்து அரன்முடி மீதேறியது* 25. 76, 77, *எழுத்தறியும் பெருமான் ஒற்றியூர் நீங்கலென்றெழுதியது* 25. 39, 35. 204, *பெண்ணையாறு துறையூரின் தெற்கிலிருந்தது* 6. 81, 82, *காஞ்சிபுரத்தைக் கரிகாற்பெருவளத்தான் புதுக்கியது* 25. 85, *சிபிச் சோழன்* 74. 1, *சிவபூசை செய்து பரசுராமன் பரசு பெற்றது* 12. 1, *சேக்கிழாருக்கு இறைவன் அடியெடுத்துக்கொடுத்தது* 1. 9.

வழிபாட்டிற் கண்ணீரும் கம்பலையும்

16. (106, 113, 173), 27. (72, 140, 167, 171, 176, 186, 222. 225, 238, 253, 309, 316, 323, 335, 346, 380, 387, 411), 34, (161, 220, 227, 303, 368, 414, 421, 433, 456, 470, 490, 584, 865, 881, 902, 971, 976, 994, 997, 1024, 1032, 1124) 35. (84, 89, 113, 141, 182 194), 43. (86, 89), 64. 6.

வள்ளலார் என்ற சொல் வழக்கு

*கடவுளைக் குறித்தல்* 13. 49, 16. 133, 34. 59, 206, *தொண்டரைக்குறித்தல்* 9. 13, 10. 17, 16. 66, 180, 18. 19, 21, 20. 29, 21. 34, 26. 31, 27. 242, 397, 34 (143, 256, 258, 315, 406, 439, 458, 525, 719, 800) 35. 409, 41. 6, 42. 54, 59.

வானவர்கள் பூமாரி பெய்த சந்தர்ப்பங்கள்

4. 45, 6. 69, 8. 39, 9. 35, 13. 45, 14. 49, 16. 14, 16. 184, 17. 29, 18. 31, 20. 41, 24. 33, 25. 126, 26. 57, 27. 428, 30. 51, 34. (80, 105, 217, 848, 1093), 35. (135, 266, 405), 37. 20, 47. 40, 49. 18, 59. 11, 78. 12, 78. 34.

விளையாட்டு வகைகள்

3. 16, 16. 4, 30. 5, 34. 45—52, 43. 126, 155.

வேள்வியிற் சிறந்தது யாது ?

*தில்லைசூழ் எல்லையில் மறையவர் பயில் வேள்விச்சிவம் தரும்பய னுடைய ஆகுதிகளின் செழும்புகை* 34. 152.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பெரிய புராணம்

என வழங்கும்

# திருத்தொண்டர் புராணம்

## பாயிரம்

### வாழ்த்து

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம். க

ஊன டைந்த உடம்பின் பிறவியே
தான டைந்த உறுதியைச் சாருமால்
தேன டைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மாந டஞ்செய் வரதர்பொற் றாள்தொழ. உ

எடுக்கும் மாக்கதை யின்தமிழ்ச் செய்யுளாய்
நடக்கும் மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீள்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம். ங

### திருக்கூட்டம்

மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயும் நாயன்மார் தூய சொல்மலர்

பொதிகலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே. ௪

## அவையடக்கம்

அளவி லாத பெருமைய ராகிய
அளவி லாஅடி யார்புகழ் கூறுகேன்
அளவு கூட உரைப்பரி தாயினும்
அளவி லாசை துரப்ப அறைகுவேன். ௫

தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ருஞ்சீர் புகலலுற் றேன்முற்றப்
பெருகு தெண்கட லூற்றுண் பெருநசை
ஒருசு ணங்கனை ஒக்குந் தகைமையேன். ௬

செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவருங் கொள்வரால்
இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினும்
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால். ௭

மேய இவ்வுரை கொண்டு விரும்புமாம்
சேய வன்திருப் பேரம்ப லம்செய்ய
தூய பொன்னணி சோழன்நீ டூழிபார்
ஆய சீர்அந பாயன் அரசவை. ௮

அருளின் நீர்மைத் திருத்தொண் டறிவரும்
தெருளின் நீரிது செப்புதற் காமெனின்
வெருளின் மெய்ம்மொழி வான்நிழல் கூறிய
பொருளின் ஆகும் எனப்புகல் வாமன்றே. ௯

## நூற்பெயர்

இங்கிதன் நாமம் கூறின் இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டில் மாக்கள் சிந்தையுள் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர் புராணம் என்பாம்.



முதற் காண்டம்

# திருமலைச் சருக்கம்

## உ. திருமலைச் சிறப்பு

பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னும் நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கும் அறிவரி யானென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை. க

அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலின்
நண்ணும் மூன்றுல குநான் மறைகளும்
எண்ணில் மாதவஞ் செய்யவந் தெய்திய
புண்ணி யந்திரண் டுள்ளது போல்வது. உ

நிலவு மெண்ணில் தலங்களும் நீடொளி
இலகு தண்தளி ராக எழுந்ததோர்
உலக மென்னும் ஒளிமணி வல்லிமேல்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை. ங

மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர்
கான வீணையின் ஓசையும் காரெதிர்
தான மாக்கள் முழக்கமும் தாவில்சீர்
வான துந்துபி ஆர்ப்பும் மருங்கெலாம். ச

பனிவி சும்பில் அமரர் பணிந்துசூழ்
அனித கோடி அணிமுடி மாலையும்
புனித கற்பகப் பொன்னரி மாலையும்
முனிவர் அஞ்சலி மாலையும் முன்னெலாம். ரு

நீடு தேவர் நிலைகளும் வேண்டிடின்
நாடும் ஐம்பெரும் பூதமும் நாட்டுவ
கோடி கோடி குறட்சிறு பூதங்கள்
பாடி ஆடும் பரப்பது பாங்கெலாம். ௬

நாய கன்கழல் சேவிக்க நான்முகன்
மேய காலம் அலாமையின் மீண்டவன்
தூய மால்வரைச் சோதியில் மூழ்கியோன்
றூய அன்னமும் காணா தயர்க்குமால். ௭

*காதில்வெண் குழையோன் கழல்தொழு நெடியோன் காலம்பார்த் திருந்ததும் அறியான், சோதிவெண் கயிலைத் தாழ்வரை முழையில் துதிக்கையோன் ஊர்தியைக் கண்டு, மீதெழு பண்டைச் செஞ்சுட ரின்று வெண்சுட ரானதென் றதன்கீழ், ஆதிவ னமதாய் இடக்கலுற் றானென் றதனைவந் தணைதரும் கலுழன். ௮

*அரம்பைய ராடல் முழவுடன் மருங்கில் அருவிகள் எதிரெதிர் முழங்க, வரம்பெறும் காதல் மனத்துடன் தெய்வ மதுமலர் இருகையும் ஏந்தி, நிரந்தரம் மிடைந்த விமானசோ பான நீடுயர் வழியினால் ஏறிப், புரந்தரன் முதலாம் கடவுளர் போற்றப் பொலிவதத் திருமலைப் புறம்பு. ௯

*வேதநான் முகன்மால் புரந்தரன் முதலாம் விண்ணவர் எண்ணிலார் மற்றும், காதலால் மிடைந்த முதற்பெருந் தடையாம் கதிர்மணிக் கோபுரத் துள்ளான், பூதவே தாளப் பெருங்கண நாதர் போற்றிடப் பொதுவில் நின்றாடும், நாதனார் ஆதி தேவனார் கோயில் நாயகன் நந்தியெம் பெருமான்.

*நெற்றியிற் கண்ணர் நாற்பெருந் தோளர் நீறணி மேனியர் அனேகர், பெற்றம்மேல் கொண்ட தம்பிரான் அடியார் பிஞ்ஞகன் தன்னருள் பெறுவார், மற்றவர்க் கெல்லாம் தலைமையாம் பணியும் மலர்க்கையில் சுரிகையும் பிரம்பும், கற்றைவார் சடையான் அருளினால் பெற்றான் காப்பதக் கயிலைமால் வரைதான். ௧௧

*கையில்மான் மழுவர் கங்கைசூழ் சடையில் கதிரிளம் பிறைநறுங் கண்ணி, ஐயர்வீற் றிருக்குந் தன்மையி னாலும் அளப்பரும் பெருமையி னாலும், மெய்யொளி தழைக்குந் தூய்மையி னாலும் வென்றிவெண் குடைஅந பாயன், செய்ய கோல் அபயன் திருமனத் தோங்கும் திருக்கயி லாயநீள் சிலம்பு. கஉ

அன்ன தன்திருத் தாழ்வரை யின்னிடத்
தின்ன தன்மையன் என்றறி யாச்சிவன்
தன்னை யேஉணர்ந் தார்வம் தழைக்கின்றான்
உன்ன ருஞ்சீர் உபமன் னியமுனி. கந

யாத வன்துவ ரைக்கிறை யாகிய
மாத வன்முடி மேல்அடி வைத்தவன்
பூத நாதன் பொருவருந் தொண்டினுக்
காதி அந்தம் இலாமை அடைந்தவன். கச

அத்தர் தந்த அருட்பாற் கடலுண்டு
சித்த மார்ந்து தெவிட்டி வளர்ந்தவன்
பத்த ராய முனிவர்பல் லாயிரர்
சுத்த யோகிகள் சூழ இருந்தழி. கரு

அங்கண் ஓரொளி ஆயிர ஞாயிறு
பொங்கு பேரொளி போன்றமுன் தோன்றிடத்
துங்க மாதவர் சூழ்ந்திருந் தாரெலாம்
"இங்கி தென்கொல் அதிசயம்" என்றலும். கசு

அந்தி வான்மதி சூடிய அண்ணல்தாள்
சிந்தி யாஉணர்ந் தம்முனி "தென்திசை
வந்த நாவலர் கோன்புகழ் வன்தொண்டன்
எந்தை யார்அரு ளாலணை வான்"என. கஎ

கைகள் கூப்பித் தொழுதெழுந் தத்திசை
மெய்யில் ஆனந்த வாரி விரவிடச்

---

*இவை சிற்சில பிரதிகளிலில்லை. "காதில் வெண்குழையோன்" என்னும் பாடல் மட்டும் வெள்ளிப்பாடல் என்று காஞ்சி சபாபதி முதலியார் பதிப்பில் குறிக்கப்பட்டிருக்கிறது.

செய்ய நீள்சடை மாமுனி செல்வுழி
ஐயம் நீங்க வினவுவோர் அந்தணர். ௧௮

"சம்பு வின்னடித் தாமரைப் போதலால்
எம்பி ரானிறைஞ் சாயிஃதென்" எனத்
"தம்பி ரானைத்தன் உள்ளம் தழீஇயவன்
நம்பி ஆரூரன் நாம்தொழும் தன்மையான்." ௧௯

என்று கூற இறைஞ்சி இயம்புவார்
"வென்ற பேரொளி யார்செய் விழுத்தவம்
நன்று கேட்க விரும்பும் நசையினோம்
இன்றெ மக்குரை செய்தருள்" என்றலும். ௨௦

உள்ள வண்ணம் முனிவ னுரைசெய்வான்
"வெள்ள நீர்ச்சடை மெய்ப்பொரு ளாகிய
வள்ளல் சாத்தும் மதுமலர் மாலையும்
அள்ளும் நீறும் எடுத்தணை வானுளன்.  ௨௧

அன்ன வன்பெயர் ஆலால சுந்தரன்
முன்னம் ஆங்கொரு நாள்முதல் வன்தனக்
கின்ன ஆமெனும் நாண்மலர் கொய்திடத்
துன்னி னன்நந் தனவனச் சூழலில். ௨௨

அங்கு முன்எமை ஆளுடை நாயகி
கொங்கு சேர்குழற் காம்மலர் கொய்திடத்
திங்கள் வாள்முகச் சேடியர் எய்தினர்
பொங்கு கின்ற கவினுடைப் பூவைமார். ௨௩

அந்த மில்சீர் அனிந்திதை ஆய்குழல்
கந்த மாலைக் கமலினி என்பவர்
கொந்து கொண்ட திருமலர் கொய்வுழி
வந்து வானவர் ஈசர் அருளென, ௨௪

மாத வம்செய்த தென்திசை வாழ்ந்திடத்
தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போது வான்அவர் மேல்மனம் போக்கிடக்
காதல் மாதரும் காட்சியில் கண்ணினர். ௨௫

முன்னம் ஆங்கவன் மொய்ம்முகை நாண்மலர்
என்னை ஆட்கொண்ட ஈசனுக் கேய்வன
பன்ம லர்கொய்து செல்லப் பனிமலர்
அன்னம் அன்னவ ருங்கொண் டகன்றபின். ௨௬

ஆதி மூர்த்தி அவன்திறம் நோக்கியே
'மாதர் மேல்மனம் வைத்தனை, தென்புவி
மீது தோன்றிஅம் மெல்லிய லாருடன்
காதல் இன்பம் கலந்தணை வாய்' என. ௨எ

கைக ளஞ்சலி கூப்பிக் கலங்கினான்
'செய்ய சேவடி நீங்குஞ் சிறுமையேன்
மையல் மானுட மாய்மயங் கும்வழி
ஐய னே!தடுத் தாண்டருள் செய்'என. ௨அ

அங்க ணாளன் அதற்கருள் செய்தபின்
நங்கை மாருடன் நம்பிமற் றத்திசை
தங்கு தோற்றத்தில் இன்புற்றுச் சாரு" மென்
றங்க வன்செயல் எல்லாம் அறைந்தனன். ௨௯

அந்த ணாளரும் ஆங்கது கேட்டவர்
"பந்த மானுடப் பாற்படு தென்திசை
இந்த வான்திசை எட்டினும் மேற்பட
வந்த புண்ணியம் யாதெ" ன மாதவன். ௩௦

"பொருவ ருந்தவத் தான்புலிக் காலனும்
அருமு னிஎந்தை அர்ச்சித்து முள்ளது
பெருமை சேர்பெரும் பற்றப் புலியூரென்
றொருமை யாளர்வைப் பாம்பதி ஓங்குமால். ௩௧

அத்தி ருப்பதி யில்நமை ஆளுடை
மெய்த்த வக்கொடி காண விருப்புடன்
அத்தன் நீடிய அம்பலத் தாடுமற்
றித்தி றம்பெற லாம்திசை எத்திசை. ௩௨

பூதம் யாவையின் உள்ளலர் போதென
வேத மூலம் வெளிப்படு மேதினிக்

காதல் மங்கை இதய கமலமாம்
மாதொர் பாகனார் ஆரூர் மலர்ந்ததால். ௩௩

எம்பி ராட்டிஇவ் வேழுல கீன்றவள்
தம்பி ரானைத் தனித்தவத் தாலெய்திக்
கம்பை யாற்றில் வழிபடு காஞ்சியென்
றும்பர் போற்றும் பதியும் உடையது. ௩௪

நங்கள் நாதனும் நந்தி தவஞ்செய்து
பொங்கு நீடரு ளெய்திய பொற்பது
கங்கை வேணி மலரக் கனல்மலர்
செங்கை யாளர் ஐயாறும் திகழ்வது. ௩௫

தேசம் எல்லாம் விளக்கிய தென்திசை
ஈசர் தோணி புரத்துடன் எங்கணும்
பூச னைக்குப் பொருந்தும் இடம்பல
பேசில் அத்திசை ஒவ்வா பிறதிசை'' ௩௬

என்று மாமுனி வன்தொண்டர் செய்கையை
அன்று சொன்ன படியால் அடியவர்
தொன்று சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
இன்றென் ஆதர வாலிங் கியம்புகேன். ௩௭

மற்றி தற்குப் பதிகம்வன் தொண்டர்தாம்
புற்றி டத்தெம் புராணர் அருளினால்
சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகையெனப்
பெற்ற நற்பதி கந்தொழப் பெற்றதாம். ௩௮

அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை
நந்தம் நாதனும் நம்பியாண் டார்நம்பி
புந்தி ஆரப் புகன்ற வகையினால்
வந்த வாறு வழாமல் இயம்புவாம். ௩௯

உலக முய்யவும் சைவம்நின் றோங்கவும்
அலகில் சீர்நம்பி ஆரூரர் பாடிய
நிலவு தொண்டர்தம் கூட்டம் நிறைந்துறை
குலவு தண்புனல் நாட்டணி கூறுவாம். ௪௦



# ௩. திருநாட்டுச் சிறப்பு

பாட்டியல் தமிழுரை பயின்ற எல்லையுள்
கோட்டுயர் பனிவரைக் குன்றி னுச்சியில்
சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி
நாட்டியல் பதனையான் நவில லுற்றனன். ௧

ஆதிமா தவமுனி அகத்தி யன்தரு
பூதநீர்க் கமண்டலம் பொழிந்த காவிரி
மாதர்மண் மடந்தைபொன் மார்பில் தாழ்ந்ததோர்
ஓதநீர் நித்திலத் தாமம் ஒக்குமால். ௨

சையமால் வரைபயில் தலைமை சான்றது
செய்யபூ மகட்குநற் செவிலி போன்றது
வையகம் பல்லுயிர் வளர்த்து நாள்தொறும்
உய்யவே சுரந்தளித் தூட்டும் நீரது. ௩

மாவின்உந் திச்சுழி மலர்தன் மேல்வருஞ்
சால்பினால் பல்லுயிர் தருதன் மாண்பினால்
கோலநற் குண்டிகை தாங்குங் கொள்கையால்
போலும்நான் முகனையும் பொன்னி மாநதி. ௪

திங்கள்சூ டியமுடிச் சிகரத் துச்சியில்
பொங்குவெண் தலைநுரை பொருது போதலால்
எங்கள்நா யகன்முடி மிசைநின் றேயிழி
கங்கையாம் பொன்னியாம் கன்னி தீர்த்தமே. ௫

வண்ணநீள் வரைதர வந்த மேன்மையால்
எண்ணில்பே ரறங்களும் வளர்க்கும் ஈகையால்
அண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி
உண்ணெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது. ௬

வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்

தெம்பி ரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி
உம்பர் நாயகர்க் கன்பரும் ஒக்குமால். எ

வாச நீர்குடை மங்கையர் கொங்கையில்
பூசு குங்கும முஞ்புனை சாந்தமும்
வீசு தெண்டிரை மீதிழிந் தோடுநீர்
தேசு டைத்தெனி னுந்தெளி வில்லதே. அ

மாவி ரைத்தெழுந் தார்ப்ப வரைதரு
பூவி ரித்த புதுமதுப் பொங்கிட
வாவி யிற்பொலி நாடு வளந்தரக்
காவி ரிப்புனல் கால்பரந் தோங்குமால். கூ

ஒண்து றைத்தலை மாமத கூடுபோய்
மண்டு நீர்வய லுள்புக வந்தெதிர்
கொண்ட மள்ளர் குரைத்தகை ஓசைபோய்
அண்டர் வானத்தின் அப்புறஞ் சாருமால். கO

மாதர் நாறு பறிப்பவர் மாட்சியும்
சீத நீர்முடி சேர்ப்பவர் செய்கையும்
ஓதை யார்செய் உழுநர் ஒழுக்கமும்
காதல் செய்வதோர் காட்சி மலிந்தவே. கக

உழுத சால்மிக வூறித் தெளிந்தசே
றிழுது செய்யினுள் இந்திரத் தெய்வதம்
தொழுது நாறு நடுவார் தொகுதியே
பழுதில் காவிரி நாட்டின் பரப்பெலாம். கஉ

மண்டுபுனல் பரந்தவயல் வளர்முதலின் சுருள்விரியக்
கண்டுழவர் பதங்காட்டக் களைகளையுங் கடைசியர்கள்
தண்தரளஞ் சொரிபணிலம் இடறியிடை தளர்ந்தசைவார்
வண்டலையுங் குழலலைய மடநடையின் வரம்பணைவார். கங

செங்குவளை பறித்தணிவார் கருங்குழல்மேற் சிறைவண்டை
அங்கைமலர் களைக்கொடுகைத் தயல்வண்டும் வரவழைப்பார்
திங்கள்நுதல் வெயர்வரும்பச் சிறுமுறுவல் தளவரும்பப்
பொங்குமலர்க் கமலத்தின் புதுமதுவாய் மடுத்தயர்வார். கச

கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்னச்
சுரும்பல்லி குடைநீலத் துகளல்ல பகலெல்லாம்
அரும்பல்ல முலையென்ன அமுதல்ல மொழியென்ன
வரும்பல்லா யிரங்கடைசி மடந்தையர்கள் வயலெல்லாம். கரு

கயல்பாய்பைந் தடம்நந்தூன் கழிக்கபெருங் கருங்குழிசி
வியல்வாய்வெள் வளைத்தரளம் மலர்வேரி உலைப்பெய்தங்
கயலாமை அடுப்பேற்றி அரக்காம்பல் நெருப்பூதும்
வயல்மாதர் சிறுமகளிர் விளையாட்டு வரம்பெல்லாம். கசு

காடெல்லாம் கழைக்கரும்பு காவெல்லாங் குழைக்கரும்பு
மாடெல்லாம் கருங்குவளை வயலெல்லாம் நெருங்குவளை
கோடெல்லாம் மடஅன்னம் குளமெல்லாம் கடலன்ன
நாடெல்லாம் நீர்நாடு தனையொவ்வா நலமெல்லாம். கஎ

ஆலை பாய்பவர் ஆர்ப்புறுஞ் ஓலமும்
சோலை வாய்வண் டிரைத்தெழு சும்மையுஞ்
ஞாலம் ஓங்கிய நான்மறை ஓதையும்
வேலை ஓசையின் மிக்கு விரவுமால். கஅ

அன்னம் ஆடும் அகன்துறைப் பொய்கையில்
துன்னும் மேதி படியத் துதைந்தெழும்
கன்னி வாளை கமுகின்மேல் பாய்வன
மன்னு வான்மிசை வானவில் போலுமால். கசு

காவி னிற்பயி லுங்களி வண்டினம்
வாவி யிற்படிந் துண்ணறு மலர்மது
மேவி அத்தடம் மீதெழப் பாய்கயல்
தாவி அப்பொழி லிற்கனி சாடுமால். உ0

சாலிநீள் வயலின் ஓங்கித் தந்நிக ரின்றி மிக்கு
வாலிதாம் வெண்மை உண்மைக் கருவினும் வளர்த்த வாகிச்
சூல்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தரனுக் கன்பர்
ஆலின சிந்தை போல அலர்ந்தன கதிர்க ளெல்லாம். உக

பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடி னார்கள் தலையினால் வணங்கு மாபோல்

மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம். ௨௨

அரிதரு செந்நெற் சூட்டின் அடுக்கிய அடுக்கல் சேர்ப்பார்
பரிவுறத் தடிந்த பன்மீன் படர்நெடுங் குன்று செய்வார்
சுரிவளை சொரிந்த முத்தின் சுடர்ப்பெரும் பொருப்பு யர்ப்பார்
விரிமலர்க் கற்றை வேரி பொழிந்திழி வெற்பு வைப்பார். ௨௩

சாலியின் கற்றை துற்ற தடவரை முகடு சாய்த்துக்
காலிரும் பகடு போக்குங் கரும்பெரும் பாண்டில் ஈட்டம்
ஆலிய முகிலின் கூட்டம் அருவரைச் சிமயச் சாரல்
மேல்வலங் கொண்டு சூழுங் காட்சியின் மிக்க தன்றே. ௨௪

வைதெரிந் தகற்றி ஆற்றி மழைபெயல் மானத் தூற்றிச்
செய்யபொற் குன்றும் வேறு நவமணிச் சிலம்பும் என்னக்
கைவினை மள்ளர் வானங் கரக்கவாக் கியநெற் குன்றால்
மொய்வரை உலகம் போலும் முளரிநீர் மருத வைப்பு. ௨௫

அரசுகொள் கடன்க ளாற்றி மிகுதிகொண் டறங்கள் பேணிப்
பரவருங் கடவுட் போற்றிக் குரவரும் விருந்தும் பண்பின்
விரவிய கிளையுந் தாங்கி விளங்கிய குடிகள் ஓங்கி
வரைபுரை மாடம் நீடி மலர்ந்துள பதிகள் எங்கும். ௨௬

கரும்படு களமர் ஆலைக் கமழ்நறும் புகையோ மாதர்
சுரும்பெழ அகிலா விட்ட தூபமோ யூப வேள்விப்
பெரும்பெயர்ச் சாலை தோறும் பிறங்கிய புகையோ வானின்
வருங்கரு முகிலோ சூழ்வ மாடமும் காவும் எங்கும். ௨௭

நாளிகே ரஞ்செ ருந்தி நறுமலர் நரந்தம் எங்கும்
கோளிசா லந்த மாலங் குளிர்மலர்க் குரவம் எங்கும்
தாளிரும் போந்து சந்து தண்மலர் நாகம் எங்கும்
நீளிலை வஞ்சி காஞ்சி நிறைமலர்க் கோங்கம் எங்கும். ௨௮

சூதபா டலங்கள் எங்கும் சூழ்வழை ஞாழல் எங்கும்
சாதிமா லதிகள் எங்கும் தண்தளிர் நறவம் எங்கும்
மாதவி சரளம் எங்கும் வகுளசண் பகங்கள் எங்கும்
போதவிழ் கைதை எங்கும் பூகபுன் னாகம் எங்கும். ௨௯

மங்கல வினைகள் எங்கும் மணஞ்செய்கம் பலைகள் எங்கும்
பங்கய வதனம் எங்கும் பண்களின் மழலை எங்கும்
பொங்கொளிக் கலன்கள் எங்கும் புதுமலர்ப் பந்தர் எங்கும்
செங்கயல் பழனம் எங்கும் திருமகள் உறையுள் எங்கும். ௩௦

மேகமும் களிறும் எங்கும் வேதமும் கிடையும் எங்கும்
யாகமும் சடங்கும் எங்கும் இன்பமும் மகிழ்வும் எங்கும்
யோகமும் தவமும் எங்கும் ஊசலும் மறுகும் எங்கும்
போகமும் பொலிவும் எங்கும் புண்ணிய முனிவர் எங்கும்.

பண்தரு விபஞ்சி எங்கும் பாதசெம் பஞ்சி எங்கும்
வண்டறை குழல்கள் எங்கும் வளரிசைக் குழல்கள் எங்கும்
தொண்டர்தம் இருக்கை எங்கும் சொல்லுவ திருக்கை எங்கும்
தண்டலை பலவும் எங்கும் தாதகி பலவும் எங்கும். ௩௨

மாடுபோ தகங்கள் எங்கும் வண்டுபோ தகங்கள் எங்கும்
பாடும்அம் மனைகள் எங்கும் பயிலும்அம் மனைகள் எங்கும்
நீடுகே தனங்கள் எங்கும் நிதிநிகே தனங்கள் எங்கும்
தோடுசூழ் மாலை எங்கும் துணைவர்சூழ் மாலை எங்கும். ௩௩

வீதிகள் விழவின் ஆர்ப்பும் விரும்பினர் விருந்தின் ஆர்ப்பும்
சாதிகள் நெறியில் தப்பா தனயரும் அனையில் தப்பா
நீதிய புள்ளும் மாவும் நிலத்திருப் புள்ளு மாவும்
ஓதிய எழுத்தாம் அஞ்சும் உறுபிணி வரத்தாம் அஞ்சும். ௩௪

நற்றமிழ் வரைப்பின் ஓங்கு நாம்புகழ் திருநா டென்றும்
பொற்றடந் தோளால் வையம் பொதுக்கடிந் தினிது காக்கும்
கொற்றவன் அநபா யன்பொற் குடைநிழற் குளிர்வ தென்றால்
மற்றதன் பெருமை நம்மால் வரம்புற விளம்ப லாமோ. ௩௫



# ௪. திருநகரச் சிறப்பு*

சொன்ன நாட்டிடைத் தொன்மையில் மிக்கது
மன்னு மாமலை ராள்வழி பட்டது
வன்னி யாறு மதிபொதி செஞ்சடைச்
சென்னி யார்திரு வாரூர்த் திருநகர். ௧

வேத ஓசையும் வீணையின் ஓசையும்
சோதி வானவர் தோத்திர ஓசையும்
மாத ராடல் மணிமுழ வோசையும்
கீத ஓசையு மாய்க்கிளர் வுற்றதே. ௨

பல்லி யங்கள் பரந்த ஒலியுடன்
செல்வ வீதிச் செழுமணித் தேரொலி
மல்லல் யானை ஒலியுடன் மாவொலி
எல்லை யின்றி எழுந்துள எங்கணும். ௩

மாட மாளிகை சூளிகை மண்டபம்
கூட சாலைகள் கோபுரம் தெற்றிகள்
நீடு சாளர நீடரங் கெங்கணும்
ஆடல் மாதர் அணிசிலம் பார்ப்பன. ௪

அங்கு ரைக்கென் னளவப் பதியிலார்
தங்கள் மாளிகை யின்றொன்று சம்புவின்
பங்கி னாள்திருச் சேடிப் பரவையாம்
மங்கை யாரவ தாரஞ்செய் மாளிகை. ௫

படர்ந்த பேரொளிப் பன்மணி வீதிபார்
இடந்த ஏனமும் அன்னமும் தேடுவார்
தொடர்ந்து கொண்டவன் தொண்டர்க்குத் தூதுபோய்
நடந்த செந்தா மரையடி நாறுமால். ௬

*இப்பகுதியின் தலைப்பு மேற்குறித்தபடியும், திருவாரூர்ச் சிறப்பென்றும், மனுநீதிகண்ட புராணம் என்றும் பிரதிகளில் வெவ்வேறாகக் காணப்படுகிறது.

செங்கண் மாதர் தெருவில் தெளிக்குஞ்செங்
குங்கு மத்தின் குழம்பை அவர்குழல்
பொங்கு கோதையின் பூந்துகள் வீழ்ந்துடன்
அங்கண் மேவி அளறு புலர்த்துமால். ௭

உள்ள மாருரு காதல ரூர்விடை
வள்ள லார்திரு வாரூர் மருங்கெலாம்
தெள்ளு போசைத் திருப்பதி கங்கள்பைங்
கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள். ௮

விளக்கம் மிக்க கலன்கள் விரவலால்
துளக்கில் பேரொளி யால்துன்னு பண்டங்கள்
வளத்தொ டும்பல ஆறு மடுத்தலால்
அளக்கர் போன்றன ஆவண வீதிகள். ௯

ஆர ணங்களே அல்ல மறுகிடை
வார ணங்களும் மாறி முழங்குமால்
சீர ணங்கிய தேவர்க ளேயலால்
தோர ணங்களில் தாமமும் சூழுமால். ௧௦

தாழ்ந்த வேணியர் சைவர் தபோதனர்
வாழ்ந்த சிந்தை முனிவர் மறையவர்
வீழ்ந்த இன்பத் துறையுள் விரவுவார்
சூழ்ந்த பல்வே றிடத்தது தொல்நகர். ௧௧

நிலம கட்கழ கார்திரு நீள்நுதல்
திலகம் ஒப்பது செம்பியர் வாழ்பதி
மலர்ம கட்குவண் தாமரை போல்மலர்ந்
தலகில் சீர்திரு வாரூர் விளங்குமால். ௧௨

அன்ன தொல்நக ருக்கர சாயினன்
துன்னு செங்கதி ரோன்வழித் தோன்றினன்
மன்னு சீர்அந பாயன் வழிமுதல்
மின்னு மாமணிப் பூண்மனு வேந்தனே. ௧௩

மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம்
கண்ணும் ஆவியு மாம்பெருங் காவலன்

விண்ணு ளார்மகிழ் வெய்திட வேள்விகள்
எண்ணி லாதன மாண இயற்றினன். கச

கோற்ற ஆழி குவலயஞ் சூழ்ந்திடச்
சுற்று மன்னர் திறைகடை சூழ்ந்திடச்
செற்றம் நீக்கிய செம்மையின் மெய்ம்மனுப்
பெற்ற நீதியுந் தன்பெய ராக்கினன். கரு

பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவர்
எங்கு மாகி யிருந்தவர் பூசனைக்
கங்கண் வேண்டும் நிபந்தமா ராய்ந்துளான்
துங்க ஆகமம் சொன்ன முறைமையால். கசு

அறம்பொரு ளின்ப மான அறநெறி வழாமல் புல்லி
மறங்கடிந் தரசர் போற்ற வையகம் காக்கும் நாளில்
சிறந்தநல் தவத்தால் தேவி திருமணி வயிற்று மைந்தன்
பிறந்தனன் உலகம் போற்றப் பேரிக் குருளை அன்னான்.

தவமுயன் றரிதில் பெற்ற தனியிளங் குமரன் நாளுஞ்
சிவமுயன் றடைந்து தெய்வக் கலைபல திருந்த ஓதிக்
கவனவாம் புரவி யானை தேர்படைத் தொழில்கள் கற்றுப்
பவமுயன் றதுவும் பேறே எனவரும் பண்பில் மிக்கான். கஅ

அளவில்தொல் கலைகள் முற்றி அரும்பெறல் தந்தை மிக்க
உளமகிழ் காதல் கூர ஓங்கிய குணத்தால் நீடி
இளவர சென்னுந் தன்மை எய்துதற் கணிய னாகி
வளரிளம் பரிதி போன்று வாழுநாள் ஒருநாள் மைந்தன். கக

திங்கள்வெண் கவிகை மன்னன் திருவளர் கோயில் நின்று
மங்குல்தோய் மாட வீதி மன்னிளங் குமரர் சூழக்
கொங்கலர் மாலை தாழ்ந்த குங்குமக் குவவுத் தோளான்
பொங்கிய தானை சூழத் தேர்மிசைப் பொலிந்து போந்தான்.

பரசுவந் தியர்முன் சூதர் மாகதர் ஒருபால் பாங்கர்
விரைநறுங் குழலார் சிந்தும் வெள்வளை ஒருபால் மிக்க
முரசொடு சங்கம் ஆர்ப்ப முழங்கொலி ஒருபால் வென்றி
அரசிளங் குமரன் போதும் அணிமணி மாட வீதி. உக

தனிப்பெருந் தருமந் தானோர் தயாவின்றித் தானே மன்னன்
பனிப்பில்சிந் தையினில் உண்மைப் பான்மைசோ தித்தால் என்ன
மனித்தர்தன் வரவு காணா வண்ணமோர் வண்ணம் நல்ஆன்
புனிற்றிளங் கன்று துள்ளிப் போந்ததம் மறுகி னூடே. ௨௨

அப்புனிற் றாவின் கன்றோர் அபாயத்தின் ஊடு போகிச்
செம்பொனின் தேர்க்கால் மீது விசையினால் செல்லப் பட்டே
உம்பரி னடையக் கண்டங் குருகுதாய் அலமந் தோடி
வெம்பிடும் அலறுஞ் சோரும் மெய்ந்நடுக் குற்று வீழும். ௨௩

மற்றது கண்டு மைந்தன் "வந்ததிங் கபாயம்" என்று
சொற்றடு மாறி நெஞ்சில் துயருழந் தறிவ ழிந்து
"பெற்றமுங் கன்றும் இன்றென் உணர்வெனும் பெருமை மாளச்
செற்ற, என் செய்கேன்" என்று தேரினின் றிழிந்து வீழ்ந்தான்.

அலறுபே ராவை நோக்கி ஆருயிர் பதைத்துச் சோரும்
நிலமிசைக் கன்றை நோக்கி நெடிதுயிர்த் திரங்கி நிற்கும்
"மலர்தலை உலகங் காக்கும் மனுவெனும் என்கோ மானுக்
குலகிலிப் பழிவந் தெய்தப் பிறந்தவா ஒருவன்" என்பான்.

"வந்த இப் பழியை மாற்றும் வகையினை மறைநூல் வாய்மை
அந்தணர் விதித்த ஆற்றால் ஆற்றுவ தறமே ஆகில்
எந்தையீ தறியா முன்னம் இயற்றுவன்" என்று மைந்தன்
சிந்தைவெந் துயரந் தீர்ப்பான் திருமறை யவர்முன் சென்றான்.

தன்னுயிர்க் கன்று வீயத் தளர்ந்தஆத் தரியா தாகி
முன்னெருப் புயிர்த்து விம்மி முகத்தினில் கண்ணீர் வார
மன்னுயிர் காக்குஞ் செங்கோல் மனுவின்பொன் கோயில் வாயில்
பொன்னணி மணியைச் சென்று கோட்டினால் புடைத்த தன்றே.

பழிப்பறை முழக்கோ ஆர்க்கும் பாவத்தின் ஒலியோ வேந்தன்
வழித்திரு மைந்தன் ஆவி கொளவரும் மறலி ஊர்திக்
கழுத்தணி மணியின் ஆர்ப்போ என்னத்தன் கடைமுன் கேளாத்
தெழித்தெழும் ஓசை மன்னன் செவிப்புலம் புக்க போது.

ஆங்கது கேட்ட வேந்தன் அரியணை இழிந்து போந்து
பூங்கொடி வாயில் நண்ணக் காவல ரெதிரே போற்றி

"ஈங்கிதோர் பசுவந் தெய்தி, இறைவ ! நின் கொற்ற வாயில்
தூங்கிய மணியைக் கோட்டால் துளக்கிய" தென்று சொன்னார்.

மன்னவன் அதனைக்கேளா வருந்திய பசுவை நோக்கி,
"என்இதற் குற்ற" தென்பான் அமைச்சரை இகழ்ந்து
நோக்க, முன்னுற நிகழ்ந்த எல்லாம் அறிந்துளான் முதிர்ந்த
கேள்வித், தொன்னெறி அமைச்சன் மன்னன் தாளிணை
தொழுது சொல்வான். ௩0

"வளவ! நின் புதல்வன் ஆங்கோர் மணிநெடுந் தேர்மேல் ஏறி
அளவில்தேர்த் தானை சூழ அரசுலாந் தெருவில் போங்கால்
இளையஆன் கன்று தேர்க்கால் இடைப்புகுந் திறந்த தாகத்
தளர்வுறு மித்தாய் வந்து விளைத்தவித் தன்மை" என்றான்.

அவ்வுரை கேட்ட வேந்தன் ஆவுறு துயரம் எல்லாம்
வெவ்விடந் தலைக்கொண் டாற்போல் வேதனை அகத்து மிக்"கிங்
கிவ்வினை விளைந்த வா"றென் றிடருறும் இரங்கும் ஏங்கும்
"செவ்விதென் செங்கோல்!" என்னும் தெருமரும் தெளியும் தேறான்.

"மன்னுயிர் புரந்து வையம் பொதுக்கடிந் தறத்தில் நீடும்
என்னெறி நன்றால்" என்னும் "என்செய்தால் தீரும்" என்னும்
தன்னிளங் கன்று காணாத் தாய்முகங் கண்டு சோரும்
அந்நிலை அரச னுற்ற துயரமோ ரளவிற் றன்றால். ௩௩

மந்திரிகள் அதுகண்டு மன்னவனை அடிவணங்கிச்
"சிந்தைதளர்ந் தருளுவது மற்றிதற்குத் தீர்வன்றால்
கொந்தலர்தார் மைந்தனைமுன் கோவதைசெய் தார்க்குமறை
அந்தணர்கள் விதித்தமுறை வழிநிறுத்தல் அறம்" என்றார்.

"வழக்கென்று நீர்மொழிந்தால் மற்றதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை இழந்தலறுங் கோவுறுநோய் மருந்தாமோ
இழக்கின்றேன் மைந்தனைஎன் றெல்லீருஞ் சொல்லியஇச்
சழக்கின்று நானிசைந்தால் தருமந்தான் சலியாதோ". ௩ரு

"மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்

ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ." ௫௬

"என்மகன்செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செயஇசைந்தே
அன்னியன்ஓர் உயிர்கொன்றால் அவனைக்கொல் வேனானால்
தொன்மனுநூல் தொடைமனுவால் துடைப்புண்ட தெனும்வார்த்தை
மன்னுலகில் பெறமொழிந்தீர் மந்திரிகள் வழக்" கென்றான்.

என்றரசன் இகழ்ந்துரைப்ப எதிர்நின்ற மதிஅமைச்சர்
"நின்றநெறி உலகின்கண் இதுபோல்முன் நிகழ்ந்ததால்
பொன்றுவித்தல் மரபன்று மறைமொழிந்த அறம்புரிதல்
தொன்றுதொடு நெறியன்றோ தொல்நிலங்கா வல!" என்றார்.

அவ்வண்ணம் மொழிந்துரைத்த அமைச்சர்களை முகம்நோக்கி
மெய்வண்ணந் தெரிந்துணர்ந்த மனுவென்னும் விறல்வேந்தன்
"இவ்வண்ணம் பழுதுரைத்தீர்" என்றேரியின் இடைத்தோய்ந்த
செவ்வண்ணக் கமலம்போல் முகம்புலர்ந்துசெயிர்த்துரைப்பான்.

"அவ்வுரையில் வருநெறிகள் அவைநிற்க அறநெறியின்
செவ்வியஉண் மைத்திறம்நீர் சிந்தைசெயா துரைக்கின்றீர்
எவ்வுலகில் எப்பெற்றம் இப்பெற்றித் தாம்இடரால்
வெவ்வுயிர்த்துக் கதறிமணி எறிந்துவிழுந் தது" விளம்பீர்.

போற்றிசைத்துப் புரந்தரன்மால் அயன்முதலோர் புகழ்ந்திறைஞ்ச
வீற்றிருந்த பெருமானார் மேவியுறை திருவாரூர்த்
தோற்றமுடை உயிர்கொன்றான் ஆதலினால் துணிபொருள்தான்
ஆற்றவுமற் றவற்கொல்லும் அதுவேயாம் எனநினைமின்."

எனமொழிந்து "மற்றிதனுக் கினியிதுவே செயல்இவ்ஆன்
மனமழியுந் துயரகற்ற மாட்டாதேன் வருந்துமிது
தனதுறுபே ரிடர்யானும் தாங்குவதே தருமம்" என
அநகனரும் பொருள்துணிந்தான் அமைச்சரும்அஞ் சினரகன்றார்.

மன்னவன்தன் மைந்தனையங் கழைத்தொருமந் திரிதன்னை
"முன்னிவனை அவ்வீதி முரண்தேர்க்கால் ஊர்க" என
அன்னவனும் அதுசெய்யா தகன்றுதன்னா ருயிர்துறப்பத்
தன்னுடைய குலமகனைத் தான்கொண்டு மறுகணைந்தான்.

ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான்
தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி உறவூர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான். சச

தண்ணளிவெண் குடைவேந்தன் செயல்கண்டு தரியாது
மண்ணவர்கண் மழைபொழிந்தார் வானவர்பூமழைசொரிந்தார்
அண்ணலவன் கண்ணெதிரே அணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்கள் தொழநின்றான் வீதிவிடங் கப்பெருமான். சரு

சடைமருங்கில் இளம்பிறையுந் தனிவிழிக்குந் திருநுதலும்
இடமருங்கில் உமையாளும் எம்மருங்கும் பூதகணம்
புடைநெருங்கும் பெருமையுமுன் கண்டரசன் போற்றிசைப்ப
விடைமருவும் பெருமானும் விறல்வேந்தற் கருள்கொடுத்தான்.

அந்நிலையே உயிர்பிரிந்த ஆன்கன்று மவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியு முடனெழுனும்
இன்னபரி சானென் றறிந்திலன்வேந் தனும்யார்க்கும்
முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ. சஎ

அடிபணிந்த திருமகனை ஆகமுற எடுத்தணைத்து
நெடிதுமகிழ்ந் தருந்துயரம் நீங்கினான் நிலவேந்தன்
மடிசுரந்து பொழிதீம்பால் வருங்கன்று மகிழ்ந்துண்டு
படிநனைய வரும்பசுவும் பருவரல்நீங் கியதன்றே. சஅ

பொன்தயங்கு மதிலாரூர்ப் பூங்கோயி லமர்ந்தபிரான்
வென்றிமனு வேந்தனுக்கு வீதியிலே அருள்கொடுத்துச்
சென்றருளும் பெருங்கருணைத் திறங்கண்டு தன்னடியார்க்
கென்றுமெளி வரும்பெருமை ஏழுலகும் எடுத்தேத்தும். சகூ

இனையவகை அறநெறியில் எண்ணிறந்தோர்க் கருள்புரிந்து
முனைவரவர் மகிழ்ந்தருளப் பெற்றுடைய மூதூர்மேல்
புனையுமுரை நம்மளவில் புகலலாந் தகைமையதோ
அனையதனுக் ககமலராம் அறவனார் பூங்கோயில். ரு0

# ரு. திருக்கூட்டச் சிறப்பு

பூத நாயகர் புற்றிடங் கொண்டவர்
ஆதி தேவர் அமர்ந்தபூங் கோயிலில்
சோதி மாமணி நீள்சுடர் முன்றில்சூழ்
மூதெ யில்திரு வாயில்முன் னாயது. க

பூவார் திசைமுகன் இந்திரன் பூமிசை
மாவாழ் அகலத்து மால்முதல் வானவர்
ஓவா தெவரும் நிறைந்துறைந் துள்ளது
தேவா சிரியன் எனுந்திருக் காவணம். உ

அரந்தை தீர்க்கும் அடியவர் மேனிமேல்
நிரந்த நீற்றொளி யால்நிறை தூய்மையால்
புரந்த அஞ்செழுத் தோசை பொலிதலால்
பரந்த ஆயிரம் பாற்கடல் போல்வது. ங

அகில காரணர் தாள்பணி வார்கள்தாம்
அகில லோகமும் ஆளற் குரியரென்
றகில லோகத்து ளார்கள் அடைதலின்
அகில லோகமும் போல்வ ததனிடை. ச

அத்தர் வேண்டிமுன் ஆண்டவர் அன்பினால்
மெய்த்த ழைந்து விதிர்ப்புறு சிந்தையார்
கைத்தி ருத்தொண்டு செய்கடப் பாட்டினார்
இத்தி றத்தவ ரன்றியும் எண்ணிலார். ரு

மாசி லாத மணிதிகழ் மேனிமேல்
பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்
தேசி னாலெத் திசையும் விளக்கினார்
பேச ஒண்ணாப் பெருமை பிறங்கினார். சு

பூதம் ஐந்தும் நிலையில் கலங்கினும்
மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்

ஓது காத லுறைப்பின் நெறிநின்றார்
கோதி லாத குணப்பெருங் குன்றனார். எ

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர்
ஓடுஞ் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார். அ

ஆரங் கண்டிகை ஆடையுங் கந்தையே
பாரம் ஈசன் பணிஅல தொன்றிலார்
ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்
வீரம் என்னால் விளம்புந் தகையதோ. கூ

வேண்டு மாறு விருப்புறும் வேடத்தர்
தாண்ட வப்பெரு மான்தனித் தொண்டர்கள்
நீண்ட தொல்புக ழார்தம் நிலைமையை
ஈண்டு வாழ்த்துகேன் என்னறிந் தேத்துகேன். கய

இந்த மாதவர் கூட்டத்தை எம்பிரான்
அந்த மில்புகழ் ஆலால சுந்தரன்
சுந்த ரத்திருத் தொண்டத் தொகைத்தமிழ்
வந்து பாடிய வண்ண முரைசெய்வாம். கக

## சா. தடுத்தாட்கொண்ட புராணம்

கங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையும் முடிமேல் வைத்த
அங்கணர் ஓலை காட்டி ஆண்டவர் தமக்கு நாடு
மங்கையர் வதன சீத மதியிரு மருங்கும் ஓடிச்
செங்கயல் குழைகள் நாடும் திருமுனைப் பாடி நாடு. க

பெருகிய நலத்தால் மிக்க பெருந்திரு நாடு தன்னில்
அருமறைச் சைவம் ஓங்க அருளினால் அவத ரித்த
மருவிய தவத்தால் மிக்க வளம்பதி, வாய்மை குன்றாத்
திருமறை யவர்கள் நீடும் திருநாவ லூராம் அன்றே. உ

மாதொரு பாக னார்க்கு வழிவழி அடிமை செய்யும்
வேதியர் குலத்துள் தோன்றி மேம்படு சடைய னார்க்கு
ஏதமில் கற்பின் வாழ்க்கை மனைஇசை ஞானி யார்பால்
தீதகன் றுலகம் உய்யத் திருஅவ தாரம் செய்தார். ரு

தம்பிரான் அருளி னாலே தவத்தினால் மிக்கோர் போற்றும்
நம்பியா ரூரர் என்றே நாமமுஞ் சாத்தி மிக்க
ஐம்படைச் சதங்கை சாத்தி அணிமணிச் சுட்டி சாத்திச்
செம்பொன்நாண் அரையில் மின்னத் தெருவில்தேர் உருட்டுநாளில்.

நரசிங்க முனையர் என்னும் நாடுவாழ் அரசர் கண்டு
பரவருங் காதல் கூரப் பயந்தவர் தம்பால் சென்று
விரவிய நண்பி னாலே வேண்டினர் பெற்றுத் தங்கள்
அரசிளங் குமரற் கேற்ப அன்பினால் மகன்மை கொண்டார்.

பெருமைசால் அரசர் காதற் பிள்ளையாய்ப் பின்னும் தங்கள்
வருமுறை மரபில் வைகி வளர்ந்துமங் கலஞ்செய் கோலத்
தருமறை முந்நூல் சாத்தி அளவில்தொல் கலைகள் ஆய்ந்து
திருமலி சிறப்பின் ஓங்கிச் சீர்மணப் பருவஞ் சேர்ந்தார். கூ

தந்தையார் சடைய னார்தம் தனித்திரு மகற்குச் சைவ
அந்தணர் குலத்துள் தங்கள் அரும்பெரும் மரபுக் கேற்ப
வந்ததொல் சிறப்பின் புத்தூர்ச் சடங்கவி மறையோன் தன்பால்
சேந்திரு அனைய கன்னி மணத்திறம் செப்பி விட்டார். எ

குலமுதல் அறிவில் மிக்கோர் கோத்திர முறையும் தேர்ந்தோர்
நலமிகு முதியோர் சொல்லச் சடங்கவி நன்மை ஏற்று
மலர்தரு முகத்த னாகி மணம்புரி செயலின் வாய்மை
பலவுடன் பேசி ஒத்த பண்பினால் அன்பு நேர்ந்தான். அ

மற்றவன் இசைந்த வார்த்தை கேட்டவர் வள்ளல் தன்னைப்
பெற்றவர் தம்பால் சென்று சொன்னபின் பெருகு சிந்தை
உற்றதோர் மகிழ்ச்சி எய்தி மணவினை உவந்து சாற்றக்
கொற்றவர் திருவுக் கேற்பக் குறித்து நாள்ஓலை விட்டார். கூ

மங்கலம் பொலியச் செய்த மணவினை ஓலை ஏந்தி
அங்கயல் கண்ணி னாரும் ஆடவர் பலரும் ஈண்டிக்

கொங்கலர் சோலை மூதூர் குறுகினார் எதிரே வந்து
பங்கய வதனி மாரும் மைந்தரும் பணிந்து கொண்டார். க௦

மகிழ்ச்சியால் மணமீக் கூறி மங்கல வினைக ளெல்லாம்
புகழ்ச்சியால் பொலிந்து தோன்றப் போற்றிய தொழில ராகி
இகழ்ச்சியொன் றானு மின்றி ஏந்துபூ மாலைப் பந்தர்
நிகழ்ச்சியில் மைந்தர் ஈண்டி நீள்முளை சாத்தி னார்கள். கக

மணவினைக் கமைந்த செய்கை மாதினைப் பயந்தோர் செய்யத்
துணைமலர்க் கோதைத் தாமச் சுரும்பணை தோளி னானைப்
புணர்மணத் திருநாள் முன்னாள் பொருந்திய விதியி னாலே
பணைமுர சியம்ப வாழ்த்திப் பைம்பொன்நாண் காப்புச்சேர்த்தார்.

மாமறை விதிவ ழாமல் மணத்துறைக் கடன்கள் ஆற்றித்
தூமறை மூதூர்க் கங்குல் மங்கலம் துவன்றி ஆர்ப்பத்
தேமரு தொடையல் மார்பன் திருமணக் கோலங் காணக்
காமுறு மனத்தான் போலக் கதிரவன் உதயம் செய்தான்.

காலைசெய் வினைகள் முற்றிக் கணிதநூல் புலவர் சொன்ன
வேலைவந் தணையா முன்னர் விதிமணக் கோலங் கொள்வான்
நூலசைந் திலங்கு மார்பின் நுணங்கிய கேள்வி மேலோன்
மாலையுந் தாரும் பொங்க மஞ்சனச் சாலை புக்கான். கச

வாசநெய் யூட்டி மிக்க மலர்விரை அடுத்த தூநீர்ப்
பாசனத் தமைத்த பாங்கர் பருமணிப் பைம்பொன் திண்கால்
ஆசனத் தணிநீ ராட்டி அரிசனஞ் சாந்தி அன்பால்
ஈசனுக் கினியான் மேனி எழில்பெற விளக்கி னார்கள். கரு

அகில்விரைத் தூப மேய்ந்த அணிகொள்பட் டாடை சாத்தி
முகில்நுழை மதியம் போலக் கைவலான் முன்கை சூழ்ந்த
துகில்கொடு குஞ்சி ஈரம் புலர்த்தித்தன் தூய செங்கை
உகிர்நுதி முறையில் போக்கி ஒளிர்நறுஞ் சிகழி ஆர்த்தான்.

தூநறும் பசுங்கர்ப் பூரச் சுண்ணத்தால் வண்ணப் போதில்
ஆனதண் பனிநீர் கூட்டி அமைத்தசந் தனச்சே றாட்டி
மான்மதச் சாந்து தோய்ந்த மங்கலக் கலவை சாத்திப்
பால்மறை முந்நூல் மின்னப் பவித்திரஞ் சிறந்த கையான்.

தூமலர்ப் பிணையல் மாலை துணரிணர்க் கண்ணி கோதை
தாமமென் றினைய வேறு தகுதியால் அமையச் சாத்தி
மாமணி அணிந்த தூய வளரொளி இருள்கால் சீக்கும்
நாமநீள் கலன்கள் சாத்தி நன்மணக் கோலம் கொண்டார்.

மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க
நன்னகர் விழவு கொள்ள நம்பியா ரூரர், நாதன்
தன்னடி மனத்துள் கொண்டு தகுந்திரு நீறு சாத்திப்
பொன்னணி மணியார் யோகப் புரவிமேல் கொண்டு போந்தார்.

இயம்பல துவைப்ப எங்கும் ஏத்தொலி எடுப்ப மாதர்
நயந்துபல் லாண்டு போற்ற நான்மறை ஒலியி னோங்க
வியந்துயிர் விரும்ப வந்து விரவினர்க் கின்பஞ் செய்தே
உயர்ந்தவா கனயா னங்கள் மிசைகொண்டார் உழைய ரானோர்.

மங்கல கீத நாத மறையவர் குழாங்க ளோடு
தொங்கலும் விரையும் சூழ்ந்த மைந்தரும் துவன்றிச் சூழும்
பங்கய முகையும் சாய்த்துப் பணைத்தெழுந் தணியில் மிக்க
குங்கும முலையி னாரும் பரந்தெழு கொள்கைத் தாகி. உக

அருங்கடி எழுந்த போழ்தின் ஆர்த்தவெள் வளைக ளாலும்
இருங்குழை மகரத் தாலும் இலங்கொளி மணிக ளாலும்
நெருங்கிய பீலிச் சோலை நீலநீர்த் தரங்கத் தாலும்
கருங்கடல் கிளர்ந்த தென்னக் காட்சியில் பொலிந்த தன்றே.

நெருங்குதூ ரியங்கள் ஏங்க நிறைத்தசா மரைகள் ஓங்கப்
பெருங்குடை மிடைந்து செல்லப் பிணங்குபூங் கொடிகள் ஆட
அருங்கடி மணம்வந் தெய்த அன்றுதொட் டென்றும்அன்பில்
வருங்குல மறையோர் புத்தூர் மணம்வந்த புத்தூ ராமால்.

நிறைகுடம் தூபம் தீபம் நெருங்குபா லிகைகள் ஏந்தி
நறைமலர் அறுகு சுண்ணம் நறும்பொரி பலவும் வீசி
உறைமலி கலவைச் சாந்தின் உறுபுனல் தெளித்து வீதி
மறையவர் மடவார் வள்ளல் மணமெதிர் கொள்ள வந்தார்.

“ கண்கள்எண் ணிலாத வேண்டுங் காளையைக் காண” என்பார்
“ பெண்களில் உயர நோற்றாள் சடங்கவி பேதை ”என்பார்

"மண்களி கூர வந்த மணம்கண்டு வாழ்ந்தோம்" என்பார்
பண்களில் நிறைந்த கீதம் பாடுவார் ஆடு வார்கள். உரு

"ஆண்டகை அருளின் நோக்கின் வெள்ளத்துள் அலைந்தோம்" என்பார்
"தாண்டிய பரியும் நம்பால் தகுதியில் நடந்த" தென்பார்
"பூண்டயங் கிவனே காணும் புண்ணிய மூர்த்தி" என்பார்
ஈண்டிய மடவார் கூட்டம் இன்னன இசைப்பச் சென்றார்.

வருமணக் கோலத் தெங்கள் வள்ளலார் தெள்ளும் வாசத்
திருமணப் பந்தர் முன்பு சென்றுவெண் சங்கம் எங்கும்
பெருமழைக் குலத்தி னார்ப்பப் பரிமிசை இழிந்து பேணும்
ஒருமணத் திறத்தி னங்கு நிகழ்ந்தது மொழிவேன் உய்ந்தேன்.

ஆலும்மறை சூழ்கயிலை யின்கண் அருள் செய்த
சாலுமொழி யால்வழி தடுத்தடிமை கொள்வான்
மேலுற எழுந்துமிகு கீழுற அகழ்ந்து
மாலும்அய னுக்குமரி யாரொருவர் வந்தார். உஅ

கண்ணிடை கரந்தகதிர் வெண்படல மெனச்சூழ்
புண்ணிய நுதல்புனித நீறுபொலி வெய்தத்
தண்மதி முதிர்ந்துகதிர் சாய்வதென மீதே
வெண்ணரை முடித்தது விழுந்திடை சழங்க. உகூ

காதிலணி கண்டிகை வடிந்தகுழை தாழச்
சோதிமணி மார்பின் அசை நூலினொடு தோளின்
மீதுபுனை உத்தரிய வெண்துகில் நுடங்க
ஆதப மறைக்குடை அணிக்கரன் விளங்க. ௩0

பண்டிசரி கோவண உடைப்பழமை கூரக்
கொண்டதொர் சழங்கலுடை யார்ந்தழகு கொள்ள
வெண்துகி லுடன்குசை முடிந்துவிடு வேணுத்
தண்டொருகை கொண்டுகழல் தள்ளுநடை கொள்ள. ௩௧

மொய்த்துவளர் பேரழகு மூத்தவடி வேயோ
அத்தகைய மூப்பெனும் அதன்படிவ மேயோ
மெய்த்தநெறி வைதிகம் விளைந்தமுத லேயோ
இத்தகைய வேடமென ஐயமுற எய்தி. ௩௨

வந்துதிரு மாமறை மணத்தொழில் தொடங்கும்
பந்தரிடை நம்பியெதிர் பன்னுசபை முன்னின்
"றிந்தமொழி கேண்மினெதிர் யாவர்களும்" என்றான்
முந்தைமறை ஆயிரம் மொழிந்ததிரு வாயான். ௫௩

என்றுரைசெய் அந்தணனை எண்ணில்மறை யோரும்
மன்றல்வினை மங்கலம டங்கலனை யானும்
"நன்றுமது நல்வரவு நங்கள்தவம் என்றே
நின்றதிவண் நீர்மொழிமின் நீர்மொழிவ" தென்றார். ௫௪

பின்னவனும் நாவலர் பெருந்தகையை நோக்கி
"என்னிடையும் நின்னிடையும் நின்றஇசை வால்யான்
முன்னுடைய தோர்பெரு வழக்கினை முடித்தே
நின்னுடைய வேள்வியினை நீமுயல்தி" என்றான். ௫௫

நெற்றிவிழி யான்மொழிய நின்றநிக ரில்லான்
"உற்றதொர் வழக்கினிடை நீயுடைய துண்டேல்
மற்றது முடித்தலது யான்வதுவை செய்யேன்
முற்றஇது சொல்லு" கென எல்லைமுடி வில்லான். ௫௬

"ஆவதிது கேண்மின்மறை யோர்! என்அடி யான்இந்
நாவல்நகர் ஊரனிது நான்மொழிவ" தென்றான்
தேவரையும் மாலயன் முதல்திருவின் மிக்கோர்
யாவரையும் வேறடிமை யாவுடைய எம்மான்.

ன்றான் இறையோன் அதுகேட்டவர் எம்ம ருங்கும்
நின்றார் இருந்தார் "இவன் என்நினைந் தான்கொல்" என்று
சென்றார் வெகுண்டார் சிரித்தார் திருநாவ லூரர்
"நன்றால் மறையோன் மொழி" என்றெதிர் நோக்கி நக்கார்.

நக்கார் முகம்நோக்கி நடுங்கி நுடங்கி யார்க்கும்
மிக்கான் மிசையுத் தரியத்துகில் தாங்கி மேற்சென்
"றக்கா லம்உன் தந்தை தன்தந்தை ஆள்ஓலை ஈதால்
இக்கா ரியத்தை இன்றுநீ சிரித்ததென் ஏடா" என்ன. ௫௯

மாசிலா மரபில் வந்த வள்ளல்வே தியனை நோக்கி
நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியால் சிரிப்பு நீங்கி

"ஓலைகாட்" டென்று நம்பி உரைக்க "நீ ஓலை காணற்
பாலையோ அவைமுன் காட்டப் பணிசெயற் பாலை" என்ற
மேலவில் நாவ லூரர் வெகுண்டுமேல் விரைந்து சென்று
மாலயன் தொடரா தானை வலிந்துபின் தொடர லுற்றார். ௪௬

ஆவணம் பறிக்கச் சென்ற அளவினில் அந்த ணாளன்
காவணத் திடையே ஓடக் கடிதுபின் தொடர்ந்து நம்பி
பூவணத் தவரை உற்றார் அவரலால் புரங்கள் செற்ற
ஏவணச் சிலையி னாரை யார்தொடர்ந் தெட்ட வல்லார். ௪௭

மறைகளா யினமுன் போற்றி மலர்ப்பதம் பற்றி நின்ற
இறைவனைத் தொடர்ந்து பற்றி எழுதும்ஆள் ஓலை வாங்கி
அறைகழல் அண்ணல் "ஆளாய் அந்தணர் செய்தல் என்ன
முறை" எனக் கீறி யிட்டார் முறையிட்டான் முடிவி லாதான்.

அருமறை முறையிட் டின்னும் அறிவதற் கரியான் பற்றி
ஒருமுறை முறையோ என்ன உழைநின்றார் விலக்கி "இந்தப்
பெருமுறை உலகில் இல்லா நெறிகொண்டு பிணங்கு கின்ற
திருமறை முனிவ ரேநீர் எங்குளீர் செப்பும்" என்றார். ௪௯

என்றலும் நின்ற ஐயர் "இங்குளேன் இருப்புஞ் சேய
தன்றிந்த வெண்ணெய் நல்லூர், அதுநிற்க, அறத்தா றின்றி
வன்திறல் செய்தென் கையில் ஆவணம் வலிய வாங்கி
நின்றிவன் கிழித்துத் தானே நிரப்பினான் அடிமை" என்றான்.

தொண்டர்! போதும்" என்ன நிதி இரண்டும், குறைவன்
ஒருவன் பெற்றுவந்தாற் போலக் கொண்டு மனைபுகுந்தார்.

வந்துபுகுந்து திருமனையில் மனைவி யார்தாம் மாதவரை
முந்த எதிர்சென் றடிவணங்கி முழுதும் அழகு செய்தமனைச்
சந்த மலர்மா லைகள்முத்தின் தாமம் நாற்றித் தவிசடுத்த
கந்த மலரா சனங்காட்டிக் கமழ்நீர்க் கரக மெடுத்தேந்த. எ0

தூய நீரால் சிறுத்தொண்டர் சோதி யார்தங் கழல்விளக்கி
ஆய புனிதப் புனல்தங்கள் தலைமேல் ஆரத் தெளித்தின்பம்
மேய இல்ல மெம்மருங்கும் வீசி விரைமென் மலர்ச்சாந்தம்
ஏயுந் தூப தீபங்கள் முதற்பூ சனைசெய் திறைஞ்சுவார். எக

பனிவெண் டிங்கள் சடைவிரித்த பயில்பூங் குஞ்சிப்பயிரவராம்
புனிதர் தம்மைப்போனகமுங்கறியும்படைக்கும்படிபொற்பின்
வனிதை யாருங் கணவரும்முன் வணங்கிக்கேட்பமற்றவர்தாம்
"இனியஅன்னமுடன்கறிக ளெல்லாமொக்கப் படைக்க" என.

பரிசு விளங்கப் பரிகலமும் திருத்திப் பாவாடையில்
ஏற்றித், தெரியும் வண்ணஞ் செஞ்சாலிச் செழும்போ னக
மும் கறியமுதும், வரிசை யினில்முன் படைத்தெடுத்து
மன்னும் பரிக லக்கான்மேல், விரிவெண் டுகிலின் மிசை
வைக்க விமலர் பார்த்தங் கருள்செய்வார். எங

"சொன்ன முறையிற் படுத்தபசுத் தொடர்ந்த உறுப்
பெல் லாங்கொண்டு, மன்னு சுவையிற் கறியாக்கி மாண
அமைத் தீரே" என்ன, அன்ன மனையார் "தலைஇறைச்சி
அமுதுக் காகா தெனக்கழித்தோம்", என்ன "அதுவுங் கூட
நாம் உண்ப" தென்றார் இடர்தீர்ப்பார். எச

சிந்தை கலங்கிச் சிறுத்தொண்டர் மனையா ரோடுந்
திகைத்தயரச், சந்த னத்தா ரெனுந்தாதி யார்தாம் "அந்தத்
தலைஇறைச்சி, வந்த தொண்ட ரமுதுசெயும் பொழுது
நினைக்க வருமென்றே, முந்த அமைத்தேன் கறிஅமுது"
தென் றெடுத்துக் கொடுக்க முகமலர்ந்தார். எரு

# சங. கழறிற்றறிவார் நாயனார் புராணம்*

மாவீற் றிருந்த பெருஞ்சிறப்பின் மன்னுந் தொன்மை மலைநாட்டுப், பாவீற் றிருந்த பல்புகழார் பயிலு மியல்பிற் பழம்பதிதான், சேவீற் றிருந்தார் திருவஞ்சைக் களமும் நிலவிச் சேரர்குலக், கோவீற் றிருந்து முறைபுரியும் குலக்கோ மூதூர் கொடுங்கோளூர். க

காலை எழும்பல் கலையின்ஒலி களிற்றுக் கன்று வடிக்குமொலி
சோலை எழுமென் சுரும்பின்ஒலி துரகச் செருக்காற் சுலவுமொலி
பாலை வியஞ்சி பயிலுமொலி பாட லாடல் முழவின்ஒலி
வேலை யொலியை விழுங்கிஎழ விளங்கி யோங்கும் வியப்பினதால்.

மிக்க செல்வம் மனைகள்தொறும் விளையும் இன்பம் விளங்குவன, பக்க நெருங்கு சாலைதொறும் பயில்சட் டறங்கள் பல்குவன, தக்க அன்பர் மடங்கள்தோறும் சைவ மெய்ம்மை சாற்றுவன, தொக்க வளங்கொள் இடங்கள் தொறும் அடங்க நிதியம் துவன்றுவன. ங

வேத நெறியின் முறைபிறழா மிக்க ஒழுக்கந் தலைநின்ற
சாதி நான்கு நிலைதழைக்குந் தன்மைத் தாகித் தடமதில்சூழ்
சூத வகுள சரளநிரை துதையுஞ் சோலை வளநகர்தான்
கோதை அரசர் மகோதைஎனக் குலவு பெயரும் உடைத்துலகில்.

முருகு விரியும் மலர்ச்சோலை மூதூ ரதன்கண் முறை மரபின், அருகி அழியுங் கலிநீக்கி அறங்கொள் சைவத் திறந்தழைப்பத், திருகு சினவெங் களியானைச் சேரர் குல மும் உலகுஞ்செய், பெருகு தவத்தால் அரனருளால் பிறந் தார் பெருமாக் கோதையார். ரு

* இது சேரமான் பெருமாள் நாயனார் புராணம் எனச் சில பிரதிகளில் கூறப்படுகிறது.

வந்த மகனைக் கடிதிற்கொண் டமுது செய்விப் பான்வந்தார்
முந்த வேஅப் பயிரவராம் முதல்வர் அங்கண் மறைந்தருளச்
சிந்தை கலங்கிக் காணாது திகைத்தார் வீழ்ந்தார் தெருமந்தார்
வெந்த இறைச்சிக் கறியமுதும் கலத்திற் காணார்வெருவுற்றார்.

"செய்ய மேனிக் கருங்குஞ்சிச் செழுங்கஞ்சுகத்துப்பயிரவர்யாம்
உய்ய அமுது செய்யாதே ஒளித்த தெங்கே?" எனத்தேடி
மையல் கொண்டு புறத்தணைய மறைந்த அவர்தாம்மலைபயந்த
தையலோடுஞ் சரவணத்துத் தனய ரோடுந் தாமணைவார். அச

தனிவெள் விடைமேல் நெடுவிசும்பில் தலைவர் பூத கணநாதர்
முனிவர் அமரர் விஞ்சையர்கள் முதலா யுள்ளோர் போற்றிசைப்ப
இனியகறியும் திருஅமுதும் அமைத்தார் காண எழுந்தருளிப்
பணிவெண்டிங்கள் முடிதுளங்கப் பரந்த கருணைநோக்களித்தார்.

அன்பின் வென்ற தொண்டரவர்க் கமைந்தமனைவி யார்மைந்தர்
முன்பு தோன்றும் பெருவாழ்வை முழுதுங்கண்டு பரவசமாய்
என்பும் மனமும் கரைந்துருக விழுந்தார் எழுந்தார் ஏத்தினார்
பின்பு பரமர் தகுதியினாற் பெரியோ ரவருக் கருள்புரிவார்.

கொன்றை வேணி யார்தாமும் பாகங் கொண்ட குலக் கொடியும், வென்றி நெடுவேல் மைந்தருந்தம் விரைப்பூங் கமலச் சேவடிக்கீழ், நின்ற தொண்டர் மனைவியார் நீடு மகனார் தாதியார், என்றும் பிரியா தேஇறைஞ்சி இருக்க உடன் கொண் டேகினார்.
அள

ஆறு முடிமே லணிந்தவருக் கடியா ரென்று கறியமுதா
ஊறி லாத தனிப்புதல்வன் தன்னை அரிந்தங் கமுதூட்டப்
பேறு பெற்றார் சேவடிகள் தலைமேற் கொண்டு பிறஉயிர்கள்
வேறு கழறிற் றறிவார்தம் பெருமை தொழுது விளம்புவாம்.



திருமா நகரந் திருஅவதா ரஞ்செய் விழவின் சிறப்பினால்
வருமா களிகூர் நெய்யாடல் எடுப்ப வான மலர்மாரி
தருமா விசும்பின் மிகநெருங்கத் தழங்கும் ஒலிமங் கலந்தழைப்பப்
பெருமா நிலத்தி லெவ்வுயிரும் பெருகு மகிழ்ச்சி பிறங்கினவால்.

மண்மேற் சைவ நெறிவாழ வளர்ந்து முன்னை வழியன்பாற், கண்மேல் விளங்கு நெற்றியினார் கழலே பேணுங் கருத்தினராய், உண்மை வியனின் பினராகி உரிமை அரசர் தொழில்புரியார், தெண்ணீர் முடியார் திருவஞ்சைக் களத்தில் திருத்தொண் டேபுரிவார். எ

'உலகி னியல்பும் அரசியல்பும் உறுதி யல்ல' எனஉணர்வார்
புலரி எழுந்து புனல்மூழ்கிப் புனித வெண்ணீற் றினும்மூழ்கி
நிலவு திருநந் தனவனத்து நீடும் பணிகள் பலசெய்து
மலரு முகையுங் கொணர்ந்துதிரு மாலை சாத்த மகிழ்ந்தமைத்து.

திருமஞ் சனமும் கொணர்ந்துதிரு அலகும் இட்டுத் திருமெழுக்கு, வருமன் புடன்இன் புறச்சாத்தி மற்று முள்ள திருப்பணிகள், பெருமை பிறங்கச் செய்தமைத்துப் பேணும் விருப்பில் திருப்பாட்டும், ஒருமை நெறியின் உணர்வுவர ஓதிப் பணிந்தே ஒழுகுநாள். கூ

சீரின் மலிந்த கடலகழி நெடுமால் வரையின் கொடிமதில்சூழ், சீரின் மலிந்த திருநகர மதனிற் செங்கோற் பொறையனெனும், காரின் மலிந்த கொடைநிழல்மேற் கவிக்குங் கொற்றக் குடைநிழற்கீழ்த், தாரின் மலிந்த புயத்தரசன் தரணி நீத்துத் தவஞ்சார்ந்தான். க0

வந்த மரபின் அரசளிப்பான் வனஞ்சார் தவத்தின் மருவியபின், சிந்தை மதிநூல் தேரமைச்சர் சிலநாள் ஆய்ந்து தெளிந்தநெறி, முந்தை மரபில் முதல்வர்திருத் தொண்டு முயல்வார் முதற்றாக, இந்த முடியார் திருவஞ்சைக் களத்தில் அவர்பால் எய்தினார். கக

எய்தி அவர்த மெதிரிறைஞ்சி "இருந்தண் சாரல் மலைநாட்டுச், செய்தி முறைமை யாலுரிமைச் செங்கோ லரசு

புரிவதற்கு, மைதீர் நெறியின் முடிசூடி அருளும் மரபால் வந்த" தெனப், பொய்தீர் வாய்மை மந்திரிகள் போற்றிப் புகன்ற பொழுதின்கண். ௧௨

இன்பம் பெருகுந் திருத்தொண்டுக் கிடையூ றாக இவர் மொழிந்தார், அன்பு நிலைமை வழுவாமை அரசு புரக்க அருளுண்டேல், என்பும் அரவும் புனைந்தாரை இடைபெற் றறிவேன்" எனப்புக்கு, முன்பு தொழுது விண்ணப்பஞ் செய்தார் முதல்வர் அருளினால். ௧௩

மேவும் உரிமை அரசளித்தே விரும்பு காதல் வழிபாடும்
யாவும் யாரும் கழறினவும் அறியும் உணர்வும் ஈறில்லாத்
தாவில் விறலும் தண்டாத கொடையும் படைவா கனமுதலாம்
காவல் மன்னர்க் குரியனவும் எல்லாங் கைவந் துறப்பெற்றார்.

ஆன அருள்கொண் டஞ்சலிசெய் திறைஞ்சிப் புறம் போந் தரசளித்தல், ஊன மாகுந் திருத்தொண்டுக் கெனினும் உடையான் அருளாலே, மேன்மை மகுடந் தாங்குதற்கு வேண்டும் அமைச்சர்க் குடன்படலும், மான அமைச்சர் தாள் பணிந்தவ் வினைமேற்கொண்டு மகிழ்ந்தெழுந்தார். ௧௫

உரிமை நாளில் ஓரைநலன் எய்த மிக்க உபகரணம்
பெருமை சிறக்க வேண்டுவன எல்லாம் பிறங்க மங்கலஞ்செய்
திருமையுலகுக் கொருமைமுடி கவித்தார் எல்லாஉயிரும்மகிழ்
தரும நிலைமை அறிந்துபுவி தாங்கும் கழறிற் றறிவார்தாம். ௧௬

தம்பி ரானார் கோயில்வலங் கொண்டு திருமுன் தாழ்ந் தெழுந்து, கும்ப யானை மேல்கொண்டு கொற்றக் குடையுஞ் சாமரையும், நம்பு முரிமை யவர்தாங்க நலங்கொள் நகர்சூழ் வலங்கொள்வார், மொய்ம்பில் உவரின் பொதிசுமந்தோர் வண்ணான் முன்னே வரக்கண்டார். ௧௭

மழையிற் கரைந்தங் குவர்ஊறி மேனி வெளுத்த வடிவினால்
"உழையிற் பொலிந்த திருக்கரத்தா ரடியார்வேட" மென்றுணர்ந்தே
இழையிற் சிறந்த ஓடைநுதல் யானைக்கழுத்தின் னின்றிழிந்து
விழைவிற் பெருகுங் காதலினால்விரைந்து சென்றுகைதொழுதார்.

சேரர் பெருமான் தொழக்கண்டு சிந்தை கலங்கி முன்வணங்கி
'யாரென் றடியே னைக்கொண்ட தடியேன் அடிவண் ணான்' என்னச்
சேரர் பிரானும்"அடிச்சேரன் அடியேன்" என்று "திருநீற்றின்
வாரவேடம் நினைப்பித்தீர் வருந்தாதேகும்" எனமொழிந்தார்.

மன்னர் பெருமான் திருத்தொண்டுகண்டு மதிநீடமைச்சரெலாஞ்
சென்னி மிசைஅஞ் சலிசெய்து போற்றச் சினமால் களிறேறி
மின்னு மணிப்பூண் கொடிமாட வீதி மூதூர் வலங்கொண்டு
பொன்னின் மணிமா ளிகைவாயில் புக்கார் புனைமங்கலம்பொலிய.

யானை மிசைநின் றிழிந்தருளி இலங்கும் மணிமண் டபத்தின்கண்
மேன்மை அரியா சனத்தேறி விளங்குங் கொற்றக்குடைநிழற்றப்
பானல் விழியார் சாமரைமுன் பணிமா றப்பன் மலர்தூவி
மான அரசர் போற்றிடவீற் றிருந்தார் மன்னர் பெருமானார்.

உலகு புரக்குங் கொடைவளவர் உரிமைச் செழியர் உடன்கூட
நிலவு பெருமுக் கோக்களாய் நீதி மனுநூல் நெறிநடத்தி
அலகி லரசர் திறைகொணர அகத்தும்புறத்தும் பகையறுத்து
மலருந் திருநீற் றொளிவளர மறைகள் வளர மண்ணளிப்பார்.

"நீடும் உரிமைப் பேரரசால் நிகழும் பயனும் நிறைதவமும்
தேடும் பொருளும் பெருந்துணையும் தில்லைத் திருச்சிற் றம்பலத்துள்
ஆடுங் கழலே" எனத்தெளிந்த அறிவா லெடுத்த திருப்பாதம்
கூடும் அன்பில் அர்ச்சனைமேற் கொண்டார் சேரர்குலப்பெருமாள்

வாசத் திருமஞ் சனம்பள்ளித் தாமஞ் சாந்தம் மணித்தூபம்
தேசிற் பெருகுஞ் செழுந்தீபம் முதலா யினவுந் திருஅமுதும்
ஈசர்க் கேற்ற பரிசினால் அருச்சித் தருள எந்நாளும்
பூசைக்கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார்சிலம்பின் ஒலிஅளித்தார்.

நம்பர் தாளின் வழிபாட்டால் நாளும் இன்புற் றமர்கின்றார், இம்பர் உலகில் இரவலர்க்கும் வறியோர் எவர்க்கும் ஈகையினால், செம்பொன் மழையாம் எனப்பொழிந்து திருந்து வென்றி யுடன்பொருந்தி, உம்பர் போற்றத் தம்பெருமாற் குரிய வேள்வி பலசெய்தார். உரு

இன்ன வண்ணம் இவரொழுக எழில்கொள் பாண்டிநன்னாட்டு
மன்னும் மதுரைத்திருவால வாயில் இறைவர் வரும்அன்பால்

பன்னும் இசைப்பா டலிற்பரவும் பாண ஞர்பத் திரனார்க்கு
நன்மை நீடு பெருஞ்செல்வம் நல்க வேண்டி அருள்புரிவார்.

இரவுகனவில் எழுந்தருளி"என்பால் அன்பாலெப்பொழுதும்
பரவு சேரன் தனக்குனக்குப் பைம்பொன் காணம்பட்டாடை
விரவு கதிர்செய் நவமணிப்பூண் வேண்டிற் றெல்லாம் குறைவின்றித்
தாரம் ஓலை தருகின்றோம் தாழா தேகி வரு"கென்று. உஎ

அதிர்கழல் உதியர் வேந்தற் கருள்செய்த பெருமை யாலே
"எதிரில்செல் வத்துக் கேற்ற இருநிதி கொடுக்க"என்று
"மதிமலி புரிசை" என்னும் வாசகம் வரைந்த வாய்மைக்
கதிரொளி விரிந்த தோட்டுத் திருமுகங் கொடுத்தார் காண.

சங்கப் புலவர் திருமுகத்தைத் தலைமேற் கொண்டு பத்திரனார்
அங்கப் பொழுதே புறப்பட்டு மலைநா டணைய வந்தெய்தித்
துங்கப்புரிசைக்கொடுங்கோளூர் தன்னிற்புகுந்து தன்னுகொடி
மங்குல்தொடக்கும் மாளிகைமுன்வந்து மன்னர்க்கறிவித்தார்.

கேட்ட பொழுதே கைதலைமேற் கொண்டு கிளர்ந்த பேரன்பால்
நாட்டம் பொழிநீர் வழிந்திழிய எழுந்து நடுக்கம் மிகஎய்தி
ஓட்டத்தம்பொன் மாளிகையின் புறத்திலுருகுஞ்சிந்தையுடன்
பாட்டின் தலைமைப் பாணனார் பாதம் பலகால் பணிகின்றார்.

"அடியேன் பொருளாத் திருமுகங்கொண் டணைந்த" தென்ன் அவர்தாமும், கொடிசேர் விடையார் திருமுகங்கைக் கொடுத்து வணங்கக் கொற்றவனார், முடிமேற் கொண்டு கூத் தாடி மொழியுங் குழறிப் பொழிகண்ணீர், பொடியார் மார் பிற் பரந்துவிழப் புவிமேற் பலகால் வீழ்ந்தெழுந்தார். ௬க

பரிவிற் போற்றித் திருமுகத்தைப் பலகால் தொழுது படிஎடுக்க, உரிய வகையால் எடுத்தோதி உம்பர் பெருமான் அருள்போற்றி, விரிபொற் சுடர்மா ளிகைபுக்கு மேவு முரிமைச் சுற்றமெலாம், பெரிது விரைவிற் கொடுபோந்து பேணும் அமைச்சர்க் கருள்செய்வார். ௬உ

"நங்கள் குலமா ளிகையிதனுள் நலத்தின் மிக்க நிதிக் குவையாய்ப், பொங்கி நிறைந்த பலவேறு வகையிற்

பொலிந்த பண்டாரம், அங்க ணொன்று மொழியாமை அடை யக் கொண்டு புறப்பட்டுத், தங்கும் பொதிசெய் தாளின் மேற் சமைய ஏற்றிக் கொணரு”மென. ௫௩

சேரர் பெருமான் அருள்செய்யத் திருந்து மதிநூல் மந்திரிகள், சாரு மணிமா ளிகையுள்ளாற் றனங்க ளெல்லாம் நிறைந்தபெருஞ், சீர்கொள் நிதிய மெண்ணிறந்த எல்லாம் பொதிசெய் தாளின்மேல், பாரில் நெருங்க மிசைஏற்றிக் கொண்டு வந்து பணிந்தார்கள். ௫௪

பரந்த நிதியின் பரப்பெல்லாம் பாண னார்பத் திர னார்க்கு, நிரந்த தனங்கள் வெவ்வேறு நிரைத்துக் காட்டி மற்றிவையும், உரந்தங் கியவெங் கரிபரிகள் முதலாம் உயிருள் ளன தனமும், புரந்த அரசுங் கொள்ளுமென மொழிந்தார் பொறையர் புரவலனார். ௫௫

பாண னார்பத் திரனாரும் பைம்பொன் மௌலிச் சேரலனார் காணக் கொடுத்த நிதிஎல்லாங் கண்டு மகிழ்வுற் றதிசயித்துப் “பேண எனக்கு வேண்டுவன அடியேன் கொள்ளப் பிஞ்ஞகனார் ஆணை அரசும் அரசுறுப்பும் கைக்கொண் டருளு”மெனஇறைஞ்ச.

இறைவர் ஆணை மறுப்பதனுக் கஞ்சி இசைந்தார் இகல்வேந்தர், நிறையும் நிதியின் பரப்பெல்லாம் நிலத்தை நெளிய உடன்கொண்டே, உறைமும் மதத்துக் களிறுபரி உள்ளிட் டனவேண் டுவகொண்டோர், பிறைவெண் கோட் டுக் களிற்றுமேல் கொண்டு போந்தார் பெரும்பாணர். ௫௭

பண்பு பெருகும் பெருமாளும் பாண னார்பத் திரனார்பின் கண்கள் பொழிந்த காதல்நீர் வழியக் கையால் தொழுதணைய நண்பு சிறக்கும் அவர்தம்மை நகரின் புறத்து விடைகொண்டு திண்பொற் புரிசைத் திருமதுரை புக்கார் திருந்தும் இசைப்பாணர்.

வான வரம்பர் குலம்பெருக்கும் மன்ன னாரும் மறித் தேகிக், கூனல் இளவெண் பிறைக்கண்ணி முடியார் அடிமை கொண்டருளும், பான்மை அருளின் பெருமையினை நினைந்து பலகால் பணிந்தேத்தி, மேன்மை விளங்கு மாளிகைமண் டபத்துள் அரசு வீற்றிருந்தார். ௫௯

அளவில் பெருமை அகிலயோ னிகளும் கழறிற் றறிந்தவற்றின்
உளமன்னியமெய் யுறுதுயர மொன்றுமொழியா வகையகற்றிக்
களவு கொலைகள் முதலான கடிந்து கழறிற் றறிவார்தாம்
வளவர்பெருமா னுடன்செழியர் மகிழுங்கலப்பில் வைகுநாள்.

வானக் கங்கை நதிபொதிந்த மல்கு சடையார் வழி பாட்டுத், தூநற் சிறப்பின் அர்ச்சனையாந் தொண்டு புரிவார் தமக்கோருநாள், தேனக் கலர்ந்த கொன்றையினார் ஆடற் சிலம்பின் ஒலிமுன்போல், மானப் பூசை முடிவின்கண் கேளா தொழிய மதிமயங்கி. சக

பூசை கடிது முடித்"தடியேன் என்னோ பிழைத்த" தெனப்பொருமி, "ஆசை உடம்பால் மற்றினிமே றடையு மின்பம் யா"தென்று, தேசின் விளங்கும் உடைவாளை உருவித் திருமார் பினில்நாட்ட, ஈசர் விரைந்து திருச்சிலம்பி னோசை மிகவு மிசைப்பித்தார். சஉ

ஆடற் சிலம்பி னொலிகேளா உடைவா ளகற்றி அங்கைமலர், கூடத் தலைமேற் குவித்தருளிக் கொண்டு விழுந்து தொழுதெழுந்து, நீடப் பரவி மொழிகின்றார் "நெடுமால் பிரமன் அருமறைமுன், தேடற் கரியாய்! திரு வருள்முன் செய்யா தொழிந்த தென்?"னென்றார். சங

என்ற பொழுதில் இறைவர்தாம் எதிர்நின் றருளா தெழுமொலியால், "மன்றி னிடைநங் கூத்தாடல் வந்து வணங்கி வன்தொண்டன், ஒன்று முணர்வால் நமைப் போற்றி உரைசேர் பதிகம் பாடுதலால், நின்று கேட்டு வரத் தாழ்த்தோ" மென்றார் அவரை நினைப்பிப்பார். சச

"என்னே! அடியார்க் கிவரருளும் கருணை இருந்த வா"றென்று, "பொன்னேர் சடையார் திருநடஞ்செய் புலி யூர்ப் பொன்னம் பலமிறைஞ்சித், தன்னே ரில்லா வன் தொண்டர் தமையுங் காண்ப" னெனவிரும்பி, நன்னீர் நாட் டுச் செலநயந்தார் நாமச் சேரர் கோமானார். சரு

பொன்னார் மௌலிச் சோலனார் போற்றும் அமைச்சர்க் கலைதியம்பி, "நன்னாட் கொண்டு பெரும்பயண மெழுக" என்று நலஞ்சாற்ற, மின்னார் அயில்வேற் குலமறவர் வென்றி நிலவுஞ் சிலைவீரர், அந்நாட் டுள்ளார் அடையநிரந் தணைந்தார் வஞ்சி அகல்நகர்வாய். சசு

இட்ட நன்னாள் ஓரையினில் இறைவர் திருவஞ் சைக்களத்து, மட்டு விரிபூங் கொன்றையினார் தம்மை வலங் கொண் டிறைஞ்சிப்போய்ப், பட்ட நுதல்வெங் களியானைப் பிடர்மேற் கொண்டு பனிமதியம், தொட்ட கொடிமா ளிகை மூதூர் கடந்தார் உதியர் தோன்றலார். சஎ

யானை அணிகள் பரந்துவழி எங்கும் நிரந்து செல்லுவன
மான மலைநாட் டினில்மலிந்த மலைக ளுடன்போ துவபோன்ற
சேனை வீரர் புடைபரந்து செல்வ தங்கண் மலைசூழ்ந்த
கான மடைய உடன்படர்வ போலுங் காட்சி மேவினதால்.

புரவித் திரள்கள் ஆயோகப் பொலிவின் அசைவிற் போதுவன
அரவச் சேனைக் கடல்தரங்கம் மடுத்து மேன்மேல் அடர்வனபோல்
விரவிப் பரந்து சென்றனவால் மிசையும் அவலும் ஒன்றாக
நிரவிப் பரந்த நெடுஞ்சேனை நேமி நெளியச் சென்றனவால்.

அந்நாட் டெல்லை கடந்தணைய அமைச்சர்க் கெல்லாம் விடையருளி, மின்னார் மணிப்பூண் மன்னவனார் வேண்டு வாரை உடன்கொண்டு, கொன்னார் அயில்வேல் மறவர்பயில் கொங்கர் நாடு கடந்தருளிப், பொன்னாட் டவரும் அணைந் தாடும் பொன்னி நீர்நாட் டிடைப்போவார். ருO

சென்ற திசையிற் சிவனடியார் சிறப்பி னோடும் எதிர் கொள்ளக், குன்றுங் கானும் உடைக்குறும்பர் இடங்கள் தோறும் குறைவறுப்பத், துன்று முரம்பும் கான்யாறும் துறுகற் சுரமும் பலகடந்து, வென்றி விடையார் இடம்பல வும் மேவிப் பணிந்து செல்கின்றார். ருக

பொருவில் பொன்னித் திருநதியின் கரைவந் தெய்திப் புனிதநீர், மருவுந் தீர்த்தம் மகிழ்ந்தாடி மருங்கு வடபாற்

கரைஏறித், திருவிற் பொலியுந் திருப்புலியூர்ச் செம்பொன் மன்றுள் நடம்போற்ற, உருகு மனத்தி னுடன்சென்றார் ஒழியா அன்பின் வழிவந்தார். ௫௨

வந்து தில்லை மூதூரின் எல்லை வணங்கி மகிழ்ச்சியி னால், அந்த ணாளர் தொண்டர்குழாம் அணைந்த போதில் எதிர்வணங்கிச், சந்த விரைப்பூந் திருவீதி இறைஞ்சித் தலை மேற் காம்முகிழ்ப்பச், சிந்தை மகிழ எழுநிலைக்கோ புரத்தை அணைந்தார் சேரலனார். ௫௩

நிலவும் பெருமை எழுநிலைக்கோ புரத்தின் முன்னர் நிலத்திறைஞ்சி, மலரும் கண்ணீர்த் துளிததும்பப் புகுந்து மணிமா ளிகைவலங்கொண், டுலகு விளக்குந் திருப்பேரம் பலத்தை வணங்கி உள்ளணைந்தார், அலகி லண்ட மளித் தவர்நின் றாடுந் திருச்சிற் றம்பலமுன். ௫௪

அளவில் இன்பப் பெருங்கூத்தர் ஆட எடுத்த கழல்காட்ட உளமும் புலமும் ஒருவழிச்சேன் றுருகப் போற்றி உய்கின்றார் களனில்விடம்வைத் தளித்தஅமு தன்றிமன்றில்கழல்வைத்து வளருந் திருக்கூத் தமுதுலகுக் களித்த கருணை வழுத்தினார்.

ஆரா ஆசை ஆனந்தக் கடலுள் திளைத்தே அமர்ந்தருளால் சீரார் வண்ணப் பொன்வண்ணத் திருவந்தாதி திருப்படிக்கீழ்ப் பாரா தரிக்க எடுத்தேத்திப் பணிந்தார் பருவ மழைபொழியும் காரால் நிகர்க்கஅரியகொடைக் கையார்கழறிற் றறிவார்தாம்.

தம்பி ரானார்க் கெதிர்நின்று தமிழ்ச்சொன் மாலை கேட்பிக்க உம்பர் வாழ நடமாடும் ஒருவர் அதற்குப் பரிசிலெனச் செம்பொன் மணிமன் றினிலெடுத்த செய்ய பாதத் திருச்சிலம்பின் இம்பர்நீட எழுந்தஒலி தாமு மெதிரே கேட்பித்தார். ௫௭

ஆடற் சிலம்பி னொலிகேட்பார் அளவில் இன்ப ஆனந்தம் கூடப்பெற்றபெரும்பேற்றின் கொள்கை வாய்ப்பக் கும்பிடுவார் நீடப் பணியுங் காலமெலாம் நின்று தொழுது புறம்போந்து மாடத் திருமா ளிகைவீதி வணங்கிப் புறத்து வைகினார். ௫௮

பரவுந் தில்லை வட்டத்துப் பயில்வார் பைம்பொன் அம்பலத்துள்
அரவும் புனலும் சடையாட ஆடு வார்கூத் தாராமை
விரவுங் காதல் மிக்கோங்க வேதம் படியுந் திருப்படிக்கீழ்
இரவும் பகலும் பணிந்தேத்தி இன்பஞ் சிறக்கு மந்நாளில்.

ஆடும் பெருமான் பாடல்கேட் டருளித் தாழ்த்த படிதமக்குக்
கூடும் பரிசால் முன்பருளிச் செய்த நாவ லூர்க்கோவை
நீடும் பெருங்கா தலிற்காண நிறைந்த நினைவு நிரம்பமால்
தேடும் பாதர் அருளினால் திருவா ரூர்மேற் செலஎழுந்தார்.

அறிவின் எல்லை யாயதிருத் தில்லை எல்லை அமர்ந்திறைஞ்சிப்
பிறிவி லாத திருவடியைப் பெருகு முள்ளத் தினிற்பெற்றுச்
செறியும் ஞான போனகர்வந் தருளும் புகலி சென்றிறைஞ்சி
மறிசேர் கரத்தார் கோயில்பல வணங்கி மகிழ்ந்து வழிக்கொள்வார்.

வழியிற் குழியிற் செழுவயலின் மதகின் மலர்வா விகளின்மடுச், சுழியிற் றரளந் திரைசொரியுந் துறைநீர்ப் பொன்னி கடந்தேறி, விழியிற் றிகழுந் திருநுதலார் விரும்பு மிடங்கள் இறைஞ்சியுகக், கழிவிற் பெருவெள் ளமுங்கொள் ளாக் கழனி ஆரூர் கண்ணுற்றார். கூஉ

நம்பி தாமும் அந்நாட்போய் நாகைக் காரோ ணம்பாடி
அம்பொன் மணிப்பூண் நவமணிகள் ஆடைசாந்தம் அடற்பரிமா
பைம்பொற் சுரிகை முதலான பெற்று மற்றும் பலபதியில்
தம்பி ரானைப் பணிந்தேத்தித் திருவா ரூரிற் சார்ந்திருந்தார்.

வந்து சேரர் பெருமானார் மன்னுந் திருவா ரூரெய்த
அந்த ணாளர் பெருமானும் அரசர் பெருமான் வரப்பெற்றுச்
சிந்தை மகிழ எதிர்கொண்டு சென்று கிடைத்தார் சேரலனார்
சந்த விரைத்தார் வன்றொண்டர் முன்பு விருப்பி னுடன்தாழ்ந்தார்.

முன்பு பணிந்த பெருமானைத் தாமும் பணிந்து முகந்தெடுத்தே
அன்பு பெருகத் தழுவவிரைந் தவரும் ஆர்வத் தொடுதழுவ
இன்ப வெள்ளத் திடைநீந்தி ஏற மாட்டா தலைவார்போல்
என்பு முருகஉயிரொன்றி உடம்பும் ஒன்று மெனஇசைந்தார்.

ஆன நிலைமை கண்ட திருத் தொண்டர் அளவில் மகிழ்வெய்த
மானச் சேரர் பெருமானார் தாமும் வன்தொண் டருங்கலந்த
பான்மை நண்பால் 'சேரமான் தோழ' ரென்று பாரரவும்
மேன்மை நாமம் முனைப்பாடி வேந்தர்க் காகி விளங்கியதால்.

ஒருவர் ஒருவ ரிற்கலந்த உணர்வா லின்ப மொழியுரைத்து
'மருவ இனியார்பால்செய்வதென்னாமென்னு மகிழ்ச்சியினால்
பருவ மழைச்செங் கைப்பற்றிக் கொண்டு பரமர் தாள்பணிய
தெருவு நீங்கிக் கோயிலினுட் புகுந்தார் சேர மான்தோழர்.

சென்று தேவாசிரியனைமுன் இறைஞ்சித்திருமாளிகைவலங்கொண்
டொன்று முள்ளத் தொடும்புகுவார் உடையநம்பி முன்னாக
நின்று தொழுது கண்ணருவி வீழ நிலத்தின் மிசைவீழ்ந்தே
என்று மினிய தம்பெருமான் பாத மிறைஞ்சி யேத்தினார். ௬௮

தேவர் முனிவர் வந்திறைஞ்சுந்தெய்வப்பெருமாள்கழல்வணங்கி
மூவர் தமக்கு முதலாகு மவரைத் திருமும் மணிக்கோவை
நாவ லூரர் தம்முன்பு நன்மை விளங்கக் கேட்பித்தார்
தாவில் பெருமைச் சேரலனார் தம்பி ரானார் தாங்கொண்டார்.

அங்கண் அருள்பெற்றெழுவாரைக்கொண்டுபுறம்போந்தாரூரர்
நங்கை பரவை யார்திருமா ளிகையில் நண்ண நன்னுதலார்
பொங்கு விளக்கும் நிறைகுடமும் பூமா லைகளும்புகையகிலும்
எங்கும்மடவாரெடுத்தேந்த அணைந்து தாமுமெதிர்கொண்டார்.

சோதி மணிமா ளிகையின்கண் சுடரும் பசும்பொற்காலமளி
மீது பெருமாள் தமைஇருத்தி நம்பி மேவி யுடனிருப்பக்
கோதில் குணத்துப் பரவையார் கொழுநனார்க்குந்தோழர்க்கும்
நீதிவழுவா ஒழுக்கத்து நிறைபூ சனைகள் முறையளித்தார். ௭௧

தாண்டும் புரவிச் சேரர்குலப் பெருமாள் தமக்குத் திருஅமுது, தூண்டு சோதி விளக்கனையார் அமைக்கத் துணைவர் சொல்லுதலும், வேண்டும் பரிசு வெவ்வேறு விதத்துக் கறியும் போனகமும், ஈண்டச் சமைப்பித் துடன் வந்தார்க் கெல்லா மியல்பின் விருந்தமைத்தார். ௭௨

அரசர்க் கமைத்த சிறப்பினுமேல் அடியார்க் கேற்கும் படியாக, விரவிப் பெருகு மன்பினுடன் விரும்பும் அமுது சமைத்ததற்பின், புரசைக் களிற்றுச் சேரலனர் புடைசூழ்ந் தவரோ டமுதுசெயப், பரவைப் பிறந்த திருவனைய பரவை யார்வந் தறிவித்தார். ௭௫

"சேரர் பெருமானெழுந்தருளி அமுதுசெய்யச்செய்தவத்தால்
தாரின் மலிபூங் குழல்மடவாய்! தாழா தமுது செய்வி" எனப்
பாரின் மலிசீர் வன்தொண்டர் அருளிச் செய்யப் பரிகலங்கள்
ஏரின் விளங்கத் திருத்திக்கா லிரண்டிற் படியா ஏற்றுதலும்.

ஆண்ட நம்பி பெருமானை உடனே அமுது செய்தருள
வேண்டுமென்ன ஆங்கவரும்விரைந்துவணங்கிவெருவுறலும்
நீண்ட தடக்கை பிடித்தருளி மீண்டும் நேரே குறைகொள்ள
ஈண்டஅமுதுசெய்வதனுக் கிசைந்தார்பொறையர்க்கிறையவனர்.

ஒக்க அமுது செய்தருள உயர்ந்த தவத்துப் பரவையார்
மிக்க விருப்பால் அமுதுசெய்வித் தருளி மேவும்பரிசனங்கள்
தக்க வகையால் அறுசுவையுந்தாம்வேண்டியவாறினிதருந்தத்
தொக்கமகிழ்ச்சிகளிசிறப்பத்தூயவிருந்தின் கடன்முடித்தார்.

பனிநீர் விரவு சந்தனத்தின் பசுங்கர்ப் பூர விரைக் கலவை, வனிதை யவர்கள் சமைத்தெடுப்பக் கொடுத்து மகிழ்மான் மதத்சாந்தும், புனித நறும்பூ மாலைகளும் போற்றிக் கொடுத்துப் பொற்கொடியார், இனியபஞ்ச வாசமுடன் அடைக்காய் அமுதும் வந்தினர். ௭௭

ஆய சிறப்பிற் பூசனைகள் அளித்த எல்லாம் அமர்ந்தருளித்
தூய நீறு தங்கள்திரு முடியில் வாங்கித் தொழுதணிந்து
மேய விருப்பி னுடனிருப்பக்கழறிற் றறிவார் மெய்த்தொண்டின்
சேய நீர்மை அடைந்தாராய்நம்பி செம்பொற்கழல்பணிந்தார்.

மலைநாட் டரசர் பெருமானர் வணங்க வணங்கி எதிர்தழுவிக்
கலைநாட் பெருகு மதிமுகத்துப் பரவை யார்தங் கணவனர்
சிலைநாட் டியவெல் கொடியாரைச் சேரத் தந்தார்எனக்கங்கை
அலைநாட் கொன்றைமுடிச்சடையார்அருளேபோற்றியுடனமர்ந்தார்.

செல்வத் திருவா ரூர்மேவுஞ் செம்பொற் புற்றி லினிதமர்ந்த
வில்வெற் புடையார் கழல்வணங்கி வீதி விடங்கப் பெருமானை
மல்லற் பவனி சேவித்து வாழ்ந்து நாளும் மனமகிழ்ந்து
சோல்வித்தகர்தாமிருவர்களுந் தொடர்ந்தகாதலுடன்சிறந்தார்.

இவ்வா றொழுகு நாளின்கண் இலங்கு மணிப்பூண் வன்றொண்டர், மைவாழ் களத்து மறையவனார் மருவு மிடங்கள் பலவணங்கிச், செய்வார் கன்னித் தமிழ்நாட்டுத் திருமா மதுரை முதலான, மொய்வார் சடையார் மூதூர்கள் இறைஞ்ச முறைமை யால்நினைந்தார். ௮௧

சேரர் பிரானும் ஆரூரர் தம்மைப் பிரியாச் சிறப்பாலும்
வாரம் பெருகத் தமக்கன்று மதுரை ஆல வாயமர்ந்த
வீர ரளித்த திருமுகத்தால் விரும்புமன்பின் வணங்குதற்குச்
சார எழுந்த குறிப்பாலுந் தாமு முடனே செலத்துணிந்தார்.

இருவர் திருவுள் ளமுமிசைந்த பொழுதில் எழுந்து திருவாரூர், ஒருவர்மலர்த்தாள் புக்கிறைஞ்சி உடன்பாட் டருளால் போந்தருளி, மருவு முரிமைப் பெருஞ்சுற்றம் வரம்பில் பணிகள் வாகனங்கள், பொருவில் பண்டா ரங் கொண்டு போது வார்கள் உடன்போத. ௮௨

சேவித் தணையும் பரிசனங்கள் சூழத் திருவா ரூரிறைஞ்சிக்
காவிற் பயிலும் புறம்பணையைக் கடந்து போந்து கீழ்வேளூர்
மேவிப் பரமர் கழல்வணங்கிப் போந்து வேலைக் கழிக்கானல்
பூவிற் றிகழும் பொழில்நாகை புகுந்து காரோணம்பணிந்தார்.

திருக்கா ரோணச் சிவக்கொழுந்தைச் சென்று பணிந்து சிந்தையினை, உருக்கார் வச்செந் தமிழ்மாலை சாத்திச் சில நாள் உறைந்துபோய்ப், பெருக்கா றலைவு சடைமுடியா ரிடங்கள் பலவும் பணிந்தேத்தி, அருட்கா ரணர்தந் திரு மறைக்கா டணைந்தார் சேரர் ஆரூரர். ௮௩

முந்நீர் வலங்கொள் மறைக்காட்டு முதல்வர் கோயில் சென்றிறைஞ்சிச், செந்நீர் வாய்மைத் திருநாவுக் கரசும் புகலிச் சிவக்கன்றும், அந்நேர் "திறக்க அடைக்க" எனப்

பாடுந் திருவா யிலையணைந்து, நன்னீர் பொழியும் விழியின
ராய் நாயன்மாரை நினைந்திறைஞ்சி. அசு

நிறைந்த மறைகள் அர்ச்சித்த நீடு மறைக்காட் டரு
மணியை, இறைஞ்சி வீழ்ந்து பணிந்தெழுந்து போற்றி
"யாழைப் பழித்" தென்னும், அறைந்த பதிகத் தமிழ்மாலை
நம்பி சாத்த அருட்சேரர், சிறந்த அந்தா தியிற்சிறப்பித்
தனவே யோதித் திளைத்தெழுந்தார். அஎ

எழுந்து பணிந்து புறத்தெய்தி இருவர் பெருந்தொண்
டருஞ்சிலநாள், செழுந்தண் பழனப் பதியதனுள் ளமர்ந்து
தென்பால் திரைக்கடல்நஞ், சழுந்து மிடற்றார் அகத்தியான்
பள்ளி இறைஞ்சி அவிர்மதியக், கொழுந்து வளர்செஞ்
சடைக்குழகர் கோடிக் கோயில் குறுகினார். அஅ

கோடிக் குழகர் கோயிலயல் குடிகள் ஒன்றும் புறத்தெங்
கும், நாடிக் காணு தள்புக்கு நம்பர் பாதந் தொழுதுள்ளம்
வாடிக் "கடிதாய்க் கடற்காற்"றென் றெடுத்து மலர்க்கண்
ணீர்வாரப், பாடிக் காடு கான்புணர்ந்த பரிசும் பதிகத்
திடைவைத்தார். அகூ

அங்கு வைகிப் பணிந்தருளாற் போவார் அகன்சோ
ணாட்டரனார், தங்கு மிடங்கள் வணங்கிப்போய்ப் பாண்டி
நாடு தனைச்சார்ந்து, திங்கள் முடியார் திருப்புத்தூர் இறைஞ்
சிப் போந்து சேண்விளங்கும், மங்குல் தவழும் மணிமாட
மதுரை மூதூர் வந்தணைந்தார். கூO

சேரமான் தோழருமச் சேரர்பிரா னும்பணிப்பூண்
ஆரமார் பரைமதுரை ஆலவா யினில்வணங்க
வாரமா வந்தணைய வழுதியார் மனக்காதல்
கூரமா நகர்கோடித் தெதிர்கொண்டு கொடுபுக்கார். கூக

தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே
தொன்மதுரை நகரின்கண் இனிதிருந்த சோழனார்
அன்னவர்கள் உடன்கூட அணையஅவ ருங்கூடி
மன்னுதிரு ஆலவாய் மணிக்கோயில் வந்தணைந்தார். கூஉ

திருஆல வாயமர்ந்த செஞ்சடையார் கோயில்வலம்
வருவார்முன் வீழ்ந்திறைஞ்சி வன்தொண்டர்வழித் தொண்டு
தருவாரைப் போற்றிசைத்துத் தாழ்ந்தெழுந்து வாழ்ந்ததமிழ்ப்
பெருவாய்மை மலர்புனைந்து பெருமகிழ்ச்சி பிறங்கினார். கூ௩

படியேறு புகழ்ச்சேரர் பெருமானும் பார்மிசைவீழ்ந்
"தடியேனைப் பொருளாக அளித்ததிரு முகக்கருணை
முடிவேதென் றறிந்திலேன்" எனமொழிகள் தடுமாறக்
கடியேறு கொன்றையார் முன்பரவிக் களிகூர்ந்தார். கூச

செம்பியனு டன்செழியர் தாம்பணிந்து சேரருடன்
நம்பியுமுன் புறத்தணைய நண்ணியபே ருவகையால்
உம்பர்பிரான் கோயிலினின் றுடன்கொடுபோய் இருவர்க்கும்
பைம்பொன்மணி மாளிகையில் குறைவறுத்தார் பஞ்சவனார்.

உள மகிழக் கும்பிட்டங் குறையுநாள் உதியருடன்
கிள ரொளிப்பூண் வன்தொண்டர் தாமிருந்த இடங்கெழுமி
வளவனார் மீனவனார் வளம்பெருக மற்றவரோ
டளவளா வியவிருப்பால் அமர்ந்துகலந் தினிதிருந்தார். கூசு

அந்நாளில் மதுரைநகர் மருங்கரனார் அமர்பதிகள்
பொன்னாரம் அணிமார்பில் புரவலர்மூ வரும்போதச்
செந்நாவின் முனைப்பாடித் திருநாடர் சென்றிறைஞ்சிச்
சொன்மாலை களுஞ்சாத்தித் தொழத்திருப்பூவணத்தணைந்தார்.

நீடுதிருப் பூவணத்துக் கணித்தாக நேர்செல்ல
மாடுவருந் திருத்தொண்டர் மன்னியஅப் பதிகாட்டத்
தேடுமறைக் கரியாரைத் "திருவுடையா" ரென்றெடுத்துப்
பாடிசையிற் "பூவணமீ தோ?" என்று பணிந்தணைவார்.

சென்றுதிருப் பூவணத்துத் தேவர்பிரான் மகிழ்கோயில்
முன்றில்வலங் கொண்டிறைவர் முன்வீழ்ந்து பணிந்தெழுந்து
நின்றுபர விப்பாடி நேர்நீங்கி யுடன்பணிந்த
வென்றிமுடி வேந்தருடன் போந்தங்கண் மேவினார். கூகூ

அப்பதியி லமர்ந்திறைஞ்சிச் சிலநாளி லாரூரர்
மூப்பெருவேந் தர்களோடு முதன்மதுரை நகரெய்தி

மெய்ப்பரிவில் திருவால வாயுடையார் விரைமலர்த்தாள்
எப்பொழுதும் பணிந்தேத்தி இன்புற்றங் கமர்கின்றார். ௪00

செஞ்சடையார் திருவாப்ப னூர்திருவே டகம்முதலாம்
நஞ்சணியுங் கண்டரவர் நயந்தபதி நண்ணியே
எஞ்சலிலாக் காதலினால் இனிதிறைஞ்சி மீண்டணைந்து
மஞ்சணையும் மதில்மதுரை மாநகரில் மகிழ்ந்திருந்தார். ௪0௧

பரமர்திருப் பரங்குன்றில் சென்றுபார்த் திபரோடும்
புரமெரித்தார் கோயில்வலங் கொண்டுபுகுந் துள்ளிறைஞ்சிச்
சிரமலிமா லைச்சடையார் திருவடிக்கீழ் ஆட்செய்யும்
அருமைநினைந் "தஞ்சுதும்" என் றாரூரர் பாடுவார். ௪0௨

"கோத்திட்டை" என்றெடுத்துக் கோதில்திருப் பதிகஇசை
மூர்த்தியார் தமைவணங்கி மூக்கோக்க ளுடன்முன்பே
ஏத்தியவண் டமிழ்மாலை இன்னிசைபா டிப்பரவிச்
சாத்தினார் சங்கரனார் தங்குதிருப் பரங்குன்றில். ௪0௩

இறைவர்திருத் தொண்டேரி அருமையினை இருநிலத்து
முறைபுரியும் முதல்வேந்தர் மூவர்களுங் கேட்டஞ்சி
மறைமுந்நூல் மணிமார்பின் வன்தொண்டர் தமைப்பணிந்தார்
நிறைதவத்தோர் அப்பாலும் நிருத்தர்பதி தொழநினைந்தார் ௪0௪

அந்நாட்டுத் திருப்பதிகள் பலவுமணைந் திறைஞ்சமலை
நன்னாட்டு வேந்தருடன் நம்பிதா மெழுந்தருள
மின்னாட்டும் பன்மணிப்பூண் வேந்தரிரு வரும்மீள்வார்
தென்னாட்டு வேண்டுவன செய்தமைப்பார் தமைவிடுத்தார்.

இருபெருவேந் தருமியல்பின் மீண்டதற்பி னெழுந்தருளும்
பொருவருஞ்சீர் வன்தொண்டர் புகழ்ச்சேர ருடன்புனிதர்
மருவியதா னம்பலவும் பணிந்துபோய் மலைச்சாரல்
குருமணிகள் வெயிலெறிக்குங் குற்றாலஞ் சென்றடைந்தார்.

குற்றாலத் தினிதமர்ந்த கூத்தர்குறை கழல்வணங்கிச்
சொற்றாம மலர்புனைந்து குறும்பலாத் தொழுதிப்பால்
முற்றாவெண் மதிமுடியார் பதிபணிந்து மூவெயில்கள்
செற்றார்மன் னியசெல்வத் திருநெல்வே லியைஅணைந்தார்.

நெல்வேலி நீற்றழகர் தமைப்பணிந்து பாடிநிகழ்
பல்வேறு பதிபிறவும் பணிந்தன்பால் வந்தணைந்தார்
வில்வேட ராய்வென்றி விசயனெதிர் பன்றிப்பின்
செல்வேத முதல்வரமர் திருவிரா மேச்சரத்து. கoஅ

மன்னுமிரா மேச்சரத்து மாமணியை முன்வணங்கிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பயில்கின்றார் பாம்பணிந்த
சென்னியர்மா தோட்டத்துத் திருக்கேதீச் சரஞ்சார்ந்த
சொன்மலர்மா லைகள்சாத்தித் தூரத்தே தொழுதமர்ந்தார்.

திருவிரா மேச்சரத்துச் செழும்பவளச் சுடர்க்கொழுந்தைப்
பரிவினுல் தொழுதகன்று பரமர்பதி பிறபணிந்து
பெருவிமா னத்திமையோர் வணங்குபெருந் திருச்சுழியல்
மருவினர் வன்தொண்டர் மலைவேந்த ருடன்கூட. கக0

திருச்சுழிய லிடங்கொண்ட செம்பொன்மலைச் சிலையாரைக்
கருச்சுழியில் வீழாமைக் காப்பாரைக் கடல்விடத்தின்
இருட்சுழியு மிடற்றுரை இறைஞ்சினதி ரிதழிமலர்ப்
பருச்சுழியத் தட"னூறாய் உயி"ரெனும்பா மலர்புனைந்தார்.

அங்கணரைப் பணிந்துறையும் ஆரூரர்க் கவ்வூரில்
கங்குலிடைக் கனவின்கட் காளையாந் திருவடிவால்
செங்கையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் சுழியமுடன்
எங்குமிலாத் திருவேடம் என்புருக முன்காட்டி. ககஉ

"கானப்பேர் யாமிருப்ப" தெனக்கழறிக் கங்கையெனும்
வானப்பே ராறுலவும் மாமுடியார் தாமகல
ஞானப்பே ராளருணர்ந் ததிசயித்து "நாகமுடன்
ஏனப்பே ரெயிறணிந்தா ரருளிருந்த பரி"சென்பார். ககங

கண்டருளும் படிகழறிற் றறிவார்க்கு மொழிந்தருளிப்
புண்டரிகப் புனற்சுழியற் புனிதர்கழல் வணங்கிப்போய்
அண்டர்பிரான் திருக்கானப் பேரணைவார் ஆரூரர்
"தொண்டரடித் தொழலு"மெனுஞ்சொற்பதிகத் தொடைபுனைவார்.

"காளையார் தமைக்கண்டு தொழப்பெறுவ தென்"றென்று
தாளைநா ளும்பரவத் தருவார்பால் சார்கின்றார்

ஆலைநீ ளிடைக்காண அஞ்சியநீர் நாய்அயலே
வாளைபாய் நுழைப்பழன முலைப்பாடி வளநாடர். ௧௧௫

மன்னுதிருக் கானப்பேர் வளம்பதியில் வந்தெய்திச்
சென்னிவளர் மதியணிந்தார் செழுங்கோயில் வலங்கொண்டு
முன்னிறைஞ்சி உள்ளணைந்து முதல்வர்சே வடிதாழ்ந்து
பன்னுசெழுந் தமிழ்மாலை பாடினார் பரவினார். ௧௧௬

ஆராத காதலுடன் அப்பதியிற் பணிந்தேத்திச்
சீராருந் திருத்தொண்டர் சிலநாளங் கமர்ந்தருளிக்
காராரு மலர்ச்சோலைக் கானப்பேர் கடந்தணைந்தார்
போரானேற் றார்கயிலைப் பொருப்பர்திருப் புனவாயில். ௧௧௭

புனவாயிற் பதியமர்ந்த புனிதரா லயம்புக்கு
மனஆர்வ முறச்"சித்த நீநினைஎன் னொடு" என்றே
வினவான தமிழ்பாடி வீழ்ந்திறைஞ்சி அப்பதியில்
சினயானை உரித்தணிந்தார் திருப்பாதந் தொழுதிருந்தார்.

திருப்புனவா யிற்பதியி லமர்ந்தசிவ னார்மகிழும்
விருப்புடைய கோயில்பணிந் தருள்பெற்று மேவினார்
பொருப்பினொடு கானகன்று புனற்பொன்னி நாடணைந்து
பருப்பதவார் சிலையார்தம் பாம்பணிமா நகர்தன்னில். ௧௧௯

பாதாளீச் சரமிறைஞ்சி அதன்மருங்கு பலபதியும்
வேதாதி நாதர்கழல் வணங்கிமிகு விரைவினுடன்
சூதாருந் துணைமுலையார் மணிவாய்க்குத் தோற்றிரவு
சேதாம்பல் வாய்திறக்குந் திருவாரூர் வந்தணைந்தார். ௧௨௦

திருநாவ லூர்வேந்தர் சேரர்குல வேந்தருடன்
வருவாரைத் திருவாரூர் வாழ்வார்கள் எதிர்கொள்ளத்
தருகாத லுடன்வணங்கித் தம்பெருமான் கோயிலினுள்
பெருகார்வத் தொடுவிரும்பும் பெரும்பேறு பெறப்புகுந்தார்.

வாசமலர்க் கொன்றையார் மகிழ்கோயில் வலங்கொண்டு
நேசமுற முன்னிறைஞ்சி நெடும்பொழுதே லாம்பரவி
ஏசறவால் திருப்பதிகம் எடுத்தேத்தி எழுந்தருளால்
பாசவினைத் தொடக்கறுப்பார் பயில்கோயில் பணிந்தணைவார்.

பரவையார் மாளிகையில் பரிசனங்கள் முன்னெய்த
விரவுபே ரலங்கார விழுச்செல்வம் மிகப்பெருக
வரவெதிர்கொண் டடிவணங்க வன்றொண்டர் மலைநாட்டுப்
புரவலனா ரையுங்கொண்டு பொன்னணிமா ளிகைபுகுந்தார்.

பரவியே பரவையார் பரிவுடனே பணிந்தேத்தி
விரவியபோ னகங்கறிகள் விதம்பலவா கச்சமைத்துப்
பரிகலமும் பாவாடை பகல்விளக்கு முடனமைத்துத்
திருஅமுது செய்வித்தார் திருந்தியதேன் மொழியினார். ௧௨௪

மங்கலமாம் பூசனைகள் பரவையார் செயமகிழ்ந்து
தங்கிஇனி தமர்கின்றார் தம்பிரான் கோயிலினுட்
பொங்குபெருங் காலமெலாம் புக்கிறைஞ்சிப் புறத்தணைந்து
நங்கள்பிரா னருள்மறவா நல்விளையாட் டினைநயந்தார். ௧௨௫

நிலைச்சேண்டும் பரிச்சேண்டும் வீசிமிக மகிழ்வெய்தி
விலக்கரும்போர்த் தகர்ப்பாய்ச்சல் கண்டருளி வென்றிபெற
மலைக்குநெடு முட்கணைக்கால் வாரணப்போர் மகிழ்ந்தருளி
அலைக்குமறப் பலபுள்ளின் அமர்விருப்பி அமர்கின்றார். ௧௨௬

விரவு காதல் மீக்கூர மேவு நாள்கள் பலசெல்லக்
கரவில் ஈகைக் கோளனார் தங்கள் கடல்சூழ் மலைநாட்டுப்
பரவை யார்தங் கொழுநனார் தம்மைப் பணிந்து கொண்டணைவான்
இரவும்பகலும் தொழுதிரக்கஇசைந்தார்அவரு மெழுந்தருள.

நங்கை பரவை யாருள்ளத் திசைவால் நம்பி எழுந்தருளத்
திங்கள் முடியார் திருவருளைப் பரவிச் சேர மான்பெருமாள்
எங்கு முள்ள அடியாருக் கேற்ற பூசை செய்தருளிப்
பொங்கு முயற்சி இருவரும்போய்ப் புக்கார் புனிதர் பூங்கோயில்.

தம்பி ரானைத் தொழுதருளாற் போந்து தொண்டர் சார்ந்த
நம்பி யாரூ ரருஞ்சேரர் நன்னாட் டரச னாராய [ணைய
பைம்பொன் மணிநீள் முடிக்கழறிற் றறிவார் தாமும் பயணமுடன்
செம்பொன் நீடு மதிலாரூர் தொழுது மேல்பாற் செல்கின்றார்.

போன்பரப்பி மணிவரன்றிப் புனல்பரக்குங் காவேரித்
தென்கரைபோய்ச்சிவன்மகிழ்ந்த கோயில்பலசென்றிறைஞ்சி

மின்பரப்புஞ் சடையண்ணல் விரும்புதிருக் கண்டியூர்
அன்புருக்குஞ் சிந்தையுடன் பணிந்துபுறத் தணைந்தார்கள்.

வடகரையில் திருவையா றெதிர்தோன்ற மலர்க்கரங்கள்
உடலுருக உள்ளுருக உச்சியின்மேற் குவித்தருளிக்
கடல்பரந்த தெனப்பெருகுங் காவிரியைக் கடந்தேறித்
தொடர்வுடைய திருவடியைத் தொழுவதற்கு நினைவுற்றார்.

ஐயா றதனைக் கண்டுதொழு தருளா ரூரர் தமைநோக்கிச்
செய்யாள் பிரியாச்சேரமான் பெருமாளருளிச் செய்கின்றார்
"மையார் கண்டர் மருவுதிரு வையா றிறைஞ்ச மனமுருகி
நையா நின்ற திவ்வாறு கடந்து பணிவோம் நா"மென்ன.

ஆறு பெருகி இருகரையும் பொருது விசும்பி லெழுவதுபோல்
வேறு நாவாய் ஓடங்கள் மீது செல்லா வகைமிகைப்ப
நீறு விளங்குந் திருமேனி நிருத்தர் பாதம் பணிந்தன்பின்
ஆறு நெறியாச் செலவுரியார் தரியா தழைத்துப் பாடுவார்.

" பரவும் பரிசென் " றெடுத்தருளிப் பாடுந் திருப்பாட் டின்முடிவில், அரவம் புனைவார் தமை"ஐயா றுடைய அடிக ளோ"வென்று, விரவும் வேட்கை யுடனழைத்து விளங்கும் பெருமைத் திருப்பதிகம், நிரவு மிசையில் வன்தொண்டர் நின்று தொழுது பாடுதலும், கருச

மன்றில் நிறைந்து நடமாட வல்லார் தொல்லை ஐயாற் றில், கன்று தடையுண் டேதிரழைக்கக் கதறிக் கனைக்கும் புனிற்றுப்போல், ஒன்றும் உணர்வால் சராசரங்கள் எல்லாங் கேட்க "ஓலம்"என, நின்று மொழிந்தார் பொன்னிமா நதி யும் நீங்கி நெறிகாட்ட. கருரு

விண்ணின்முட்டும்பெருக்காறுமேல்பாற்பளிக்குவேற்பென்ன
நண்ணி நிற்கக் கீழ்பால்நீர் வடிந்த நடுவு நல்லவழிப்
பண்ணிக்குளிர்ந்த மணல்பரப்பக் கண்டதொண்டர்பயில்மாரி
கண்ணிற் பொழிந்து மயிர்ப்புளகம் கலக்கக் கையஞ் சலிகுவித்தார்.

நம்பி பாதஞ் சேரமான் பெருமாள் பணிய நாவலூர்ச், செம்பொன் முந்நூல் மணிமார்பர் சேரர் பெருமான் எதிர்

வணங்கி, "உம்பர் நாதர் உமக்களித்த தன்றோ?" என்ன உடன்மகிழ்ந்து, தம்பி ரானைப் போற்றிசைத்துத் தடங்கா வேரி நடுவணைந்தார். கரு௭

செஞ்சொற் றமிழ்நா வலர்கோனும் சேரர் பிரானும் தம்பெருமான், எஞ்ச லில்லா நிறையாற்றி னிடையே அளித்த மணல்வழியில், தஞ்ச முடைய பரிசனமுந் தாமு மேறித் தலைச்சென்று, பஞ்ச நதிவா ணரைப்பணிந்து விழுந் தார் எழுந்தார் பரவினார். கருஅ

அங்க ணரனார் கருணையினை ஆற்றா தாற்றித் திளைத் திறைஞ்சித், தங்கள் பெருமான் திருவருளால் தாழ்ந்து மீண்டுந் தடம்பொன்னிப், பொங்கு நதியின் முன்வந்த படியே நடுவு போந்தேறத், துங்க வரைபோல் நின்றநீர் துரந்து தொடரப் பெருகியதால். கருகூ

ஆய செயலி னதிசயத்தைக் கண்டக் கரையில் ஐயாறு
மேய பெருமா னருள்போற்றி வீழ்ந்து தாழ்ந்து மேல்பாற்போய்த்
தூய மதிவாழ் சடையார்தம் பதிகள் பிறவுந் தொழுதேத்திச்
சேய கொங்க நாடணைந்தார் திருவா ரூரர் சேரருடன். கச0

கோங்கு நாடு கடந்துபோய்க் குலவு மலைநாட் டெல்லையுற
நங்கள் பெருமான் தோழனார் நம்பி தம்பி ரான்தோழர்
அங்கணுடனே அணையஎழுந் தருளாநின்றா ரெனும்விருப்பால்
எங்குமந்நாட் டுள்ளவர்க ளெல்லா மெதிர்கொண் டின்புறுவார்.

பதிக ளெங்குந் தோரணங்கள் பாங்க ரெங்கும் பூவனங்கள்
வதிக ளெங்குங் குளிர்ப்பந்தர் மனைக ளெங்கு மகிற்புகைக்கார்
நதிக ளெங்கும் மலர்ப்பிறங்கல் ஞாங்க ரெங்கு மோங்குவன
நிதிக ளெங்கும் முழவினொலி நிலங்க ளெங்கும் பொலஞ்சுடர்ப்பூ.

திசைகள் தோறும் வரும்பெருமை அமைச்சர் சேனைப் பெருவெள்ளம், குசைகொள் வாசி நிரைவெள்ளங் கும்ப யானை அணிவெள்ளம், மிசைகொள் பண்ணும் பிடிவெள்ளம் மேவுஞ் சோற்று வெள்ளங்கண், டசைவி லின்பப் பெரு வெள்ளத் தமர்ந்து கோடுங்கோ ளூரணைந்தார். கசரு

கோடுங்கோ ளூரின் மதில்வாயில் அணிகோ டித்து மறுகிலுடுத், தொடுங்கோ புரங்கள் மாளிகைகள் சூளி குளிர்சா லைகள்தெற்றி, நெடுங்கோ நகர்கள் ஆடரங்கு நிரந்த மணித்தா மங்கமுகு, விடுங்கோ தைப்பூந் தாமங்கள் நிரைத்து வெவ்வே றலங்கரித்து. கசச

நகர மாந்த ரெதிர்கொள்ள நண்ணி எண்ணி லரங்குதொறும் மகரக் குழைமா தர்கள்பாடி ஆட மணிவீ தியிலணைவார் சிகர நெடுமா ளிகையணையார் சென்று திருவஞ் சைக்களத்து நிகரில்தொண்டர் தமைக்கொண்டு புகுந்தா ருதியர் நெடுந்தகையார்.

இறைவர் கோயில் மணிமுன்றில் வலங்கொண் டிறைஞ்சி எதிர்புக்கு, நிறையுங் காத லுடன்வீழ்ந்து பணிந்து நேர்நின் றுரூரர், முறையில் விளம்புந் திருப்பதிகம் 'முடிப்பது கங்கை' என்றெடுத்துப், பிறைகொள் முடியார் தமைப்பாடிப் பரவிப் பெருமா ளுடன்தொழுதார். கசரு

தொழுது திளைத்துப் புறம்போந்து தோன்றப் பண் ணும் பிடிமேற்பார், முழுது மேத்த நம்பியைமுன் பேற்றிப் பின்பு தாமேறிப், பழுதில் மணிச்சா மரைவீசிப் பைம் பொன் மணிமா ளிகையில்வரும், பொழுது மறுகில் இரு புடையும் மிடைந்தார் வாழ்த்திப் புகல்கின்றார். கசஎ

"நல்ல தோழர் நம்பெருமான் தமக்கு நம்பி இவ"ரென் பார், "எல்லை இல்லாத் தவமுன்பென் செய்தோ மிவரைத் தொழ" என்பார், "செல்வ மினியென் பெறுவதுநஞ் சிலம்பு நாட்டுக்" கெனஉரைப்பார், "சொல்லுந் தரமோ பெருமாள் செய் தொழிலைப் பாரீ" ரெனத்தொழுவார். கசஅ

பூவும் பொரியும் பொன்துகளும் பொழிந்து பணிவார் "பொருவிலிவர், மேவும் பொன்னித் திருநாடே புவிக்குத் திலத" மெனவியப்பார், பாவுந் துதிகள் எம்மருங்கும் பயில வந்து மாளிகையின், மாவுங் களிறும் நெருங்குமணி வாயில் புகுந்து மருங்கிழிந்தார். கசகூ

கழறிற் றறியுந் திருவடியுங் கலைநா வலர்தம் பெருமானும், முழவிற் பொலியுந் திருநெடுந்தோள் முனைவர் தம்மை உடன்கொண்டு, விழவிற் பொலியும் மாளிகையில் விளங்கு சிங்கா சனத்தின்மிசை, நிழல்திக் கொளிரும் பூணரை இருத்தித் தாமும் நேர்நின்று. கரு0

செம்பொற் கரக வாசநீர் தேவி மார்க ளெடுத்தேந்த
அம்பொற் பாதந் தாம்விளக்கி அருளப் புகலு மாரூரர்
தம்பொற் றுளை வாங்கி'இது தகா'தென் றருளத் தரணியில்வீழ்ந்
"தெம்பெற் றிமையால்செய்தனஇங் கெல்லாமிசையவேண்டு"மென.

பெருமாள் வேண்ட எதிர்மறுக்க மாட்டா ரன்பிற் பெருந்தகையார், திருமா நெடுந்தோ ளுதியர்பிரான் செய்த எல்லாங் கண்டிருந்தார், அருமா னங்கொள் பூசனைகள் அடைவே எல்லா மளித்ததற்பின், ஒருமா மதிவெண் குடை வேந்த ருடனே அமுது செய்துவந்தார். கருஉ

சேர ருடனே திருஅமுது செய்த பின்பு கைகோட்டி
ஆரம்நறுமென் கலவைமான்மதச்சாந்தாடைஅணிமணிப்பூண்
ஈர விரைமென் மலர்ப்பணிக ளினைய முதலா யினவருக்கம்
சார எடுத்து வன்தொண்டர்ச் சாத்தி மிக்க தமக்காக்கி.

பாடலாடல் இன்னியங்கள் பயிறல் முதலாம் பண்ணையினில்
நீடுமினிய விநோதங்கள் நெருங்கு காலந் தொறுநிகழ
மாடு விரைப்பூந் தருமணஞ்செய் ஆராமங்கள் வைகுவித்துக்
கூட முனைப்பா டியர்கோவைக் கொண்டு மகிழ்ந்தார் கோதையார்.

சேண்டாடுந்தொழில்மகிழ்வுஞ்சிறுசோற்றுப்பெருஞ்சிறப்பும்
வண்டாடு மலர்வாவி மருவியநீர் விளையாட்டும்
தண்டாமும் மதகும்பத் தடமலைப்போர் சலமற்போர்
கண்டாரா விருப்பெய்தக் காவலனார் காதல்செய்தாள். கருரு

நாவலர்தம் பெருமானுந் திருவாரூர் நகராளும்
தேவர்பிரான் கழலொருநாள் மிகநினைந்த சிந்தையராய்
"ஆவியைஆ ரூரானை மறக்கலுமா மே"என்னும்
மேவியசொற் றிருப்பதிகம் பாடியே வெருவுற்றார். கருசு

திருவாரூர் தனைநினைந்து "சென்றுதொழு வே"னென்று
மருஆர்வத் தொண்டருடன் வழிக்கொண்டு செல்பொழுதில்
ஒருவாநண் புள்ளுருக உடனெழுந்து கைதொழுது
பெருவான வரம்பனார் பிரிவாற்றார் பின்செல்வார். கருஎ

வன்தொண்டர் முன்னெய்தி மனமழிந்த உணர்வினராய்
"இன்றுமது பிரிவாற்றே னென்செய்கேன் யா"னென்ன
"ஒன்றுநீர் வருந்தாதே உமதுபதி யின்கணிருந்
தன்றினார் முனைமுருக்கி அரசாளு" மெனமொழிந்தார். கருஅ

ஆரூரர் மொழிந்தருள அதுகேட்ட அருட்சேரர்
"பாரோடு விசும்பாட்சி எனக்குமது பாதமலர்
தேரூரும் நெடுவீதித் திருவாரூர்க் கெழுந்தருள
நேரூரும் மனக்காதல் நீக்கவுமஞ் சுவ"னென்றார். கருகூ

மன்னவனார் அதுமொழிய வன்தொண்டர் எதிர்மொழிவார்
'என்னுயிருக் கின்னுயிரா மெழிலாரூர்ப் பெருமானை
வன்நெஞ்சக் கள்வனேன் மறந்திரேன் மதியணிந்தார்
இன்னருளால் அரசளிப்பீர் நீர்இருப்பீ" ரென இறைஞ்ச.

மற்றவரும் பணிந்திசைந்தே மந்திரிகள் தமையழைத்துப்
"பொற்புநிறை தொன்னகரி லிற்றைக்கு முன்புகுந்த
நற்பெரும்பண் டாரநா லுவருக்க மானவெலாம்
பற்பலவாம் ஆளின்மிசை ஏற்றிவரப் பண்ணு"மென. ககூக

ஆங்கவரும் அன்றுவனை ஆயமா கியதனங்கள்
ஓங்கியபொன் நவமணிகள் ஒளிர்மணிப்பூண் துகில்வருக்கம்
ஞாங்கர்நிறை விரையுறுப்பு வருக்கமுதல் நலஞ்சிறப்பத்
தாங்குபொதி வினைஞர்மேல் தலமலியக் கொண்டணைந்தார்.

மற்றவற்றின் பரப்பெல்லாம் வன்தொண்டர் பரிசனத்தின்
முற்படவே செலவிட்டு முனைப்பாடித் திருநாடர்
பொற்பதங்கள்பணிந்தவரைத்தொழுதெடுத்துப்புனையலங்கல்
வெற்புயர்தோ ளுறத்தழுவி விடையளித்தார் வன்தொண்டர்.

ஆரூரர் அவர்தமக்கு விடையருளி அங்ககன்று
காரூரு மலைநாடு கடந்தருளிக் கற்சுரமும்

நீருருங் கான்யாறும் நெடுங்கானும் பலகழியச்
சீருருந் திருமுருகன் பூண்டிவழிச் செல்கின்றார். கக௬ச

திருமுருகன் பூண்டிஅயற் செல்கின்ற போழ்தின்கண்
பொருவிடையார் நம்பிக்குத் தாமேபொன் கொடுப்பதலால்
ஒருவர்கொடுப் பக்கொள்ள ஒண்ணாமைக் கதுவாங்கிப்
பெருகருளால் தாங்கொடுக்கப் பெறுவதற்கோ அதுஅறியோம்.

வென்றிமிகு பூதங்கள் வேடர்வடி வாய்ச்சென்று
வன்றொண்டர் பண்டாரங் கவரஅருள் வைத்தருள
அன்றினார் புரமெரித்தா ரருளால்வேட் டுவப்படையாய்ச்
சென்றவர்தாம் வரும்வழியி லிருபாலுஞ் செயிர்த்தெழுந்து.

வில்வாங்கி அலகம்பு விசைநாணிற் சந்தித்துக்
"கொல்வோமிங் கிட்டுப்போ" மெனக்கோபத் தாற்குத்தி
எல்லையில்பண் டாரமெலாங் கவர்ந்துகொள இரிந்தோடி
அல்லலுடன் பறியுண்டா ராரூரர் மருங்கணைந்தார். கக௬எ

ஆரூரர் தம்பாலவ் வேடுவர்சென் றணையாதே
நீருருஞ் செஞ்சடையா ரருளினல் நீங்கஅவர்
சேருராந் திருமுருகன் பூண்டியினிற் சென்றெய்திப்
போருரு மழவிடையார் கோயிலைநா டிப்புக்கார். கக௬அ

அங்கணர்தங் கோயிலினை அஞ்சலிகூப் பித்தொழுது
மங்குலுற நீண்டதிரு வாயிலினை வந்திறைஞ்சிப்
பொங்குவிருப் புடன்புக்கு வலங்கொண்டு புனிதநதி
திங்கள்முடிக் கணிந்தவர்தந் திருமுன்பு சென்றணைந்தார்.

உருகியஅன் பொடுகைகள் குவித்துவிழுந் தமைபாகம்
மருவியதம் பெருமான்முன் வன்றொண்டர் பாடினார்
"வெருவுறவே டுவர்பறிக்கும் வெஞ்சுரத்தில் எத்துக்கிங்
கருகிருந்தீர்? எனக்"கொடுகு வெஞ்சிலை"அஞ் சொற்பதிகம்.

பாடியவர் பரவுதலும் பரம்பொருளா மவரருளால்
வேடுவர்தாம் பறித்தபொரு ளவையெல்லாம் விண்ணெருங்க
நீடுதிரு வாயிலின்முன் குவித்திடலும் நேரிறைஞ்சி
ஆடுமவர் திருவருளா லப்படியே கைக்கொண்டார். கஎக

கைக்கொண்டு கொடுபோமக் கைவிளைஞர் தமைவலி
மைக்கொண்ட மிடற்றுரை வணங்கிப்போய்க் கொங்ககன்று
மெய்க்கொண்ட காதலினால் விரைந்தேகி மென்கரும்புஞ்
செய்க்கொண்ட சாலியுஞ்சூழ் திருவாரூர் சென்றணைந்தார்.

நாவலர்மன் னவரருளால் விடைகொண்ட நரபதியார்
ஆவியினென் றுநண்பி னூரூரர் தமைநினைந்து
மாவலரு மலர்ச்சோலை மகோதையினில் மன்னிமலைப்
பூவலயம் பொதுநீக்கி அரசுரிமை புரிந்திருந்தார். களந

இந்நிலைமை உதியர்பிரான் எம்பிரான் வன்றொண்டர்
பொன்னிவள நாடகன்று மகோதையினில் மேற்புகுந்து
மன்னுதிருக் கயிலையினில் மதவரைமே லெழுந்தருள
முன்னர்வயப் பரிஉகைக்குந் திருத்தொழில்பின் மொழிகின்றாம்.

மலைமலிந்த திருநாட்டு மன்னவனார் மாகடல்போல்
சிலைமலிந்த கொடித்தானைச் சேரலனார் கழல்போற்றி
நிலைமலிந்த மணிமாட நீள்மறுகு நான்மறைசூழ்
கலைமலிந்த புகழ்க்காழிக் கணநாதர் திறமுரைப்பாம். களரு

# சச. கணநாத நாயனார் புராணம்

ஆழி மாநிலத் தகிலமீன் றளித்தவள் திருமுலை அமுதுண்ட
வாழி ஞானசம் பந்தர்வந் தருளிய வளப்பின தளப்பில்லா
ஊழி மாகடல் வெள்ளத்து மிதந்துல கினுக்கொரு முதலாய
காழி மாநகர்த் திருமறை யவர்குலக் காவலர் கணநாதர். ௧

ஆய அன்பர்தாம் அணிமதிற் சண்பையில் அமர்பெருந்
திருத்தோணி, நாய னார்க்குநற் றிருப்பணி யாயின நாளுமன்
பொடு செய்து, மேய அத்திருத் தொண்டினில் விளங்குவார்
விரும்பிவந் தணைவார்க்குத், தூய கைத்திருத் தொண்டினி
லவர்தமைத் துறைதொறும் பயில்விப்பார். உ

நல்ல நந்தன வனப்பணி செய்பவர் நறுந்துணர் மலர் கொய்வோர், பல்ப ணித்தொடை புனைபவர் கொணர்திரு மஞ் சனப் பணிக்குள்ளோர், அல்லு நண்பக லுந்திரு அலகிட் டுத் திருமெழுக் கமைப்போர்கள், எல்லையில்விளக் கெரிப்ப வர் திருமுறை எழுதுவோர் வாசிப்போர். ௩

இனைய பன்றிருப் பணிகளில் அணைந்தவர்க் கேற்றஅத் திருத்தொண்டின், வினைவி ளங்கிட வேண்டிய குறை எலாம் முடித்துமே விடச்செய்தே, அனைய அத்திறம் புரிந வின் தொண்டரை ஆக்கிஅன் புறுவாய்மை, மனைய றம்புரிந் தடியவர்க் கின்புற வழிபடுந் தொழில்மிக்கார். ச

இப்பெ ருஞ்சிறப் பெய்திய தொண்டர்தா மேறுசீர் வளர்காழி, மெய்ப்பெ ருந்திரு ஞானபோ னகர்கழல் மேவிய விருப்பாலே, முப்பெ ரும்பொழு தருச்சனை வழிபாடு மூளுமன் பொடுநாளும், ஒப்பில் காதல்கூர் உளங்களி சிறந் திட ஒழுகினர் வழுவாமல். ரு

ஆன தொண்டினி லமர்ந்தபே ரன்பரு மகலிடத் தினிலென்றும், ஞான முண்டவர் புண்டரீ கக்கழ லருச் சனை நலம்பெற்றுத், தூந றுங்கொன்றை முடியவர் சுடர் நெடுங் கயிலைமால் வரையெய்தி, மான நற்பெருங் கணங்கட்கு நாதராம் வழித்தொண்டின் நிலைபெற்றார். சு

உலக முய்யநஞ் சுண்டவர் தொண்டினில் உறுதிமெய் யுணர்வெய்தி, அலகில் தோண்டருக் கறிவளித் தவர்திற மவ னியின் மிசையாக்கும், மலர்பெ ரும்புகழ்ப் புகலியில் வருங் கண நாதனர் கழல்வாழ்த்திக், குலவு நீற்றுவண் கூற்றுவ னார்திறங் கொள்கையின் மொழிகின்றாம். எ



# ௪௫. கூற்றுவ நாயனார் புராணம்

துன்னார் முனைகள் தோள்வலியால் வென்று சூலப் படையார்தம், நன்னா மந்தந் திருநாவில் நாளும் நவிலும் நலமிக்கார், பன்னா ளீசர் அடியார்தம் பாதம் பரவிப் பணிந் தேத்தி, முன்னா கியநற் றிருத்தொண்டின் முயன்றார் களந்தை முதல்வனார். ௧

அருளின் வலியா லரசொதுங்க அவனி எல்லா மடிப்படுப்பார், பொருளின் முடிவுங் காண்பரிய வகையால் பொலிவித் திகல்சிறக்க, மருளுங் களிறு பாய்புரவி மணித் தேர் படைஞர் முதல்மாற்றார், வெருளுங் கருவி நான்குநிறை வீரச் செருக்கின் மேலானார். ௨

வென்றி வினையின் மீக்கூர வேந்தர் முனைகள் பலமுருக்கிச்
சென்று தும்பைத் துறைமுடித்துஞ் செருவில்வாகைத் திறங்கெழுமி
மன்றல் மாலை மிலைந்தவர்தம் வளநா டெல்லாங் கவர்ந்துமுடி
ஒன்று மொழிய அரசர்திரு எல்லா முடைய ராயினார். ௩

மல்லல் ஞாலம் புரக்கின்றார் மணிமா மவுலி புனைவதற்குத்
தில்லை வாழந் தணர்தம்மை வேண்ட அவரும் செம்பியர்தம்
தொல்லை நீடுங் குலமுதலோர்க் கன்றிச் சூட்டோம்முடி என்று
நல்கா ராகிச் சேரலன்றன் மலைநா டணைய நண்ணுவார். ௪

ஒருமை உரிமைத் தில்லையந் தணர்கள் தம்மி லொருகுடியைப்
பெருமை முடியை அருமைபுரி காவல் பேணும் படிஇருத்தி
இருமை மரபுந் தூயவர்தாஞ் சேரர் நாட்டி லெய்தியபின்
வரும்ஐ யுறவால் மனந்தளர்ந்து மன்றுளாடுங் கழல்பணிவார்.

அற்றை நாளி லிரவின்கண் "அடியேன் தனக்கு முடியாகப்
பெற்ற பேறு மலர்ப்பாதம் பெறவே வேண்டு" மெனப்பரவும்
பற்று விடாது துயில்வோர்க்குக் கனவில் பாத மலரளிக்க
உற்ற அருளால் அவைதாங்கி உலக மெல்லாந் தனிப்புரந்தார்.

அம்பொன் நீடு மம்பலத்துள் ஆரா அமுதத் திருநடஞ்செய்
தம்பி ரானார் புவியில்மகிழ் கோயி லெல்லாந் தனித்தனியே
இம்பர் ஞாலங் களிகூர எய்தும் பெரும்பூ சனையியற்றி
உம்பர் மகிழ அரசளித்தே உமையாள் கணவ னடிசேர்ந்தார்.

காதற் பெருமைத் தொண்டினிலைக் கடல்சூழ் வையங் காத்தளித்துக்
கோதங் ககல முயல்களந்தைக் கூற்ற னார்தங் கழல்வணங்கி
நாத மறைதந் தளித்தாரை நடைநூற் பாவில் நவின்றேத்தும்
போதமருவிப்பொய்யடிமை இல்லாப்புலவர் செயல்புகல்வாம்.

தேனுங் குழலும் பிழைத்ததிரு மொழியாள் புலவி தீர்க்கமதி
தானும் பணியும் பகைதீர்க்குஞ் சடையார் தூது தருந்திருநாள்
கூனுங் குருடுந் தீர்த்தேவல் கொள்வார் குலவு மலர்ப்பாதம்
யானும் பரவித் தீர்க்கின்றேன் ஏழு பிறப்பின் முடங்குகூன்.

சருக்கம் ஏழுக்குத் திருவிருத்தம் ஆ ஙகூசங



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## அ. பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம்

# சகூ. பொய்யடிமையில்லாத புலவர் புராணம்

"செய்யுள்நிகழ் சொற்றெளிவும் செவ்வியநூல் பலநோக்கும்
மெய்யுணர்வின் பயனிதுவே" எனத்துணிந்து விளங்கியோளிர்
மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார்
பொய்யடிமை யில்லாத புலவரேனப் புகழ்மிக்கார். க

*பொற்பமைந்த அரவாரும் புரிசடையார் தமையல்லால்
சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறித் தலைநின்ற
பெற்றியினில் மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்
மற்றவர்தம் பெருமையா ரறிந்துரைக்க வல்லார்கள். உ*

*ஆங்கவர்த மடியிணைகள் தலைமேற்கொண் டவனிஎலாம்
தாங்கியவெண் குடைவளவர் குலஞ்செய்த தவமனையார்
ஓங்கிவளர் திருத்தொண்டின் உண்மையுணர் செயல்புரிந்த
பூங்கழலார் புகழ்ச்சோழர் திருத்தொண்டு புகல்கின்றாம். ௩*

# சஎ. புகழ்ச்சோழ நாயனார் புராணம்

குலகிரியின் கொடுமுடிமேல் கொடிவேங்கைக் குறியெழுதி
நிலவுதரு மதிக்குடைக்கீழ் நெடுநிலங்காத் தினிதளிக்கும்
மலர்புகழ்வண் டமிழ்ச்சோழர் வளநாட்டு மாமூதூர்
உலகில்வள ரணிக்கெல்லா முள்ளுறையு ராமுறையூர். க

அளவில்பெரும் புகழ்நகர மதனிலணி மணிவிளக்கும்
இளவெயிலின் சுடர்ப்படலை இரவொழிய எறிப்பனவாய்க்
கிளரொளிசேர் நெடுவானப் பேர்யாற்றுக் கொடிகெழுவும்
வளரொளிமா ளிகைநிரைகள் மருங்குடைய மறுகெல்லாம். உ

நாகதலத் தும்பிலத்தும் நானிலத்தும் நலஞ்சிறந்த
போகமனைத் தினுக்குறுப்பாம் பொருவிறந்த வளத்தினவாய்
மாகநிறைந் திடமலிந்த வரம்பில்பல பொருள்பிறங்கும்
ஆகரமொத் துளஅளவில் ஆவணவீ திகளெல்லாம். ௩

பார்நனைய மதம்பொழிந்து பனிவிசும்பு கொளமுழங்கும்
போர்முகவெங் கறையடியும் புடையினமென் றடையவரும்
சோர்மழையின் விடுமதத்துச் சுடருநெடு மின்னோடைக்
கார்முகிலும் பலதெரியா களிற்றுநிரைக் களமெல்லாம். ச

படுமணியும் பரிச்செருக்கு மொலிகிளரப் பயில்புரவி
நெடுநிரைமுன் புல்லுண்வாய் நீர்த்தரங்க நுரைநிவப்ப
விடுசுடர்மெய் யுறையடுக்கல் முகில்படிய விளங்குதலால்
தொடுகடல்க ளனையபல துரங்கசா லைகளெல்லாம். ரு

துளைக்கைஐரா வதக்களிறுந் துரங்கஅர சுந்திருவும்
விளைத்தஅமு துந்தருவும் விழுமணியுங் கொடுபோத
உளைத்தகட லிவற்றொன்று பெறவேண்டி உம்பருநர்
வளைத்ததுபோன் றுளதங்கண் மதில்சூழ்ந்த மலர்க்கிடங்கு.

காரேறுங் கோபுரங்கள் கதிரேறும் மலர்ச்சோலை
தேரேறு மணிவீதி திசையேறும் வசையிலணி
வாரேறும் முலைமடவார் மருங்கேறும் மலர்க்கணையொண்
பாரேறும் புகழ்உறந்தைப் பதியின்வளம் பகர்வரிதால். எ

அந்நகரில் பாரளிக்கு மடலரச ராகின்றார்
மன்னுதிருத் தில்லைநகர் மணிவீதி அணிவிளக்கும்
சென்னிநீ டநபாயன் திருக்குலத்து வழிமுதலோர்
பொன்னிநதிப் புரவலனார் புகழ்ச்சோழ ரெனப்பொலிவார். அ

ஒருகுடைக்கீழ் மண்மகளை உரிமையினில் மணம்புணர்ந்து
பருவரைத்தோள் வென்றியினால் பார்மன்னர் பணிகேட்பத்
திருமலர்த்தும் பேருலகுஞ் செங்கோலின் முறைநிற்ப
அருமறைச்சைவ வந்தழைப்ப அரசளிக்கு மந்நாளில். கூ

பிறைவளருஞ் செஞ்சடையார் பேணுசிவா லயமெல்லாம்
நிறைபெரும்பூ சனைவிளங்க நீடுதிருத் தொண்டர்தமைக்
குறையிரந்து வேண்டுவன குறிப்பின்வழி கொடுத்தருளி
முறைபுரிந்து திருநீற்று முதல்நெறியே பாலிப்பார். க0

அங்கணினி துறையுநா ளரசிறைஞ்ச வீற்றிருந்து
கொங்கரொடு குடபுலத்துக் கோமன்னர் திறைகொணரத்
தங்கள்குல மரபின்முதற் றனிநகராங் கருவூரில்
மங்கலநா ளரசுரிமைச் சுற்றமுடன் வந்தணைந்தார். கக

வந்துமணி மதிற்கருவூர் மருங்கணைவார் வானவர்சூழ்
இந்திரன்வந் தமரர்புரி எய்துவான் எனஎய்திச்
சிந்தைகளி கூர்ந்தரனார் மகிழ்திருவா னிலைக்கோயில்
முந்துறவந் தணைந்திறைஞ்சி மொய்யொளிமா ளிகைபுகுந்தார்.

மாளிகைமுன் அத்தாணி மண்டபத்தின் மணிபுனைபொற்
கோளரிஆ சனத்திருந்து குடபுலமன் னவர்கொணர்ந்த
ஒளிநெடுங் களிற்றினணி உலப்பில்பரி துலைக்கனகம்
நீளிடைவில் விலகுமணி முதல்நிறையுந் திறைகண்டார். கந

திறைகொணர்ந்த அரசர்க்குச் செயலுரிமைத் தொழிலருளி
"முறைபுரியுந் தனித்திகிரி முறைநில்லா முரணரசர்

உறைபரண முளவாகில் தெரிந்துரைப்பீ" ரெனஉணர்வு
நிறைமதிநீ டமைச்சர்க்கு மொழிந்தருளி நிகழுநாள். கசு

சென்றுசிவ காமியார் கொணர்திருப்பள் ளித்தாமம்
அன்றுசித றுங்களிற்றை அறஎறிந்து பாகரையும்
கொன்றஎறி பத்தரெதி "ரென்னையுங்கொன் றருளு"மென
வென்றிவடி வாள்கொடுத்துத் திருத்தொண்டில் மிகச்சிறந்தார்.

விளங்குதிரு மதிக்குடைக்கீழ் வீற்றிருந்து பாரளிக்கும்
துளங்கொளிநீள் முடியார்க்குத் தொன்முறைமை நெறிஅமைச்சர்
"அளந்ததிறை முறைகொணரா அரசனுள ளொருவ" னென
உளங்கொள்ளும் வகைஉரைப்பஉறுவியப்பால் முறுவலிப்பார்.

"ஆங்கவன்யார்?" ரென்றருள "அதிகனவ னணித்தாக
ஓங்கெயில்சூழ் மலைஅரணத் துள்ளுஙறவா" னெனஉரைப்ப
"ஈங்குநமக் கெதிர்நிற்கும் அரணுளதோ! படைஎழுந்துப்
பாங்கரணந் துகளாகப் பற்றறுப்பீ" ரெனப்பகர்ந்தார். கஎ

அடல்வளவ ராணையினு லமைச்சர்களும் புறம்போந்து
கடலனைய நெடும்படையைக் கைவகுத்து மேற்செல்வார்
படர்வனமும் நெடுங்கிரியும் பயிலரணும் பொடியாக
மிடலுடைநாற் கருவியுற வெஞ்சமரம் மிகவிளைத்தார். கஅ

வளவனூர் பெருஞ்சேனை வஞ்சிமலர் மிலைந்தேற
அளவிலா ணக்குறும்பின் அதிகர்கோன் அடற்படையும்
உளநிறைவெஞ் சினந்திருகி உயர்காஞ்சி மிலைந்தேறக்
கிளர்கடல்கள் இரண்டென்ன இருபடையும் கிடைத்தனவால்.

கயமொடு கயமெதிர் குத்தின
அயமுடன் அயமுனை முட்டின
வயவரும் வயவரு முற்றனர்
வியனமர் வியலிட மிக்கதே. உ௦

மலையொடு மலைகள் மலைந்தென
அலைமத அருவி கொழிப்பொடு
சிலையினர் விசையின் மிசைத்தெறு
கொலைமத கரிகொலை யுற்றவே. உக

சூறை மாருத மொத்தெதிர்
ஏறு பாய்பரி வித்தகர்
வேறு வேறு தலைப்பெய்து
சீறி ஆவி செகுத்தனர். ௨௨

மண்டு போரின் மலைப்பவர்
துண்ட மாயிட உற்றெதிர்
கண்ட ராவி கழித்தனர்
உண்ட சோறு கழிக்கவே. ௨௩

வீடி னாருட விற்பொழி
நீடு வார்குரு திப்புனல்
ஓடு மாறென ஒத்தது
கோடு போல்வ பிணக்குவை. ௨௪

வாணி லாவு கருங்கொடி
மேனி லாவு பருந்தினம்
ஏனை நீள்கழு கின்குலம்
ஆன ஊனொ டெழுந்தவே. ௨௫

வரிவிற் கதைசக் கரமுற் கரம்வாள்
சுரிகைப் படைசத் திகழுக் கடைவேல்
எரிமுத் தலைகப் பணமெற் பயில்கோல்
முரிவுற் றனதுற் றனமொய்க் களமே. ௨௬

வடிவே லதிகன் படைமா ளவரைக்
கடிசூ ழரணக் கணவாய் நிரவிக்
கொடிமா மதில்சூ ழ்குறும் பொறையூர்
முடிசே ரியனார் படைமுற் றியதே. ௨௭

முற்றும் பொருசே னைமுனைத் தலையில்
கற்றின் புரிசைப் பதிகட் டழியப்
பற்றுந் துறைநொச் சிபரிந் துடையச்
சுற்றும் படைவீ ரர்துணித் தனரே. ௨௮

மாறுற் றவிறற் படைவா ளதிகன்
நூறுற் றபெரும் படைநூ ழில்படப்

பாறுற் றளயிற் பதிபற் றறவிட்
டேறுற் றனன்ஓ டிஇருஞ் சுரமே. ௨௯.

அதிகன் படைபோர் பொருதற் றதலைப்
பொதியின் குவைஎண் ணிலபோ யினபின்
நிதியின் குவைமங் கையர்நீள் பரிமா
எதிருங் கரிபற் றினரெண் ணிலரே. ௩0.

அரண்முற் றினறிந் தஅமைச் சர்கள்தாம்
இரணத் தொழில்விட் டெயில்சூழ் கருவூர்
முரணுற் றசிறப் பொடுமுன் னினர்நீள்
தரணித் தலைவன் கழல்சார் வுறவே. ௩௧.

மன்னுங் கருவூர் நகர்வா யிலின்வாய்
முன்வந் தகருந் தலைமொய் குவைதான்
மின்னுஞ் சுடர்மா முடிவேல் வளவன்
தன்முன் புகொணர்ந் தனர்தா னையுளோர். ௩௨.

மண்ணுக் குயிரா மெனுமன் னவனூர்
எண்ணிற் பெருகுந் தலையா வையினும்
நண்ணிக் கொணருந் தலையொன் றினடுக்
கண்ணுற்ற தோர்புன் சடைகண் டனரே. ௩௩.

கண்டபொழு தேநடுங்கி மனங்கலங்கிக் கைதொழுது
கொண்டபெரும் பயத்தினுடன் குறித்தெதிர்சென் றதுகொணர்ந்த
திண்டிறலோன் கைத்தலையில் சடைதெரியப் பார்த்தருளிப்
புண்டரிகத் திருக்கண்ணீர் பொழிந்திழியப் புரவலனார். ௩௪

"முரசுடைத்திண் படைகொடுபோய் முதலமைச்சர் முனைமுருக்கி
உரைசிறக்கும் புகழ்வென்றி ஒன்றொழிய ஒன்றாமல்
திரைசரித்த கடலுலகில் திருநீற்றின் நெறிபுரந்தியான்
அரசளித்த படிசால அழகி!"தென அழிந்தயர்வார். ௩௫

"தார்தாங்கிக் கடன்முடித்த சடைதாங்குந் திருமுடியார்
நீர்தாங்குஞ் சடைப்பெருமான் நெறிதாங்கண் டவராஞர்
சீர்தாங்கு மிவர்வேணிச் சிரந்தாங்கி வரக்கண்டும்
பார்தாங்க இருந்தேனோ பழிதாங்கு வே"னென்றார். ௩௬

என்றருளிச் செய்தருளி இதற்கிசையும் படிதுணிவார்
நின்றநெறி அமைச்சர்க்கு "நீள்நிலங்காத் தரசளித்து
மன்றில்நடம் புரிவார்தம் வழித்தொண்டின் வழிநிற்ப
வென்றிமுடி என்குமரன் தனைப்புனைவீ" ரெனவிதித்தார்.

அம்மாற்றங் கேட்டழியும் அமைச்சரையு மிடரகற்றிக்
கைம்மாற்றுஞ் செயல்தாமே கடனாற்றுங் கருத்துடையார்
செம்மார்க்கந் தலைநின்று செந்தீமுன் வளர்ப்பித்துப்
போய்ம்மாற்றுந் திருநீற்றுப் புனைகோலத் தினிற்பொலிந்தார்.

கண்டசடைச் சிரத்தினையோர் கனகமணிக் கலத்தேந்திக்
கொண்டுதிரு முடித்தாங்கிக் குலவுமெரி வலங்கொள்வார்
அண்டர்பிரான் திருநாமத் தஞ்செழுத்து மெடுத்தோதி
மண்டுதழற் பிழம்பினிடை மகிழ்ந்தருளி உள்புக்கார். ௩௯

புக்கபொழு தலர்மாரி புவிநிறையப் பொழிந்திழிய
மிக்கபெரு மங்கலதூ ரியம்விசும்பின் முழக்கெடுப்பச்
செக்கர்நெடுஞ் சடைமுடியார் சிலம்பலம்பு சேவடியின்
அக்கருணைத் திருநிழற்கீ ழாராமை அமர்ந்திருந்தார். ௪௦

முரசங்கொள் கடற்றானை மூவேந்தர் தங்களின்முன்
பிரசங்கொள் நறுந்தொடையல் புகழ்ச்சோழர்பெருமையினைப்
பரசுங்குற் றேவலினா லவர்பாதம் பணிந்தேத்தி
நரசிங்க முனையர்திறம் நாமறிந்த படிஉரைப்பாம். ௪௧

# சஅ. நரசிங்கமுனையரைய நாயனார் புராணம்

கோடாத நெறிவிளக்கும் குலமரபி லரசளித்து
மாடாக மணிகண்டர் திருநீறே மனங்கொள்வார்
தேடாத பெருவளத்தில் சிறந்ததிரு முனைப்பாடி
நாடாளுங் காவலனார் நரசிங்க முனையரையர். க

இம்முனையர் பெருந்தகையார் இருந்தாசு புரந்துபோய்த்
தெம்முனைகள் பலகடந்து தீங்குநெறிப் பாங்ககல
மும்முனைநீ ளிலைச்சூல முதற்படையார் தொண்டுபுரி
அம்முனைவ ரடியடைவே அரும்பெரும்பே றெனஅடைவார்.

சினவிடையார் கோயில்தொறுந் திருச்செல்வம் பெருக்குநெறி
யனஇடைஆர் உயிர்துறக்க வருமெனினு மவைகாத்து
மனவிடைஆ மைத்தொடைய லணிமார்பர் வழித்தொண்டு
கனவிடையா கிலும்வழுவாக் கடனாற்றிச் செல்கின்றார். ௩

ஆறணிந்த சடைமுடியார்க் காதிரைநாள் தொறுமென்றும்
வேறுநிறை வழிபாடு விளங்கியபூ சனைமேவி
நீறணியுந் தொண்டரணைந் தார்க்கெல்லாம் நிகழ்பசும்பொன்
நூறுகுறை யாமலளித் தின்னமுது நுகர்விப்பார். ௪

ஆனசெயல் முறைபுரிவா ரொருதிருவா திரைநாளில்
மேன்மைநெறித் தொண்டர்க்குவிளங்கியபொன் னளிக்கும்பொழுதில்
மானநிலை அழிதன்மை வருங்காமக் குறிமலர்ந்த
ஊனநிகழ் மேனியராய் ஒருவர்நீ றணிந்தணைந்தார். ௫

மற்றவர்தம் வடிவிருந்த படிகண்டு மருங்குள்ளார்
உற்றஇகழ்ச் சியராகி ஒதுங்குவார் தமைக்கண்டு
கொற்றவனா ரெதிர்சென்று கைகுவித்துக் கொடுபோந்தப்
பெற்றியினார் தமைமிகவுங் கொண்டாடிப் பேணுவார். ௬

சீலமில ரேஎனினுந் திருநீறு சேர்ந்தாரை
ஞாலமிகழ்ந் தருநரகம் நண்ணுமே லெண்ணுவார்
பாலணைந்தார் தமக்களித்த படிஇரட்டிப் பொன்கொடுத்து
மேலவரைத் தொழுதினியமொழிவிளம்பிவிடைகொடுத்தார்.

இவ்வகையே திருத்தொண்டின் அருமைநெறி எந்நாளும்
செவ்வியஅன் பினிலாற்றித் திருந்தியசிந் தையராகிப்
பைவளர்வா ளரவணிந்தார் பாதமலர் நிழல்சேர்ந்து
மெய்வகைய வழிஅன்பின் மீளாத நிலைபெற்றார். ௮

விடநாக மணிந்தபிரான் மெய்த்தொண்டு விளைந்தநிலை
உடனாகும் நரசிங்க முனையர்பிரான் கழலேத்தித்
தடநாக மதஞ்சொரியத் தனஞ்சொரியுங் கலஞ்சேரும்
கடனாகை அதிபத்தர் கடனாகைக் கவினுரைப்பாம். ௬

# ௪௧. அதிபத்த நாயனார் புராணம்

மன்னி நீடிய செங்கதி ரவன்வழி மரபின்
தொன்மை யாம்முதற் சோழர்தந் திருக்குலத் துரிமைப்
பொன்னி நாடெனுங் கற்பகப் பூங்கொடி மலர்போல்
நன்மை சான்றது நாகப்பட் டினத்திரு நகரம். ௧

தாம நித்திலக் கோவைகள் சரிந்திடச் சரிந்த
தேம லர்க்குழல் மாதர்பந் தாடுதெற் றிகள்சூழ்
காமர் பொற்சுடர் மாளிகைக் கருங்கடல் முகந்த
மாமு கிற்குலம் மலையென ஏறுவ மருங்கு. ௨

பெருமை யிற்செறி பேரொலி பிறங்கலின் நிறைந்து
திருமக ட்குவாழ் சேர்விட மாதலின் யாவும்
தருத லின்கடல் தன்னினும் பெரிதெனத் திரைபோல்
கரிப ரித்தொகை மணிதுகில் சொரிவதாங் கலத்தால். ௩

நீடு தொல்புகழ் நிலம்பதி னெட்டினும் நிறைந்த
பீடு தங்கிய பலபொருள் மாந்தர்கள் பெருகிக்
கோடி நீள்தனக் குடியுடன் குவலயங் காணும்
ஆடி மண்டலம் போல்வதவ் வணிகிளர் மூதூர். ௪

அந்நெ டுந்திரு நகர்மருங் கலைகடல் விளிம்பில்
பன்னெ டுந்திரை நுரைதவழ் பாங்கரின் ஞாங்கர்
மன்னு தொன்மையின் வலைவளத் துறையினில் மலிந்த
தன்மை வாழ்குடி மிடைந்தது தடநுளைப் பாடி. ௫

புயல எப்பன எனவலை புறம்பணை குரம்பை
அயல எப்பன மீன்விலைப் பசும்பொனி னடுக்கல்

வியல ளக்கரில் விடுந்திமில் வாழ்நர்கள் கொணர்ந்த
கயல ளப்பன பரத்தியர் கருநெடுங் கண்கள். சு

உணங்கல் மீன்கவர் உறுநசைக் குருகுடன் அணைந்த
கணங்கொள் ஓதிமம் கருஞ்சினைப் புன்னையங் கானல்
அணங்கு நுண்ணிடை நுளைச்சியர் அசைநடைக் கழிந்து
மணங்கொள் கொம்பரின் மருங்குநின் றிழியல மருளும். எ

வலைநெ டுங்கொடர் வடம்புடை வலிப்பவ ரொலியும்
விலைப கர்ந்துமீன் குவைகொடுப் பவர்விளி யொலியும்
தலைசி றந்தவெள் வளைசொரி பவர்தழங் கொலியும்
அலைநெ டுங்கட லதிரொலிக் கெதிரொலி அனைய. அ

அனைய தாகிய அந்நுளைப் பாடியி லமர்ந்து
மனைவ ளம்பொலி நுளையர்தங் குலத்தினில் வந்தார்
புனைஇ ளம்பிறை முடியவ ரடித்தொண்டு புரியும்
வினைவி ளங்கிய அதிபத்த ரெனநிகழ் மேலோர். கூ

ஆங்க வன்பர்தாம் நுளையர்தந் தலைவரா யவர்கள்
ஏங்கு தெண்டிரைக் கடலிடைப் பலபட வியக்கிப்
பாங்கு சூழ்வலை வளைத்துமீன் படுத்துமுன் குவிக்கும்
ஓங்கு பல்குவை உலப்பில உடையராய் உயர்வார். க0

முட்டில் மீன்கொலைத் தொழில்வளத் தவர்வலை முகந்து
பட்ட மீன்களில் ஒருதலை மீன்படு தோறும்
"நட்ட மாடிய நம்பருக்" கெனநளிர் முந்நீர்
விட்டு வந்தனர் விடாதஅன் புடனென்றும் விருப்பால். கக

வாகு சேர்வலை நாளொன்றில் மீனொன்று வரினும்
ஏக நாயகர் தங்கழற் கெனவிடு மியல்பால்
ஆகு நாள்களில் அநேகநாள் அடுத்தொரு மீனே
மேக நீர்படி வேலையிற் படவிட்டு வந்தார். கஉ

மீன்வி லைப்பெரு குணவினில் மிகுபெருஞ் செல்வம்
தான்ம றுத்தலி னுணவின்றி அருங்கிளை சாம்பும்
பான்மை பற்றியும் வருந்திலர் பட்டமீ னொன்று
மான்ம றிக்கரத் தவர்கழற் கெனவிட்டு மகிழ்ந்தார். கங

சால நாள்களிப் படிவரத் தாம்உணவயர்த்துக்
கோல மேனியுந் தளரவுந் தந்தொழில் குறையாச்
சீல மேதலை நின்றவர் தந்திறந் தெரிந்தே
ஆல முண்டவர் தொண்டரன் பெனுமமு துண்பார். கச

ஆன நாளொன்றி லவ்வொரு மீனுமங் கொழித்துத்
தூநி றப்பசுங் கனகநற் சுடர்நவ மணியால்
மீனு றுப்புற அமைத்துல கடங்கலும் விலையாம்
பான்மை அற்புதப் படியதொன் றிடுவலைப் படுத்தார். கரு

வாங்கு நீள்வலை அலைகடற் கரையில்வந் தேற
ஓங்கு செஞ்சுட ருதித்தென உலகெலாம் வியப்பத்
தாங்கு பேரொளி தழைத்திடக் காண்டலு மெடுத்துப்
பாங்கு நின்றவர் "மீனொன்று படுத்தன" மென்றார். கசு

என்று மற்றுளோ ரியம்பவு மேறுசீர்த் தொண்டர்
"பொன்றி ரள்சுடர் நவமணி பொலிந்தமீ னுறுப்பால்
ஒன்றும் மற்றிது என்னையா ளுடையவர்க் காகும்
சென்று பொற்கழல் சேர்"கெனத் திரையொடுந் திரித்தார்.

அகில லோகமும் பொருள்முதற் றுமெனு மளவில்
புகலு மப்பெரும் பற்றினைப் புரையற எறிந்த
இகலில் மெய்த்திருத் தொண்டர்முனிறைவர்தாம் விடைமேல்
முகில்வி சும்பிடை அணைந்தனர் பொழிந்தனர் முகைப்பூ. கஅ

பஞ்ச நாதமு மெழுந்தன அதிபத்தர் பணிந்தே
அஞ்ச லிக்கரம் சிரமிசை அணைத்துநின் றவரை
நஞ்சு வாண்மணி மிடற்றவர் சிவலோகம் நண்ணி
அஞ்சி றப்புடை அடியர்பாங் குறத்தலை அளித்தார். ககூ

தம்ம றம்புரி மரபினில் தரும்பெருந் தொண்டு
மெய்ம்மை யேபுரி அதிபத்தர் விளங்குதாள் வணங்கி
மும்மை யாகிய புவனங்கள் முறைமையிற் போற்றும்
செம்மை நீதியார் கலிக்கம்பர் திருத்தொண்டு பகர்வாம். உ0

# ௫௦. கலிக்கம்ப நாயனார் புராணம்

உரிமை ஒழுக்கந் தலைநின்ற உயர்தொன் மரபில் நீடுமனைத்
தருமநெறியால்வாழ்குடிகள் தழைத்துவளருந்தன்மையதாய்
வருமஞ் சுறையும் மலர்ச்சோலை மருங்குசூழ்ந்தவளம்புறவில்
பெருமையுலகுபெறவிளங்கும்மேல்பாற்பெண்ணாகடமூதூர்.

மற்றப் பதியி னிடைவாழும் வணிகர் குலத்துவந்துதித்தார்
கற்றைச்சடையார் கழற்காதலுடனேவளர்ந்தகருத்துடையார்
அற்றைக் கன்று தூங்கானை மாடத் தமர்ந்தா ரடித்தொண்டு
பற்றிப் பணிசெய் கலிக்கம்ப ரென்பார்மற்றோர்பற்றில்லார்.

ஆன அன்பர் தாமென்று மரனார் அன்பர்க் கமுதுசெய
மேன்மைவிளங்கு போனகமும்விரும்புகறிநெய் தயிர்தீம்பால்
தேனி னினிய கனிகட்டி திருந்த அமுது செய்வித்தே
ஏனை நிதியம் வேண்டுவன எல்லா மின்ப முறஅளிப்பார்.

அன்ன வகையால் திருத்தொண்டுபுரியுநாளி லங்கொருநாள்
மன்னு மனையி லமுதுசெய வந்த தொண்டர் தமைஎல்லாம்
தொன்மை முறையே அமுதுசெயத் தொடங்குவிப்பாரவர்தம்மை
முன்னரழைத்துத்திருவடிகளெல்லாம்விளக்கமுயல்கின்றார்.

திருந்து மனையார் மனையெல்லாந் திகழ விளக்கிப் போனகமும், பொருந்து சுவையிற் கறியமுதும் புனிதத் தண்ணீருடன்மற்றும், அருந்து மியல்பி னுள்ளனவு மமைத்துக் கரக நீரளிக்க, விரும்பு கணவர் பெருந்தவர்தாள் எல்லாம் விளக்கும் பொழுதின்கண். ௫

முன்பு தமக்குப் பணிசெய்யுந் தமராய் ஏவல் முனிந்துபோய்
என்பு மரவு மணிந்தபிரா னடியா ராகி அங்கெய்தும்
அன்ப ருடனே திருவேடந் தாங்கி அணைந்தா ரொருவர்தாம்
பின்பு வந்து தோன்றஅவர் பாதம்விளக்கும்பெருந்தகையார்.

கையா லவர்தம் அடிபிடிக்கக் காதல் மனையார் ‘‘முன்பேவல்
செய்யா தகன்ற தமர்போலு’’ மென்று தேரும் பொழுதுமலர்

மொய்யார் வாசக் கரகநீர் வார்க்க முட்ட முதற்றொண்டர்
மையார் கூந்தல் மனையாரைப் பார்த்து மனத்துட்கருதுவார்.

"வெறித்த கொன்றை முடியார்தம் அடியா ரிவர்முன் மேவுநிலை, குறித்து வெள்கி நீர்வாரா தொழிந்தா" ரென்று மனங்கொண்டு, மறித்து நோக்கார் வடிவாளை வாங்கிக் கரகம் வாங்கிக்கை, தறித்துக் கரக நீரெடுத்துத் தாமே அவர்தாள் விளக்கினார். ௮

விளக்கி அமுது செய்வதற்கு வேண்டு வனதா மே செய்து, துளக்கில் சிந்தை யுடன்றொண்டர் தம்மை யமுது செய்வித்தார், அளப்பில் பெருமை யவர்பின்னும் அடுத்த தொண்டின் வழிநின்று, களத்தில் நஞ்ச மணிந்தவர்தாள் நிழற்கீழ் முடியா ருடன்கலந்தார். ௯

ஓத மலிநீர் விடமுண்டா ரடியார் வேட மென்றுணரா
மாத ரார்கை தடிந்தகலிக் கம்பர் மலர்ச்சே வடிவணங்கிப்
பூத நாதர் திருத்தொண்டு புரிந்து புவனங் களிற்பொலிந்த
காத லன்பர் கலிநீதி யார்தம் பெருமை கட்டுரைப்பாம். ௧௦

# ௫௧. கலிய நாயனார் புராணம்

பேருலகி லோங்குபுகழ்ப் பெருந்தொண்டை நன்னாட்டு
நீருலவுஞ் சடைக்கற்றை நிருத்தர்திருப் பதியாகுங்
காருலவு மலர்ச்சோலைக் கன்னிமதில் புடைசூழ்ந்து
தேருலவு நெடுவீதி சிறந்ததிரு ஒற்றியூர். ௧

பீடுகெழும் பெருந்தெருவும் புத்தருடன் பீலியமண்
வேடமுடை யவர்பொருள்போ லாகாச வெளிமறைக்கும்
ஆடுகொடி மணிநெடுமா ளிகைநிரைகள் அலைகமுகின்
காடனைய கடல்படப்பை எனவிளங்குங் கவின்காட்டும். ௨

பன்னுதிருப் பதிகஇசைப் பாட்டோவா மண்டபங்கள்
அன்னநடை மடவார்க ளாட்டோவா அணியரங்கு

பன்முறைதூ ரியமுழங்கு விழாவோவா பயில்வீதி
செந்நெலடி சிற்பிறங்க லுணவோவா திருமடங்கள். ௩

கெழுமலர்மா தவிபுன்னை கிளைஞாழல் தளையவிழுங்
கொழுமுகைய சண்பகங்கள் குளிர்செருந்தி வளர்கைதை
முழுமணமே முந்நீருங் கமழமலர் முருகுயிர்க்கும்
செழுநிலவின் துகளனைய மணற்பரப்புந் திருப்பரப்பு. ௪

எயிலணையும் முகின்முழக்கு மெறிதிரைவே லையின்முழக்கும்
பயில்தருபல் லியமுழக்கும் முறைதெரியாப் பதியதனுள்
வெயிலணிபன் மணிமுதலாம் விழுப்பொருளா வனவிளக்குந்
தயிலவினைத் தொழில்மரபில் சக்கரப்பா டித்தெருவு. ௫

அக்குலத்தின் செய்தவத்தா லவனிமிசை அவதரித்தார்
மிக்கபெருஞ் செல்வத்து மீக்கூர விளங்கினார்
தக்கபுகழ்க் கலியனா ரெனுநாமந் தலைநின்றார்
முக்கணிறை வர்க்குரிமைத் திருத்தொண்டின் னெறிமுயல்வார்.

எல்லையில்பல் கோடிதனத் திறைவராய் இப்படித்தாஞ்
செல்வநெறிப் பயனறிந்து திருவொற்றி யூரமர்ந்த
கொல்லைமழ விடையார்தங் கோயிலினுள் ளும்புறம்பும்
அல்லுநெடும் பகலுமிடுந் திருவிளக்கின் அணிவிளைத்தார். ௭

எண்ணில்திரு விளக்குநெடு நாளெல்லா மெரித்துவரப்
புண்ணியமெய்த் தொண்டர்செயல் புலப்படுப்பா ரருளாலே
உண்ணிறையும் பெருஞ்செல்வ முயர்த்தும்வினைச் செயலோவி
மண்ணிலவர் இருவினைபோல் மாண்டதுமாட் சிமைத்தாக.

திருமலிசெல் வத்துழனி தேய்ந்தழிந்த பின்னையுந்தம்
பெருமைநிலைத் திருப்பணியில் பேராத பேராளர்
வருமரபி லுள்ளோர்பா லெண்ணெய்மா றிக்கொணர்ந்து
தருமியல்பிற் கூலியினால் தமதுதிருப் பணிசெய்வார். ௯

வளமுடையார் பாலெண்ணெய் கொடுபோய்மா றிக்கூலி
கொளமுயலுஞ் செய்கையும்மற் றவர்கொடா மையின்மாறத்
தளருமன முடையவர்தாஞ் சக்கரஎந் திரம்புரியும்
களனில்வரும் பணிசெய்து பெறுங்கூலி காதலித்தார். ௧௦

செக்குநிறை எள்ளாட்டிப் பதமறிந்து திலதயிலம்
பக்கமெழ மிகவுழந்தும் பாண்டில்வரு மெருதுய்த்தும்
தக்கதொழில் பெறுங்கூலி தாங்கொண்டு தாழாமை
மிக்கதிரு விளக்கிட்டார் விழுத்தொண்டு விளக்கிட்டார். ௧௧

அப்பணியால் வரும்பேறு மவ்வினைஞர் பலருளராய்
எப்பரிசுங் கிடையாத வகைமுட்ட இடருழந்தே
ஒப்பில்மனை விற்றெரிக்கு முறுபொருளும் மாண்டதற்பின்
செப்பருஞ்சீர் மனையாரை விற்பதற்குத் தேடுவார். ௧௨

மனமகிழ்ந்து மனைவியார் தமைக்கொண்டு வளநகரில்
தனமளிப்பார் தமைஎங்குங் கிடையாமற் றளர்வெய்திச்
சினவிடையார் திருக்கோயில் திருவிளக்குப் பணிமுட்டக்
கனவினுமுன் பறியாதார் கையறவா லெய்தினார். ௧௩

பணிகொள்ளும் படம்பக்க நாயகர்தங் கோயிலினுள்
அணிகொள்ளுந் திருவிளக்குப் பணிமாறு மமயத்தில்
"மணிவண்ணச் சுடர்விளக்கு மாளில்யான் மாள்வ"னெனத்
துணிவுள்ளங் கொளநினைந்தவ் வினைமுடிக்கத் தொடங்குவார்.

திருவிளக்குத் திரிஇட்டங் ககல்பரப்பிச் செயல்நிரம்ப
ஒருவியஎண் ணெய்க்கீடா உடலுதிரங் கொடுநிறைக்கக்
கருவியினால் மிடறரிய அக்கையைக் கண்ணுதலார்
பெருகுதிருக் கருணையுடன் நேர்வந்து பிடித்தருளி. ௧௫

மற்றவர்தம் முன்னாக மழவிடைமே லெழுந்தருள
உற்றவூ றதுநீங்கி ஒளிவிளங்க உச்சியின்மேல்
பற்றியஅஞ் சலியினராய் நின்றவரைப் பரமர்தாம்
பொற்புடைய சிவபுரியில் பொலிந்திருக்க அருள்புரிந்தார். ௧௬

தேவர்பிரான் திருவிளக்குச் செயல்முட்ட மிடறரிந்து
மேவரிய வினைமுடித்தார் கழல்வணங்கி வியனுலகில்
யாவரொடு தானடியார் தமைஇகழ்ந்து பேசினரை
நாவரியுஞ் சத்தியார் திருத்தொண்டின் நலமுரைப்பாம். ௧௭

# ருஉ. சத்தி நாயனார் புராணம்

களமர் கட்ட கமலம் பொழிந்ததேன்
குளநி றைப்பது கோலொன் றிலெண்டிசை
அளவு மாணைச் சயத்தம்பம் நாட்டிய
வளவர் காவிரி நாட்டு வரிஞ்சையூர். க

வரிஞ்சை யூரினில் வாய்மைவே ளாண்குலம்
பெருஞ்சி றப்புப் பெறப்பிறப் பெய்தினார்
விரிஞ்சன் மால்முதல் விண்ணவ ரெண்ணவும்
அருஞ்சி லம்பணி சேவடிக் காட்செய்வார். உ

அத்த ராகிய அங்கண ரன்பரை
இத்த லத்தி லிகழ்ந்தியம் பும்உரை
வைத்த நாவை வலித்தரி சத்தியால்
சத்தி யாரெனும் நாமமுந் தாங்கினார். ங

தீங்கு சொற்ற திருவிலர் நாவினை
வாங்க வாங்குதண் டாயத்தி னால்வலித்
தாங்க யிற்கத்தி யாலரிந் தன்புடன்
ஓங்கு சீர்த்திருத் தொண்டி னுயர்ந்தனர். ச

அன்ன தாகிய ஆண்மைத் திருப்பணி
மன்னு பேருல கத்தில் வலியுடன்
பன்னெ டும்பெரு நாள்பரி வாற்செய்து
சென்னி ஆற்றினர் செந்நெறி ஆற்றினர். ரு

ஐய மின்றி அரிய திருப்பணி
மெய்யி னாற்செய்த வீரத் திருத்தொண்டர்
வைய முய்ய மணிமன்று ளாடுவார்
செய்ய பாதத் திருநிழல் சேர்ந்தனர். சு

நாய னார்தொண் டரைநலங் கூறலார்
சாய நாவரி சத்தியார் தாள்பணிந்
தாய மாதவத் தையடி கள்ளொனுந்
தூய காடவர் தந்திறஞ் சொல்லுவாம். எ

# ருங. ஐயடிகள் காடவர்கோன் நாயனார் புராணம்

வையநிகழ் பல்லவர்தங் குலமரபின் வழித்தோன்றி
வெய்யகலி யும்பகையும் மிகையொழியும் வகையடக்கிச்
செய்யசடை யவர்சைவத் திருநெறியா லரசளிப்பார்
ஐயடிகள் நீதியால் அடிப்படுத்துஞ் செங்கோலார். க

திருமலியும் புகழ்விளங்கச் சேணிலத்தி லெவ்வுயிரும்
பெருமையுட னினிதமரப் பிறபுலங்க ளடிப்படுத்துத்
தருமநெறி தழைத்தோங்கத் தாரணிமேற் சைவமுடன்
அருமறையின் துறைவிளங்க அரசளிக்கு மந்நாளில். உ

மன்னவரும் பணிசெய்ய வடநூல்தென் தமிழ்முதலாம்
பன்னுகலைப் பணிசெய்யப் பாரளிப்பார் "அரசாட்சி
இன்ன"லென இகழ்ந்ததனை எழிற்குமரன் மேலிழிச்சி
நன்மைநெறித் திருத்தொண்டு நயந்தளிப்பா ராயினார். ங

தொண்டுரிமை புரக்கின்றார் சூழ்வேலை யுலகின்கண்
அண்டர்பிரா னமர்ந்தருளு மாலயங்க ளானவெலாங்
கண்டிறைஞ்சித் திருத்தொண்டின் கடனேற்ற பணிசெய்தே
வண்டமிழின் மொழிவெண்பா ஓரொன்றா வழுத்துவார். ச

பெருத்தெழுகா தலில்வணங்கிப் பெரும்பற்றத் தண்புலியூர்த்
திருச்சிற்றம் பலத்தாடல் புரிந்தருளுஞ் செய்யசடை
நிருத்தனார் திருக்கூத்து நேர்ந்திறைஞ்சி நெடுந்தகையார்
விருப்பினுடன் செந்தமிழின் வெண்பாமென் மலர்புனைந்தார்.

அவ்வகையா லருள்பெற்றங் கமர்ந்துசில நாள்வைகி
இவ்வுலகில் தம்பெருமான் கோயில்களெல் லாமெய்திச்
செவ்வியஅன் பொடுபணிந்து திருப்பணிஎற் றனசெய்தே
எவ்வுலகும் புகழ்ந்தேத்த மின்தமிழ்வெண் பாமொழிந்தார்.

இந்நெறியா லரனடியா ரின்பமுற இசைந்தபணி
பன்னெடுநா ளாற்றியபின் பரமர்திரு வடிநிழற்கீழ்
மன்னுசிவ லோகத்து வழியன்பர் மருங்கணைந்தார்
கன்னிமதில் சூழ்காஞ்சிக் காடவரை யடிகளார். ௭

பையரவ மணியார மணிந்தார்க்குப் பாவணிந்த
ஐயடிகள் காடவனார் அடியிணைத்தா மரைவணங்கிக்
கையணிமான் மழுவுடையார் கழல்பணிசிந் தனையுடைய
செய்தவத்துக்கணம்புல்லர் திருத்தொண்டுவிரித்துரைப்பாம்.

உளத்திலொரு துளக்கமிலோ முலகுய்ய இருண்டதிருக்
களத்துமுது குன்றர்தரு கனகமாற் றினிவிட்டு
வளத்தின்மலிந் தேழுலகம் வணங்குபெருந் திருவாரூர்க்
குளத்திலெடுத் தார்வினையின் குழிவாய்நின் றெனையெடுத்தார்.

சருக்கம் எட்டுக்குத் திருவிருத்தம் ௮௨ ௪௦௫௧.



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## கூ. கறைக்கண்டன் சருக்கம்

# ருச. கணம்புல்ல நாயனார் புராணம்

திருக்கிளர்சீர் மாடங்கள் திருந்துபெருங் குடிநெருங்கிப்
பெருக்குவடவெள்ளாற்றுத் தென்கரைப்பால்பிறங்குபொழில்
வருக்கைநெடுஞ் சுளைபொழிதேன் மடுநிறைத்துவயல்விளைக்கும்
இருக்குவே ளூரென்ப திவ்வுலகில் விளங்குபதி. க

அப்பதியில் குடிமுதல்வர்க் கதிபராய் அளவிறந்த
எப்பொருளும் முடிவறியா எய்துபெருஞ் செல்வத்தார்
ஒப்பில்பெருங் குணத்தினு லுலகின்மேம் படநிகழ்ந்தார்
"மெய்ப்பொருளா வனஈசர் கழ"லென்னும் விருப்புடையார். உ

"தாவாத பெருஞ்செல்வந் தலைநின்ற பயனிது" என்
றோவாத ஒளிவிளக்குச் சிவன்கோயி லுள்ளெரித்து
நாவாரப் பரவுவார் நல்குரவு வந்தெய்தத்
தேவாதி தேவர்பிரான் திருத்தில்லை சென்றடைந்தார். ௩

தில்லைநகர் மணிமன்று ளாடுகின்ற சேவடிகள்
அல்கியஅன் புடனிறைஞ்சி அமர்கின்றார் புரமெரித்த
வில்லியார் திருப்புலீச் சரத்தின்கண் விளக்கெரிக்க
இல்லிடையுள் ளனமாறி எரித்துவரு மந்நாளில். ச

ஆயசெயல் மாண்டதற்பி னயலவர்பா லிரப்பஞ்சிக்
காயமுயற் சியிலரிந்த கணம்புல்லுக் கொடுவந்து
மேயவிலைக் குக்கொடுத்து விலைப்பொருளால் நெய்மாறித்
தூயதிரு விளக்கெரித்தார் துளக்கறுமெய்த் தொண்டனார். ரு

இவ்வகையால் திருந்துவிளக் கெரித்துவர அங்கொருநாள்
மெய்வருந்தி அரிந்தெடுத்துக் கொடுவந்து விற்கும்புல்

எவ்விடத்தும் விலைபோகா தொழியவுமிப் பணியொழியார்
அவ்வரிபுல் வினைமாட்டி அணிவிளக்கா யிடஎரிப்பார். ௬

முன்புதிரு விளக்கெரிக்கும் முறையாமங் குறையாமல்
மென்புல்லும் விளக்கெரிக்கப் போதாமை மெய்யான
அன்புபுரி வாரடுத்த விளக்குத்தந் திருமுடியை
என்புருக மடுத்தெரித்தா ரிருவினையின் தொடக்கெரித்தார்.

தங்கள்பிரான் திருவுள்ளஞ் செய்துதலைத் திருவிளக்குப்
பொங்கியஅன் புடனெரித்த பொருவில்திருத் தொண்டருக்கு
மங்கலமாம் பெருங்கருணை வைத்தருளச் சிவலோகத்
தெங்கள்பிரான் கணம்புல்ல ரினிதிறைஞ்சி அமர்ந்திருந்தார்.

மூரியார் கலியுலகின் முடியிட்ட திருவிளக்குப்
பேரியா றணிந்தாருக் கெரித்தார்தங் கழல்பேணி
வேரியார் மலர்ச்சோலை விளங்குதிருக் கடவூரில்
காரியார் தாஞ்செய்த திருத்தொண்டு கட்டுரைப்பாம். ௯

# ௫௫. காரி நாயனார் புராணம்

மறையாளர் திருக்கடவூர் வந்துதித்து வண்டமிழின்
துறையான பயன்தெரிந்து சொல்விளங்கிப்பொருள்மறையக்
குறையாத தமிழ்க்கோவை தம்பெயரால் குலவும்வகை
முறையாலே தொகுத்தமைத்து மூவேந்தர் பால்பயில்வார். ௧

அங்கவர்தாம் மகிழும்வகை அடுத்தஉரை நயமாக்கிக்
கொங்கலர்தார் மன்னவர்பால் பெற்றநிதிக் குவைகொண்டு
வெங்கணரா வொடுகிடந்து விளங்குமிளம் பிறைச்சென்னிச்
சங்கரனு ரினிதமருந் தானங்கள் பலசமைத்தார். ௨

யாவர்க்கும் மனமுவக்கு மின்பமொழிப் பயனியம்பித்
தேவர்க்கு முதற்றேவர் சீரடியா ரெல்லார்க்கும்
மேவுற்ற இருநிதியம் மிகஅளித்து விடையவர்தங்
காவுற்ற திருக்கயிலை மறவாத கருத்தினராய். ௩

ஏய்ந்தகடல் சூழுலகி லெங்குந்தம் இசைநிறுத்தி
ஆய்ந்தவுணர் விடையுறு அன்பினராய் அணிகங்கை
தோய்ந்தநெடுஞ் சடையார்தம் அருள்பெற்ற தொடர்பினால்
வாய்ந்தமனம் போலுடம்பும் வடகயிலை மலைசேர்ந்தார். ச

வேரியார் மலர்க்கொன்றை வேணியா ரடிபேணுங்
காரியார் கழல்வணங்கி அவரளித்த கருணையினால்
வாரியார் மதயானை வழுதியர்தம் மதிமரபில்
சீரியார் நெடுமாறர் திருத்தொண்டு செப்புவாம். ரு

# ருசா. நின்றசீர் நெடுமாற நாயனார் புராணம்

தடுமாறும் நெறியதனைத் தவமென்று தம்முடலை
அடுமாறு செய்தொழுகு மமண்வலையி லகப்பட்டு
விடுமாறு தமிழ்விரகர் வினைமாறுங் கழலடைந்த
நெடுமாற னார்பெருமை உலகேழும் நிகழ்ந்ததால். க

அந்நாளி லாளுடைய பிள்ளையா ரருளாலே
தென்னாடு சிவம்பெருகச் செங்கோலுய்த் தறமளித்துச்
சொன்னுமை நெறிபோற்றிச் சுரர்நகர்க்கோன் தனைக்கொண்ட
பொன்னாரம் அணிமார்பிற் புரவலனார் பொலிகின்றார். உ

ஆயஅர சளிப்பார்பா லமர்வேண்டி வந்தேற்ற
சேயபுலத் தெவ்வரெதிர் நெல்வேலிச் செருக்களத்துப்
பாயபடைக் கடல்முடுகும் பரிமாவின் பெருவெள்ளம்
காயுமதக் களிற்றின்நிரை பரப்பிஅமர் கடக்கின்றார். ங

எடுத்துடன்ற முனைஞாட்பின் இருபடையிற் பொருபடைஞர்
படுத்தநெடுங் கரித்துணியும் பாய்மாவி னறுகுறையும்
அடுத்தடர்செய் வயவர்கருந் தலைமலையு மலைசெந்நீர்
மடுத்தகடல் மீளவுந்தாம் வடிவேல்வாங் கிடப்பெருக. ச

வயப்பரியின் களிப்பொலியும் மறவர்படைக் கலவொலியும்
கயப்பொருப்பின் முழக்கொலியும் கலந்தெழுபல் லியவொலியும்
வியக்குமுகக் கடைநாளின் மேகமுழக் கெனமீளச்
சயத்தொடர்வல் லியுமின்று தாம்விடுக்கும் படிதயங்க. ௫

தீயுமிழும் படைவழங்குஞ் செருக்களத்து முருக்குமுடல்
தோயுநெடுங் குருதிமடுக் குளித்துநிணந் துய்த்தாடிப்
போயபரு வம்பணிகொள் பூதங்க ளேயன்றிப்
பேயுமரும் பணிசெய்ய உணவளித்த தெனப்பிறங்க. ௬

இனையகடுஞ் சமர்விளைய இகலுழந்த பறந்தலையில்
பனைநெடுங்கை மதயானைப் பஞ்சவனார் படைக்குடைந்து
முனையழிந்த வடபுலத்து முதல்மன்னர் படைசரியப்
புனையுநறுந் தொடைவாகை பூழியர்வேம் புடன்புனைந்து. ௭

வளவர்பிரான் திருமகளார் மங்கையருக் கரசியார்
களபமணி முலைதிளைக்குந் தடமார்பிற் கவுரியனார்
இளவளவெண் பிறையணிந்தார்க் கேற்றதிருத் தொண்டெல்லாம்
அளவில்புகழ் பெறவிளக்கி அருள்பெருக அரசளித்தார். ௮

திரைசெய்கட லுலகின்கண் திருநீற்றின் நெறிவிளங்க
உரைசெய்பெரும் புகழ்விளக்கி ஓங்குநெடு மாறனார்
அரசுரிமை நெடுங்கால மளித்திறைவ ரருளாலே
பரசுபெருஞ் சிவலோகத் தின்புற்றுப் பணிந்திருந்தார். ௯

பொன்மதில்சூழ் புகலிகா வலரடிக்கீழ்ப் புனிதராந்
தென்மதுரை மாறனார் செங்கமலக் கழல்வணங்கிப்
பன்மணிகள் திரையோதம் பரப்புநெடுங் கடற்படப்பைத்
தொன்மயிலை வாயிலார் திருத்தொண்டின் நிலைதொழுவாம்.



# ருஎ. வாயிலார் நாயனார் புராணம்

சொல்வி ளங்குசீர்த் தொண்டைநன் னாட்டிடை
மல்லல்நீடிய வாய்மை வளம்பதி
பல்பெ ருங்குடி நீடு பரம்பரைச்
செல்வம் மல்கு திருமயி லாபுரி. க

நீடு வேலைதன் பால்நிதி வைத்திடத்
தேடு மப்பெருஞ் சேமவைப் பாமென
ஆடு பூங்கொடி மாளிகை யப்பதி
மாடு தள்ளு மரக்கலச் செப்பினால். உ

கலஞ்சொ ரிந்த கரிக்கருங் கன்றுமுந்
தலம்பு முந்நீர் படிந்தணை மேகமும்
நலங்கொள் மேதிநன் னாகுந் தெரிக்கொணு
சிலம்பு தெண்டிரைக் கானலின் சேணெலாம். ங

தவள மாளிகைச் சாலை மருங்கிறைத்
துவள்ப தாகை நுழைந்தணை தூமதி
பவள வாய்மட வார்முகம் பார்த்தஞ்சி
உவள கஞ்சேர்ந் தொதுங்குவ தொக்குமால். ச

வீதி எங்கும் விழாஅணிக் காளையர்
தூதி யங்குஞ் சுரும்பணி கோதையர்
ஓதி எங்கு மொழியா அணிநிதி
பூதி எங்கும் புனைமணி மாடங்கள். ரு

மன்னு சீர்மயி லைத்திரு மாநகர்த்
தொன்மை நீடிய சூத்திரத் தொல்குல
நன்மை சான்ற நலம்பெறத் தோன்றினார்
தன்மை வாயிலா ரென்னுந் தபோதனர். சு

வாயி லாரென நீடிய மாக்குடித்
தூய மாமர பின்முதல் தோன்றியே

நாய னார்திருத் தொண்டின் நயப்புறு
மேய காதல் விருப்பின் விளங்குவார். ௯

மறவாமை யாலமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
உறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
இறவாத ஆனந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
அறவாணர்க் கன்பென்னு மமுதமைத்தர்ச் சனைசெய்வார். ௮

அகமலர்ந்த அர்ச்சனையி லண்ணலார் தமைநாளும்
நிகழவரு மன்பினால் நிறைவழிபா டொழியாமே
திகழநெடு நாட்செய்து சிவபெருமா னடிநிழற்கீழ்ப்
புகலமைத்துத் தொழுதிருந்தார் புண்ணியமெய்த் தொண்டனார்.

நீராருஞ் சடையாரை நீடுமன ஆலயத்துள்
ஆராத அன்பினா லர்ச்சனைசெய் தடியவர்பால்
பேராத நெறிபெற்ற பெருந்தகையார் தமைப்போற்றிச்
சீராருந் திருநீடூர் முனையடுவார் திறமுரைப்பாம். ௰



# ருஅ. முனையடுவார் நாயனார் புராணம்



மாறு கடிந்து மண்காத்த வளவர் பொன்னித் திருநாட்டு
நாறு விரைப்பூஞ் சோலைகளின் நனைவாய் திறந்து பொழிசெழுந்தேன்
ஆறு பெருகி வெள்ளமிடும் அள்ளல் வயலின் மள்ளருழுஞ்
சேறு நறுவா சங்கமழுஞ் செல்வ நீடூர் திருநீடூர். க

விளங்கும் வண்மை மிக்குள்ள வேளாண் டலைமைக் குடிமுதல்வர், களங்கொள் மிடற்றுக் கண்ணுதலார் கழலிற் செறிந்த காதல்மிகும், உளங்கொள் திருத்தொண் டுரிமையினி லுள்ளார் நள்ளார் முனைஎறிந்த, வளங்கொ டிறைவ ரடியார்க்கு மாறு தளிக்கும் வாய்மையார். உ

மாற்றார்க் கமரில் அழிந்துள்ளோர் வந்து தம்பால்
மாநிதியம், ஆற்றும் பரிசு பேசினால் அதனை நடுவு நிலை
வைத்துக், கூற்று மொதுங்கு மாள்வினையால் கூலி யேற்
றுச் சென்றெறிந்து, போற்றும் வென்றி கொண்டிசைந்த
பொன்னுங் கொண்டு மன்னுவார். ௫

இன்ன வகையால் பெற்றநிதி யெல்லா மீச னடியார்கள்,
சொன்ன சொன்ன படிநிரம்பக் கொடுத்துத் தூய போனக
மும், கன்னல் நறுநெய் கறிதயிர்பால் கனியுள் ளுறுத்த
கலந்தளித்து, மன்னு மன்பின் நெறிபிறழா வழித்தொண்
டாற்றி வைகினார். ௬

மற்றிந் நிலைமை பன்னெடுநாள் வைய நிகழச் செய்துவழி
உற்ற அன்பின் செந்நெறியா லுமையாள் கணவன் திருவருளால்
பெற்ற சிவலோ கத்தமர்ந்து பிரியா உரிமை மருவினார்
முற்ற உழந்த முனையடுவா ரென்னுநாமம் முன்னுடையார்.

யாவ ரெனினு மிகலெறிந்தே ஈசனடியார் தமக்கின்பம்,
மேவ அளிக்கும் முனையடுவார் விரைப்பூங் கமலக் கழல்
வணங்கித், தேவர் பெருமான் சைவநெறி விளங்கச் செங்
கோல் முறைபுரியுங், காவல் பூண்ட கழற்சிங்கர் தொண்டின்
நிலைமை கட்டுரைப்பாம். ௬

செறிவுண் டென்று திருத்தொண்டிற் சிந்தை செல்லும்
பயனுக்கும், குறியுண் டொன்று கிலுங்குறையொன் றில்
லோம் நிறையுங் கருணையினால், வெறியுண் சோலைத் திரு
முருகன் பூண்டி வேடர் வழிபறிக்கப், பறியுண் டவரெம்
பழவினைவேர் பறிப்பா ரென்னும் பற்றாலே. ௭

சருக்கம் ஒன்பதுக்குத் திருவிருத்தம் ஆ ௪௫00



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## க௦. கடல்சூழ்ந்த சருக்கம்

# ௫௩. கழற்சிங்க நாயனார் புராணம்



படிமிசை நிகழ்ந்த தொல்லைப் பல்லவர் குலத்து வந்தார்
கடிமதில் மூன்றுஞ் செற்ற கங்கைவார் சடையார் செய்ய
அடிமல ரன்றி வேறொன் றறிவினிற் குறியா நீர்மைக்
கொடிநெடுந் தானை மன்னர் கோக்கழற் சிங்க ரென்பார். ௧

காடவர் குரிசி லாராங் கழற்பெருஞ் சிங்க னார்தாம்
ஆடக மேரு வில்லா ரருளினா லமரிற் சென்று
கூடலர் முனைகள் சாய வடபுலங் கவர்ந்து கொண்டு
நாடற நெறியில் வைக நன்னெறி வளர்க்கு நாளில். ௨

குவலயத் தரனார் மேவுங் கோயில்கள் பலவுஞ் சென்று
தவலரு மன்பிற் றாழ்ந்து தக்கமெய்த் தொண்டு செய்வார்
சிவபுரி என்ன மன்னுந் தென்திரு வாரூ ரெய்திப்
பவமறுத் தாட்கொள் வார்தங் கோயிலுட் பணியப் புக்கார்.

அரசிய லாயத் தோடு மங்கணர் கோயி லுள்ளால்
முரசுடைத் தானை மன்னர் முதல்வரை வணங்கும் போதில்
விரைசெறி மலர்மென் கூந்த லுரிமைமெல் லியலார் தம்முள்
உரைசிறந் துயர்ந்த பட்டத் தொருதனித் தேவி மேவி. ௪

கோயிலை வலங்கொண் டங்கண் குலவிய பெருமை எல்லாஞ்
சாயல்மா மயிலே போல்வாள் தனித்தனி கண்டு வந்து
தூயமென் பள்ளித் தாமந் தொடுக்குமண் டபத்தின் பாங்கர்
மேயதோர்புதுப்பூஅங்குவிழுந்ததொன்றெடுத்துமோந்தாள்.

புதுமலர் மோந்த போதிற் செருத்துணைப் புனிதத்தொண்டர்
இதுமலர் திருமுற் றத்து ளெடுத்துமோந் தனளாமென்று

கதுமென ஓடிச் சென்று கருவிகைக் கொண்டு பற்றி
மதுமலர்த் திருவொப் பாள்தன் மூக்கினைப் பிடித்து வார்ந்தார்.

வார்ந்திழி குருதி சோர மலர்க்கருங் குழலுஞ் சோரச்
சோர்ந்துவீழ்ந் தரற்றுந் தோகைமயிலெனத் துளங்கிமண்ணில்
சேர்ந்தயர்ந் துரிமைத் தேவி புலம்பிடச் செம்பொற் புற்றுள்
ஆர்ந்தபே ரொளியைக் கும்பிட் டரசரு மணைய வந்தார். எ

வந்தணை வுற்ற மன்னர் மலர்ந்தகற் பகத்தின் வாசப்
பைந்தளிர்ப் பூங்கோம் பொன்று பார்மிசை வீழ்ந்த தென்ன
நொந்தழிந் தரற்று வாளை நோக்கி"இவ் வண்டத் துள்ளோர்
இந்தவெவ் வினைஅஞ் சாதே யார்செய்தா? ரென்னுமெல்லை.

அந்நிலை அணைய வந்து செருத்துணை யாரா மன்பர்
முன்னுறு நிலைமை அங்குப் புகுந்தது மொழிந்த போது
மன்னரு மவரை நோக்கி "மற்றிதற் குற்ற தண்டம்
தன்னையவ் வடைவே யன்றோ தடிந்திடத் தகுவ" தென்று.

கட்டிய உடைவாள் தன்னை உருவி"அக் கமழ்வா சப்பூத்
தொட்டுமுன் னெடுத்த கையாம்முற்படத் துணிப்ப"தென்று
பட்டமு மணிந்து காதல் பயில்பெருந் தேவி யான
மட்டவிழ்குழலாள் செங்கை வளையொடுந் துணித்தா ரன்றே.

ஒருதனித் தேவி செங்கை உடைவாளாற் றுணித்த போது
பெருகிய தொண்ட ரார்ப்பின் பிறங்கொலி புவிமேற்பொங்க
இருவிசும் படைய ஓங்கு மிமையவ ரார்ப்பும் விம்மி
மருவிய தெய்வ வாச மலர்மழை பொழிந்த தன்றே. கக

அரியஅத் திருத்தொண் டாற்று மரசனு ரளவில் காலம்
மருவிய உரிமை தாங்கி மாலயற் கரியார் மன்னும்
திருவருட் சிறப்பி னாலே செய்யசே வடியின் நீழற்
பெருகிய உரிமை யாகும் பேரரு ளெய்தி னாரே. கஉ

வையக நிகழக் காதல் மாதேவி தனது செய்ய
கையினைத் தடிந்த சிங்கர் கழலினை தொழுது போற்றி
எய்திய பெருமை அன்ப ரிடங்கழி யாரென் றேத்தும்
மெய்யரு ளுடைய தொண்டர் செய்வினை விளம்ப லுற்றும்.



# ௪௦. இடங்கழி நாயனார் புராணம்

எழுந்திரைமா கடலாடை இருநிலமா மகள்மார்பில்
அழுந்துபட எழுதுமிலைத் தொழில்தொய்யி லணியின்வாம்
செழுந்தளிரின் புடைமறைந்த பெடைகளிப்பத் தேமாவின்
கொழுந்துணர்கோ திக்கொண்டு குயில்நாடு கோனாடு. க

முருகுறுசெங் கமலமது மலர்துதைந்த மொய்யளிகள்
பருகுறுதெண் டிரைவாவிப் பயில்பெடையோ டிரையருந்தி
வருகுறுதண் டுளிவாடை மறையமா தவிச்சூழல்
குருகுறங்குங் கோனாட்டுக் கொடிநகரங் கொடும்பாளூர். உ

அந்நகரத் தினிலிருக்கும் வேளிர்குலத் தரசளித்து
மன்னியபொன் னம்பலத்து மணிமுகட்டில் பாக்கொங்கின்
பன்னுதுலைப் பசும்பொன்னாற் பயில்பிழம்பா மிசையணிந்த
பொன்னெடுந்தோ ளாதித்தன் புகழ்மரபிற் குடிமுதலோர். ங

இடங்கழியா ரெனவுலகி லேறுபெரு நாமத்தார்
அடங்கலர்முப் புரமெரித்தா ரடித்தொண்டின் நெறியன்றி
முடங்குநெறி கனவினிலு முன்னுதா ரெந்நாளுந்
தொடர்ந்தபெருங் காதலினால் தொண்டர்வேண் டியசெய்வார். ச

சைவநெறி வைதிகத்தின் தருமநெறி யொடுந்தழைப்ப
மைவளருந் திருமிடற்றார் மன்னியகோ யில்களெங்கும்
மெய்வழிபாட் டர்ச்சனைகள் விதிவழிமேன் மேல்விளங்க
மொய்வளர்வண் புகழ்பெருக முறைபுரியு மந்நாளில். ரு

சங்கரன்றன் னடியாருக் கமுதளிக்குந் தவமுடையார்
அங்கொருவ ரடியவருக் கமுதொருநா ளாக்கவுடன்
எங்குமொரு செயல்காணா தெய்தியசெய் தொழில்முட்டப்
பொங்கியெழும் பெருவிருப்பால் புரியும்வினை தெரியாது. சு

அரசரவர் பண்டாரத் தந்நாட்டின் நெற்கூட்டின்
நிறைசெறிந்த புரிபலவா நிலைக்கொட்டா காரத்தில்

புரைசெறிநள் ளிருளின்கண் புக்குமுகந் தெடுப்பவரை
முரசெறிகா வலர்கண்டு பிடித்தரசன் முன்கொணர்ந்தார். ௭

மெய்த்தவரைக் கண்டிருக்கும் வேல்மன்னர் வினவுதலும்
"அத்தனடி யாரையா னமுதுசெய்விப் பதுமுட்ட
இத்தகைமை செய்தே"னென் றியம்புதலும் மிகஇரங்கிப்
பத்தரைவிட் "டிவரன்றோ பண்டார மெனக்"கென்பார். ௮

நிறையழிந்த உள்ளத்தால் "நெற்பண்டா ரமுமன்றிக்
குறைவில்நிதிப் பண்டார மானஎலாங் கொள்ளைமுகந்
திறைவனடி யார்கவர்ந்து கொள்க" என எம்மருங்கும்
பறையறையப் பண்ணுவித்தார் படைத்தநிதிப் பயன்கொள்வார்.

எண்ணில்பெரும் பண்டாரம் ஈசனடி யார்கொள்ள
உண்ணிறைந்த அன்பினா லுறகொள்ளை மிகஊட்டித்
தண்ணளியால் நெடுங்காலந் திருநீற்றின் நெறிதழைப்ப
மண்ணிலருள் புரிந்திறைவர் மலரடியின் நிழல்சேர்ந்தார். ௧௦

மைதழையும் மணிமிடற்றார் வழித்தொண்டின் வழிபாட்டில்
எய்துபெருஞ் சிறப்புடைய இடங்கழியார் கழல்வணங்கி
மெய்தருவார் நெறியன்றி வேறொன்றும் மேலறியாச்
செய்தவராஞ்செருத்துணையார் திருத்தொண்டின்செயல்மொழிவாம்.



# ௬௧. செருத்துணை நாயனார் புராணம்



உள்ளும் புறம்புங் குலமரபின் ஒழுக்கம் வழுவா ஒருமைநெறி, கொள்ளு மியல்பிற் குடிமுதலோர் மலிந்த செல்வக் குலப்பதியாந், தெள்ளுந் திரைகள் மதகுதொறுஞ் சேலுங் கயலுஞ் செழுமணியுந், தள்ளும் பொன்னி நீர்நாட்டு மருக நாட்டுத் தஞ்சாவூர். ௧

சீரின் விளங்கு மப்பதியில் திருந்து வேளாண் குடிமுதல்வர்
நீரின் மலிந்த செய்யசடை நீற்றர் கூற்றின் நெஞ்சிடித்த

வேரி மலர்ந்த பூங்கழல்சூழ் மெய்யன் புடைய சைவனெனப்
பாரில்நிகழ்ந்த செருத்துணையார் பாவுந்தொண்டின் நெறிநின்றார்.

ஆன அன்பர் திருவாரூ ராழித் தேர்வித் தகர்கோயில்
ஞான முனிவ ரிமையவர்கள் நெருங்கு நலஞ்சேர் முன்றிலினுள்
மான நிலவு திருப்பணிகள் செய்து காலங் களின்வணங்கிக்
கூன விளவெண் பிறைமுடியார் தொண்டு பொலியக் குலவுநாள்.

உலகு நிகழ்ந்த பல்லவர்கோச் சிங்க ருரிமைப் பெருந்தேவி
நிலவு திருப்பூ மண்டபத்து மருங்கு நீங்கிக் கிடந்ததொரு
மலரை எடுத்து மோந்ததற்கு வந்து பொறாமை வழித்தொண்டர்
இலகு சுடர்வாய்க் கருவிஎடுத் தெழுந்த வேகத் தாலெய்தி. ச

கடிது முற்றி மற்றவள்தன் கருமென் கூந்தல் பிடித்
தீர்த்துப், படியில் வீழ்த்தி மணிமூக்கைப் பற்றிப் "பரமர்
செய்யசடை, முடியி லேறுந் திருப்பூமண் டபத்து மலர்
மோந் திடும்மூக்கைத், தடிவ" னென்று கருவியினால் அரிந்
தார் தலைமைத் தனித்தொண்டர். ரு

அடுத்த திருத்தொண் டுலகறியச் செய்த அடலே றனையவர்தாம்
தொடுத்த தாம மலர்இதழி முடியா ரடிமைத் தொண்டுகடல்
உடுத்த உலகில் நிகழச்செய் துய்யச் செய்த பொன்மன்றுள்
எடுத்த பாத நிழலடைந்தே இறவா இன்ப மெய்தினார். கூ

செங்கண்விடையார் திருமுன்றில்விழுந்த திருப்பள்ளித்தாமம்
அங்க ணெடுத்து மோந்தஅதற் கரச ருரிமைப் பெருந்தேவி
துங்க மணிமூக் கரிந்தசெருத் துணையார் தூய கழலிறைஞ்சி
எங்கு நிகழ்ந்த புகழ்த்துணையா ருரிமை அடிமை எடுத்துரைப்பாம்.

# ௬௨. புகழ்த்துணை நாயனார் புராணம்

செருவிலிபுத் தூர்மன்னுஞ் சிவமறையோர் திருக்குலத்தார்
அருவரைவில் லாளிதனக் ககத்தடிமை யாமதனுக்
கொருவர்தமை நிகரில்லா ருலகத்துப் பரந்தோங்கிப்
பொருவரிய புகழ்நீடு புகழ்த்துணையா ரெனும்பெயரார். ௧

தங்கோனைத் தவத்தாலே தத்துவத்தின் வழிபடுநாள்
பொங்கோத ஞாலத்து வற்கடமாய்ப் பசிபுரிந்தும்
"எங்கோமான் றனைவிடுவே னல்லே" னென் றிராப்பகலுங்
கொங்கார்பன் மலர்கொண்டு குளிர்புனல்கொண் டருச்சிப்பார்.

மாலயனுக் கரியானை மஞ்சனமாட் டும்பொழுது
சாலவுறு பசிப்பிணியால் வருந்திநிலை தளர்வெய்திக்
கோலநிறை புனல்தாங்கு குடந்தாங்க மாட்டாமை
ஆலமணி கண்டத்தார் முடிமீது வீழ்த்தயர்வார். ௩

சங்கரன்றன் னருளாலோர் துயில்வந்து தமையடைய
அங்கணனுங் கனவின்க ணருள்புரிவா "னருந்துணவு
மங்கியநாள் கழியளவும் வைப்பதுநித் தமுமொருகா
சிங்குனக்கு நாமெ"ன்ன இடர்நீங்கி எழுந்திருந்தார். ௪

பெற்றமுகந் தேறுவார் பீடத்தின் கீழொருகா
சற்றமடங் கிடஅளிப்ப அன்பரும்மற் றதுகைக்கொண்
டுற்றபெரும் பசியதனா லுணங்குமுடம் புடனுவந்து
முற்றுணர்வு தலைநிரம்ப முகமலர்ந்து களிகூர்ந்தார். ௫

அந்நாள்போ லெந்நாளு மளித்தகா சதுகொண்டே
இன்னாத பசிப்பிணிவந் திறுத்தநாள் நீங்கியபின்
மின்னார்செஞ் சடையார்க்கு மெய்யடிமைத் தொழில்செய்து
பொன்னாட்டி னமரர்தொழப் புனிதரடி நிழல்சேர்ந்தார். ௬

பந்தணையு மெல்விரலாள் பாகத்தார் திருப்பாதம்
வந்தணையு மனத்துணையார் புகழ்த்துணையார் கழல்வாழ்த்திச்
சந்தணியு மணிப்புயத்துத் தனிவீர ராந்தலைவர்
கொந்தணையும் மலரலங்கல் கோட்புலியார் செயலுரைப்பாம்.



# ௬௩. கோட்புலி நாயனார் புராணம்

நலம்பெருகுஞ் சோணாட்டு நாட்டியத்தான் குடிவேளாண்
குலம்பெருக வந்துதித்தார் கோட்புலியா ரெனும்பெயரார்
தலம்பெருகும் புகழ்வளவர் தந்திரியா ராய்வேற்றுப்
புலம்பெருகத் துயர்விளைப்பப் போர்விளைத்துப்புகழ்விளைப்பார்.

மன்னவன்பால் பெறுஞ்சிறப்பின் வளமெல்லாம்மதியணியும்
பின்னுகர்தங் கோயில்தொறுந் திருவமுதின் படிபெருகச்
செந்நெல்மலைக் குவடாகச் செய்துவருந் திருப்பணியே
பன்னெடுநாள் செய்தொழுகும் பாங்குபுரிந் தோங்குநாள். ௨.

வேந்தனே வலிற்பகைஞர் வெம்முனைமேற் செல்கின்றார்
பாந்தள்பூ ணணிந்தார் தமக்கமுது படியாக
ஏந்தலார் தாமெய்து மளவும்வெண் டுஞ்செந்நெல்
வாய்ந்தகூ டவைகட்டி வழிக்கொள்வார் மொழிகின்றார். ௩

தந்தமர்க ளாயினார் தமக்கெல்லாந் தனித்தனியே
"எந்தையார்க் கமுதுபடிக் கேற்றியநெல் விவையழிக்கச்
சிந்தைஆற் றுநினைவார் திருவிரையாக் கலி"என்று
வந்தணையா லுரைத்தகன்றார் மன்னவன்மாற் றார்முனைமேல்.

மற்றவர்தாம் போயினபின் சிலநாளில் வற்காலம்
உற்றலுமச் சுற்றத்தா ருணவின்றி "இறப்பதனில்
பெற்றமுயர்த் தவரமுது படிகொண்டா கிலும்பிழைத்துக்
குற்றமறப் பின்கொடுப்போ" மெனக்கூடு குலைத்தழித்தார்.

மன்னவன்றன் தெம்முனையில் வினைவாய்த்து மற்றவன்பால்
நன்னிதியின் குவைபெற்ற நாட்டியத்தான் குடித்தலைவர்

அந்நகரில் தமர்செய்த பிழையறிந்த தறியாமே
துன்னினார் "சுற்றமெலாந் துணிப்ப" னெனுந் துணிவினராய்.

எதிர்கொண்ட தமர்க்கெல்லா மினியமொழி பலமொழிந்து
மதிதங்கு சுடர்மணிமா ளிகையின்கண் வந்தணைந்து
"பதிகொண்ட சுற்றத்தார்க் கெல்லாம்பைந் துகில்நிதியம்
அதிகந்தந் தளிப்பதனுக் கழைமின்க" ளென்றுரைத்து. எ

எல்லாரும் புகுந்ததற்பி னிருநிதிய மளிப்பார்போல்
"நல்லார்தம் பேரோன்முன் கடைகாக்க நாதன்றன்
வல்லாணை மறுத்தமுது படிஅழித்த மறக்கிளையைக்
கொல்லாதே விடுவேனோ" எனக்கனன்று கொலைபுரிவார். அ

தந்தையார் தாயார்மற் றுடன்பிறந்தார் தாரங்கள்
பந்தமார் சுற்றத்தார் பதியடியார் மதியணியும்
எந்தையார் திருப்படிமற் றுண்ணஇசைந் தார்களையும்
சிந்தவாள் கொடுதுணித்தார் தீயவினைப் பவந்துணிப்பார். கூ

பின்னங்குப் பிழைத்தொரு பிள்ளையைத்தம் பெயரோ'னவ்
அன்னந்துய்த் திலதுகுடிக் கொருபுதல்வன் அருளு'மென
"இங்கெல்லுண் டாள்முலைப்பா லுண்ட"தென எடுத்தெறிந்து
மின்னல்ல வடிவாளா லிருதுணியாய் விழவேற்றார். கo

அந்நிலையே சிவபெருமான் அன்பரெதிர் வெளியேநின்
"றுன்னுடைய கைவாளா லுறுபாச மறுத்தகிளை
பொன்னுலகின் மேலுலகம் புக்கணையப் புகழோய்நீ
இந்நிலைநம் முடனணை"கென் றேவிஎழுந் தருளினார். கக

அத்தனாய் அன்னையாய் ஆருயிராய் அமிர்தாகி
முத்தனும் முதல்வன்தா ளடைந்துகிளை முதல்தடிந்த
கொத்தலர்தார்க் கோட்புலியா ரடிவணங்கிக் கூட்டத்தில்
பத்தராய்ப் பணிவார்தம் பரிசினையாம் பகருவாம். கஉ

மேவரிய பெருந்தவம்யான் முன்புவிளைத் தனஎன்றோ
யாவதுமோர் பொருளல்லா என்மனத்து மன்றியே
நாவலர்கா வலர்பெருகு நதிகிழிய வழிநடந்த
சேவடிப்போ தெப்போதுஞ் சென்னியினும் மலர்ந்தனவால்.

சருக்கம் பத்துக்குத் திருவிருத்தம் ஆஉ ௪கடுக.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# கக. பத்தராய்ப் பணிவார் சருக்கம்

# சூ௪. பத்தராய்ப் பணிவார் புராணம்



ஈசனுக்கே அன்பானார் யாவரையுந் தாங்கண்டால்
கூசிமிகக் குதுகுதுத்துக் கொண்டாடி மனமகிழ்வுற்
றாசையினா லாவின்பின் கன்றணைந்தாற் போலணைந்து
பேசுவன பணிந்தமொழி இனியனவே பேசுவார். க

தாவரிய அன்பினாற் சம்புவினை எவ்விடத்தும்
யாவர்களு மர்ச்சிக்கும் படிகண்டா லினிதுவந்து
பாவனையால் நோக்கினால் பலர்காணப் பயன்பெறுவார்
மேவரிய அன்பினால் மேலவர்க்கும் மேலானார். உ

அங்கணனை அடியாரை ஆராத காதலினால்
பொங்கிவரு முவகையுடன் தாம்விரும்பிப் பூசிப்பார்
பங்கயமா மலர்மேலான் பாம்பணையா னென்றிவர்கள்
தங்களுக்குஞ் சார்வரிய சரண்சாருந் தவமுடையார். ௩

யாதானு மிவ்வுடம்பாற் செய்வினைக ளேறுயர்த்தார்
பாதார விந்தத்தின் பாலாக எனும்பரிவால்
காதார்வெண் குழையவர்க்காம் பணிசெய்வார் கருக்குழியில்
போதார்க ளவர்புகழ்க்குப் புவனமெலாம் போதாவால். ௪

சங்கரனைச் சார்ந்தகதை தான்கேட்குந் தன்மையராய்
அங்கணனை மிகவிரும்பி அயலறியா அன்பினால்
கங்கைநதி மதிஇதழி காதலிக்குந் திருமுடியார்
செங்கமல மலர்ப்பாதஞ் சேர்வதனுக் குரியார்கள். ௫

ஈசனையே பணிந்துருகி இன்பமிகக் களிப்பெய்திப்
பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை

மாசிலா நீறழித்தங் கருவிதர மயிர்சிலிர்ப்பக்
கூசியே உடல்கம்பித் திடுவார்மெய்க் குணமிக்கார். கூ

நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலும் நடந்தாலும்
மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலுங்
மன்றாடும் மலர்ப்பாத மொருகாலும் மறவாமை
குன்றாத உணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார். எ

சங்கரனுக் காளான தவங்காட்டித் தாமதனால்
பங்கமறப் பயன்துய்யார் படிவிளக்கும் பெருமையினார்
அங்கணனைத் திருவாரூ ராள்வானை அடிவணங்கிப்
பொங்கிஎழுஞ் சித்தமுடன் பத்தராய்ப் போற்றுவார். அ



# கூரு. பரமனையே பாடுவார் புராணம்



புரமூன்றுஞ் செற்றானைப் பூணாக மணிந்தானை
உரனில்வரு மொருபொருளை உலகனைத்து மானானைக்
கரணங்கள் காணாமல் கண்ணார்ந்து நிறைந்தானைப்
பரமனையே பாடுவார் தம்பெருமை பாடுவாம். க

தென்தமிழும் வடகலையுந் தேசிகமும் பேசுவன
மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக
ஒன்றியமெய் யுணர்வோடு முள்ளுருகிப் பாடுவார்
பன்றியுடன் புட்காணாப் பரமனையே பாடுவார். உ



# கூசு. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் புராணம்



காரணபங் கயமைந்தின் கடவுளர்தம் பதங்கடந்து
பூரணமெய்ப் பரஞ்சோதி பொலிந்திலங்கு நாதாந்தத்
தாரணையாற் சிவத்தடைந்த சித்தத்தார் தனிமன்றுள்
ஆரணகா ரணக்கூத்த ரடித்தொண்டின் வழியடைந்தார். க

# ௬௭. திருவாரூர்ப் பிறந்தார் புராணம்



அருவாகி உருவாகி அனைத்துமாய் நின்றபிரான்
மருவாரூங் குழலுமையாள் மணவாளன் மகிழ்ந்தருளும்
திருவாரூர்ப் பிறந்தார்கள் திருத்தொண்டு தெரிந்துணர
ஒருவாயால் சிறியேனா லுரைக்கலாந் தகைமையதோ. ௧

திருக்கயிலை வீற்றிருந்த சிவபெருமான் திருக்கணத்தார்
பெருக்கியசீர்த் திருவாரூர்ப் பிறந்தார்க ளாதலினால்
தருக்கியஐம் பொறியடக்கி மற்றவர்தந் தாள்வணங்கி
ஒருக்கியநெஞ் சுடையவர்க்கே அணித்தாகு முயர்நெறியே. ௨



# ௬௮. முப்போதும் திருமேனி தீண்டுவார் புராணம்



எப்போது மினியபிரா னின்னருளா லதிகரித்து
மெய்ப்போத நெறிவந்த விதிமுறைமை வழுவாமே
அப்போதைக் கப்போது மார்வமிகு மன்பினராய்
முப்போது மர்ச்சிப்பார் முதற்சைவ ராம்முனிவர். ௧

தெரிந்துணரின் முப்போதுஞ் செல்காலம் நிகழ்காலம்
வருங்கால மானவற்றின் வழிவழியே திருத்தொண்டின்
விரும்பியஅர்ச் சனைகள்சிவ வேதியர்க்கே உரியனஅப்
பெருந்தகையார் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ. ௨

நாரணற்கும் நான்முகற்கு மறிய ஒண்ணா நாதனைஎம் பெருமானை ஞான மான, ஆரணத்தி னுட்பொருள்க ளனைத்து மாகு மண்ணலைஎண் ணியகாலம் மூன்று மன்பின்,

காரணத்தா லர்ச்சிக்கும் மறையோர் தங்கள் கமலமலர்க் கழல் வணங்கிக் கசிந்து சிந்தைப், பூரணத்தால் முழுநீறு பூசி வாழும் புனிதர்செய லறிந்தவா புகல லுற்றேன். ௫



# ௬௬. முழுநீறுபூசிய முனிவர்புராணம்



ஆதார மாயனைத்து மாகி நின்ற அங்கணனெம் பெருமானீர் அணிந்த வேணிக், காதார்வெண் திருக்குழையானருளிச்செய்த கற்பமநு கற்பமுப கற்பந் தானு, மாகாதென் றங்குரைத்த அகற்பம் நீக்கி ஆமென்று முன்மொழிந்த மூன்று பேத, மோகாதி குற்றங்க ளறுக்கும் நீற்றை மொழிவதுநம் மிருவினைகள் கழிவ தாக. ௧

அம்பலத்தே உலகுய்ய ஆடு மண்ண லுவந்தாடு மஞ்சினையு மளித்த ஆக்கள், இம்பர்மிசை அநாமயமா யிருந்த போதி லீன்றணிய கோமயமந் திரத்தி னாலேற், றம்பர்தொழ எழுஞ்சிவமந் திரஓமத்தா லுற்பவித்த சிவாங் கிதனி லுணர்வுக் கெட்டா, எம்பெருமான் கழல்நினைந்தங் கிட்ட தூநீ றிதுகற்ப மென்றெடுத்திங் கேத்த லாகும். ௨

ஆரணியத் துலர்ந்தகோ மயத்தைக் கைக்கொண் டழகுறநுண் பொடியாக்கி ஆவின் சுத்த, நீரணிவித் தத்திரமந் திரத்தி னாலே நிசயமுறப் பிடித்தோம நெருப்பி லிட்டுச், சீரணியும் படிவெந்து கொண்ட செல்வத் திருநீறு மநுகற்பம் தில்லை மன்றுள், வாரணியு முலையுமையாள் காண ஆடும் மாணிக்கக் கூத்தர்மொழி வாய்மை யாலே. ௩

அடவிபடு மங்கியினால் வெந்த நீறு மானிலைக ளனல் தொடக்க வெந்த நீறும், இடவகைக ளெரிகொளுவ வெந்த நீறு மிட்டிகைகள் சுட்டஎரி பட்ட நீறும், உடனன்றி வெவ்வேறே ஆவின் நீரால் உரைதிகழ மந்திரங்கொண் டுண்டை யாக்கி, மடமதனில் பொலிந்திருந்த சிவாங்கி தன்னால் வெந்ததுமற் றுபகற்பம் மாயினதும். ௪

இந்தவகை யாலமைத்த நீறு கொண்டே இருதிறமுஞ் சுத்திவரத் தெறித்த பின்னர், அந்தமிலா அரனங்கி ஆறு மெய்ம்மை அறிவித்த குருநன்மை அல்லாப் பூமி, முந்தளதி ரணியாதே அணியும் போது முழுவதும்மெய்ப் புண்டரஞ்சந் திரனிற் பாதி, நந்திளரி தீபநிகழ் வட்டமாக நாதரடி யாரணி வர் நன்மை யாலே. ரு

சாதியினில் தலையான தருமசீலர் தத்துவத்தின் நெறி யுணர்ந்தோர் தங்கள் கொள்கை, நீதியினிற் பிழையாது நெறி யில் நிற்போர் நித்தநிய மத்துநிக ழங்கி தன்னில், பூதி யினைப் புதியபா சனத்துக் கொண்டு புலியதளின் உடை யானைப் போற்றி நீற்றை, ஆதிவரு மும்மலமு மறுத்த வாய்மை அருமுனிவர் முழுவதும்மெய் யணிவ ரன்றே. கூ



# எ௦. அப்பாலும் அடிச்சார்ந்தார் புராணம்



மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக் கப்பால் முதல்வனார் அடிச்சார்ந்த முறைமையோரும், நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறும் நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும், பூவேய்ந்த நெடுஞ்சடைமே லடம்பு தும்பை புதியமதி நதிஇதழி பொருந்த வைத்த, சேவேந்து வெல்கொடியா னடிச்சார்ந் தாரும் செப்பியஅப் பாலுமடிச் சார்ந்தார் தாமே.

செற்றார்தம் புரமெரித்த சிலையார் செல்வத் திருமுரு கன் பூண்டியினிற் செல்லும் போதில், சுற்றருஞ் சிலைவேடர் கவர்ந்து கொண்ட தொகுநிதியின் பரப்பெல்லாஞ் சுமந்து கொண்டு, முற்றாத முலையுமையாள் பாகன் பூத முதற்கணமே உடன்செல்ல முடியாப் பேறு, பெற்றார்தங் கழல்பரவ அடி யேன் முன்னைப் பிறவியினிற் செய்ததவம் பெரிய வாமே. உ

சருக்கம் பதினொன்றுக்குத் திருவிருத்தம் ஆ௲ சகளரு.



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# கஉ. மன்னியசீர்ச் சருக்கம்

# எக. பூசலார் நாயனார் புராணம்

அன்றினர் புரமெ ரித்தார்க் காலய மெடுக்க எண்ணி
ஒன்றுமங் குதவா தாக உணர்வினு லெடுக்குந் தன்மை
நன்றெனை மனத்தி னாலே நல்லனு லயந்தான் செய்த
நின்றவூர்ப் பூச லார்தம் நினைவினை உரைக்க லுற்றும். க

உலகினி லொழுக்கமென்று முயர்பெருந் தொண்டை நாட்டு
நலமிகு சிறப்பின் மிக்க நான்மறை விளங்கு மூதூர்
குலமுதற் சீலமென்றுங் குறைவிலா மறையோர் கொள்கை
நிலவிய செல்வ மல்கி நிகழ்திரு நின்ற ஊராம். உ

அருமறை மரபு வாழ அப்பதி வந்து சிந்தை
தருமுணர் வான எல்லாந் தம்பிரான் கழல்மேற் சார
வருநெறி மாறு அன்பு வளர்ந்தெழ வளர்ந்து வாய்மைப்
பொருள்பெறு வேத நீதிக் கலையுணர் பொலிவின் மிக்கார். ங

"அடுப்பது சிவன்பா லன்பர்க் காம்பணி செய்த" லென்றே
கொடுப்பதெவ் வகையுந்தேடி அவர்கொளக்கொடுத்துக்கங்கை
மடுப்பொதி வேணி ஐயர் மகிழ்ந்துறை வதற்கோர் கோயில்
எடுப்பது மனத்துக் கொண்டா ரிருநிதி இன்மை எண்ணார். ச

மனத்தினுற் கருதி எங்கும் மாநிதி வருந்தித் தேடி
எனைத்துமோர் பொருட்பேறின்றி என்செய்கே னென்றுநைவார்
நினைப்பினு லெடுக்க நேர்ந்து நிகழ்வுறு நிதிய மெல்லாம்
தினைத்துணை முதலாத்தேடிச் சிந்தையால் திரட்டிக்கொண்டார்.

சாதனத் தோடு தச்சர் தம்மையும் மனத்தால் தேடி
நாதனுக் கால யஞ்செய் நலம்பெறு நன்னாட் கொண்டே

ஆதரித் தாக மத்தா லடிநிலை பாரித் தன்பால்
காதலிற் கங்குற் போதுங் கண்படா தெடுக்க லுற்றார். சா

அடிமுத லுபான மாதி யாகிய படைக ளெல்லாம்
வடிவுறுந் தொழில்கள் முற்ற மனத்தினால் வகுத்து மான
முடிவுறு சிகரந் தானும் முன்னிய முழத்திற் கொண்டு
நெடிதுநாள் கூடக் கோயில் நிரம்பிட நினைவாற் செய்தார். எ

தூபியும் நட்டு மிக்க சுதையுநல் வினையுஞ் செய்து
கூவலு மமைத்து மாடு கோயில்சூழ் மதிலும் போக்கி
வாவியுந் தொட்டு மற்றும் வேண்டுவ வகுத்து மன்னுந்
தாபரஞ் சிவனுக் கேற்க விதித்தநாள் சாரு நாளில். அ

காடவர் கோமான் கச்சிக் கற்றளி எடுத்து முற்ற
மாடெலாஞ் சிவனுக் காகப் பெருஞ்செல்வம் வகுத்தல் செய்வான்
நாடமா லறியா தாரைத் தாபிக்கு மந்நாள் முன்னாள்
ஏடலர் கொன்றை வேய்ந்தா ரிரவிடைக் கனவி லெய்தி. கூ

"நின்றஊர்ப் பூச லன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த
நன்றுநீ டால யத்து நாளைநாம் புகுவோம் நீஇங்
கொன்றிய செயலை நாளை ஒழிந்துபின் கொள்வா" யென்று [தார்.
கொன்றைவார் சடையார் தொண்டர் கோயில்கொண் டருளப்போந்

தொண்டரை விளக்கத் தூயோ னருள்செயத் துயிலை நீங்கித்
திண்டிறல் மன்ன "னந்தத் திருப்பணி செய்தார் தம்மைக்
கண்டுநான் வணங்க வேண்டு" மென்றெழுங் காத லோடும்
தண்டலைச் சூழல் சூழ்ந்த நின்றஊர் வந்து சார்ந்தான். கக

அப்பதி யணைந்து "பூச லன்பரிங் கமைத்த கோயில்
எப்புடை யது?"என் றங்க ணெய்தினார் தம்மைக் கேட்கச்
"செப்பிய பூசல் கோயில் செய்ததொன் றில்லை" என்றார்
"மெய்ப்பெரு மறையோரெல்லாம்வருக"என் றுரைத்தான்வேந்தன்.

பூசுர ரெல்லாம் வந்து புரவலன் தன்னைக் காண
"மாசிலாப் பூச லார்தாம் யார்?"என மறையோ ரெல்லாம்
"ஆசில்வே தியனிவ் வூரா" னென்றவ ரழைக்க ஒட்டான்
ஈசனார் அன்பர் தம்பா லெய்தினன் வெய்ய வேலான். கங

தொண்டரைச் சென்று கண்ட மன்னவன் தொழுது "நீரிங்
கெண்டிசை யோரு மேத்த எடுத்தநா லயந்தான் யாதிங்
கண்டர்நா யகரைத் தாபித் தருளுநா ளின்றென் றும்மைக்
கண்டடி பணிய வந்தேன் கண்ணுதல் அருள்பெற்" றென்றான்.

மன்னவ னுரைப்பக் கேட்ட அன்பர்தாம் மருண்டு நோக்கி
"என்னையோர் பொருளாக் கொண்டே எம்பிரா னருள்செய் தாரேல்
முன்வரு நிதியி லாமை மனத்தினால் முயன்ற கோயில்
இன்னதா" மென்று சிந்தித் தெடுத்தவா றெடுத்துச் சொன்னார்.

அரசனு மதனைக் கேட்டங் கதிசய மெய்தி "என்னே!
புரையறு சிந்தை யன்பர் பெருமை!" என் றவரைப்போற்றி
விரைசெறி மாலை தாழ நிலமிசை வீழ்ந்து தாழ்ந்து
முரசெறி தானை யோடு மீண்டுதன் மூதூர்ப் புக்கான். கசு

அன்பரு மமைத்த சிந்தை ஆலயத் தரனார் தம்மை
நன்பெரும் பொழுது சாரத் தாபித்து நலத்தி னோடும்
பின்புபூ சனைக ளெல்லாம் பெருமையிற் பலநாள் பேணிப்
பொன்புனை மன்று ளாடும் பொற்கழல் நீழல் புக்கார். கஎ

நீண்டசெஞ் சடையி னார்க்கு நினைப்பினால் கோயி லாக்கிப்
பூண்டஅன் பிடைய றாத பூசலார் பொற்றாள் போற்றி
ஆண்டகை வளவர் கோமா னுலகுய்ய அளித்த செல்வப்
பாண்டிமா தேவி யார்தம் பாதங்கள் பரவ லுற்றேன்.

# எஉ. மங்கையர்க்கரசியார் புராணம்

மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம் வளவர்
திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி, செங்கமலத் திரு
மடந்தை கன்னி நாடாள் தென்னர்குலப் பழிதீர்த்த தெய்
வப் பாவை, எங்கள்பிரான் சண்பை யர்கோ னருளி னாலே
இருந்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள், பொங்கொளிவெண்
திருநீறு பரப்பி னாரைப் போற்றுவார் கழலெம்மால் போற்ற
லாமே. க

பூசுரர்சூ ளாமணியாம் புகலி வேந்தர் போனகஞா னம்பொழிந்த புனித வாக்கால், தேசுடைய பாடல்பெறுந் தவத்தினுரைச் செட்புவதியா மென்னறிந்து தென்னர் கோமான், மாசில்புகழ் நெடுமாறன் தனக்குச் சைவ வழித்துணையாய் நெடுங்காலம் மன்னிப் பின்னை, ஆசில்நெறி யவரோடுங் கூட ஈச ரடிநிழற்கீ ழமர்ந்திருக்க அருளும் பெற்றார். உ

வருநாளென் றும்பிழையாத் தெய்வப் பொன்னி வளம்பெருக்க வளவர்குலம் பெருக்குந் தங்கள், திருநாடு போற்செழியர் தென்னர் நாடு சீர்விளக்குஞ் செய்யசீ றடிகள் போற்றி, ஒருநாளுந் தஞ்செயலில் வழுவா தன்பர்க் குடைகீளுங் கோவணமும் நெய்து நல்கும், பெருநாமச் சாலியர்தங் குலத்தில் வந்த பெருந்தகையார் நேசர்திறம் பேச லுற்றும்.



# எரு. நேச நாயனார் புராணம்



சீர்வளர் சிறப்பின் மிக்க செயன்முறை ஒழுக்கங் குன்றா
நார்வளர் சிந்தை வாய்மை நன்மையார் மன்னி வாழும்
பார்வளர் புகழின் மிக்க பழம்பதி மதிதோய் நெற்றிக்
கார்வளர் சிகர மாடக் காம்பீலி என்ப தாகும். க

அந்நக ரதனில் வாழ்வா ரறுவையர் குலத்து வந்தார்
மன்னிய தொழிலில் தங்கள் மரபில்மேம் பாடு பெற்றார்
பன்னகா பரணற் கன்பர் பணிதலைக் கொண்டு பாதம்
சென்னியிற் கொண்டு போற்றுந் தேசினார் நேச ரென்பார். உ

ஆங்கவர் மனத்தின் செய்கை அரனடிப் போதுக் காக்கி
ஓங்கிய வாக்கின் செய்கை உயர்ந்தஅஞ் செழுத்துக் காக்கித்
தாங்குகைத் தொழிலின் செய்கை தம்பிரா னடியார்க் காகப்
பாங்குடை உடையுங் கீளும் பழுதில்கோ வணமும் நெய்வார்.

உடையொடு நல்ல கீளு மொப்பில்கோ வணமும் நெய்து
விடையவ ரடியார் வந்து வேண்டுமா றீயு மாற்றால்

இடையறா தளித்து நாளு மவர்கழ லிறைஞ்சி யேத்தி
அடைவுறு நலத்த ராகி அரனடி நீழல் சேர்ந்தார். ௪

கற்றை வேணி முடியார்தங் கழல்சேர் வதற்குக் கலந்த வினை, செற்ற நேசர் கழல்வணங்கிச் சிறப்பால் முன்னைப் பிறப்புணர்ந்து, பெற்ற முயர்த்தார்க் காலயங்கள் பெருக அமைத்து மண்ணாண்ட, கொற்ற வேந்தர் கோச்செங்கட் சோழர் பெருமை கூறுவாம். ௫



# எச. கோச்செங்கட்சோழ நாயனார் புராணம்



துலையிற் புறவின் நிறையளித்த சோழ ருரிமைச் சோணாட்டில், அலையிற் றரள மகிலொடுசந் தணிநீர்ப் பொன்னி மணிகொழிக்குங், குலையிற் பெருகுஞ் சந்திர தீர்த் தத்தின் மருங்கு குளிர்சோலை, நிலையிற் பெருகுந் தரு மிடைந்த நெடுந்தண் கான மொன்றுளதால். ௧

அப்பூங் கானில் வெண்ணாவ லதன்கீழ் முந்நா ளரி தேடும், மெய்ப்பூங் கழலார் வெளிப்படலும் மிக்க தவத் தோர் வெள்ளானை, கைப்பூம் புனலும் முகந்தாட்டிக் கமழ் பூங் கொத்து மணிந்திறைஞ்சி, மைப்பூங் குவளைக் களத் தாரை நாளும் வழிபட் டொழுகுமால். ௨

ஆன செயலால் திருவானைக் காஎன் றதற்குப் பெயராக
ஞான முடைய ஒருசிலந்தி நம்பர் செம்பொன் திருமுடிமேல்
கானல் விரவுஞ் சருகுதிரா வண்ணங் கலந்த வாய்நூலால்
மேனற் றிருமேற் கட்டியென விரிந்து செறியப் புரிந்துளதால்.

நன்று மிழைத்த சிலம்பிவலைப் பரப்பை நாத னடி வணங்கச், சென்ற யானை "அநுசித"மென் றதனைச் சிதைக்

கச் சிலம்பிதான், "இன்று களிற்றின் காஞ்சுலவிற்"றென்று மீள இழைத்ததனை, அன்று கழித்த பிற்றைநா ளடல்வெள் ளானை அழித்ததால். ௪

"எம்பி ரான்றன் மேனியின்மேல் சருகு விழாமை யால்வருந்தி, உம்ப ரிழைத்த நூல்வலய மழிப்ப தே"என் றுருத்தெழுந்து, வெம்பிச் சிலம்பி துதிக்கையினிற் புக்குக் கடிப்ப வேகத்தால், கும்ப யானை கைநிலத்தில் மோதிக் குலைந்து வீழ்ந்ததால். ௫

தறையிற் புடைப்பக் கைப்புக்க சிலம்பி தானு முயிர் நீங்க, மறையிற் பொருளுந் தருமாற்றான் மதயா னைக்கும் வரங்கொடுத்து, முறையிற் சிலம்பி தனைச்சோழர் குலத்து வந்து முன்னுதித்து, நிறையிற் புவனங் காத்தளிக்க அருள் செய் தருள நிலத்தின்கண். ௬

தோன்மைதரு சோழர்குலத் தரசனுஞ் சுபதேவன்
தன்னுடைய பெருந்தேவி கமலவதி யுடன்சார்ந்து
மன்னுபுகழ்த் திருத்தில்லை மன்றுடும் மலர்ப்பாதம்
சென்னியுறப் பணிந்தேத்தித் திருப்படிக்கீழ் வழிபடுநாள். ௭

மக்கட்பே றின்மையினால் மாதேவி வரம்வேண்டச்
செக்கர்நெடுஞ் சடைக்கூத்தர் திருவுள்ளஞ் செய்தலினால்
மிக்கதிருப் பணிசெய்த சிலம்பிகுல வேந்துமகிழ்
அக்கமல வதிவயிற்றி லணிமகவாய் வந்தடைய. ௮

கழையார் தோளி கமலவதி தன்பாற் கருப்ப நாள்நிரம்பி
விழைவார் மகவு பெறஅடுத்த வேலை யதனிற் காலமுணர்
பழையார் "ஒருநா ழிகைகழித்துப் பிறக்குமேலிப்பசுங்குழவி
உழையார் புவன மொருமூன்று மளிக்கு" மென்ன ஒள்ளிழையார். ௯

"பிறவா தொருநா ழிகைகழித்தென் பிள்ளை பிறக்கும் பரிசேன்கால், உறஆர்த் தெடுத்துத் தூக்கு"மென உற்ற செயல் மற் றதுமுற்றி, அறவா ணர்கள்சொல் லியகால மணையப் பிணிவிட் டருமணியை, இறவா தொழிவாள் பெற்றெடுத் "தென் கோச்செங் கண்ணனோ!" என்றாள். ௧O

தேவி புதல்வர்ப் பெற்றிறக்கச் செங்கோற் சோழன்
சுபதேவன், ஆவி அனைய அரும்புதல்வன் தன்னை வளர்த்
தங் கணிமகுடம், மேவு முரிமை முடிகவித்துத் தானும்
விரும்பு பெருந்தவத்தின், தாவில் நெறியைச் சென்றடைந்து
தலைவர் சிவலோ கஞ்சார்ந்தான். ௧௧

கோதை வேலார் கோச்செங்கட் சோழர் தாமிக் குவ
லயத்தில், ஆதி மூர்த்தி அருளால்முன் னறிந்து பிறந்து
மண்ணுள்வார், பூத நாதன் தான்மகிழ்ந்து பொருந்தும்
பெருந்தண் சிவாலயங்கள், காத லோடும் பலஎடுக்குந்
தொண்டு புரியுங் கடன் பூண்டார். ௧௨

ஆனைக்காவில் தாம்முன்ன மருள்பெற் றதனை அறிந்தங்கு
மானைத் தரித்த திருக்கரத்தார் மகிழுங் கோயில்செய்கின்றார்
ஞானச் சார்வாம் வெண்ணாவ லுடனே கூட நலஞ்சிறக்கப்
பானற் களத்துத் தம்பெருமானமருங் கோயில் பணிசமைத்தார்.

மந்திரிகள் தமையேவி வள்ளல்கொடை அநபாயன்
முந்தைவருங் குலமுதலோ ராயமுதற் செங்கணார்
அந்தமில்சீர்ச் சோணாட்டி லகனாடு தொறுமணியார்
சந்திரசே கரனமருந் தானங்கள் பலசமைத்தார். ௧௪

அக்கோயில் தொறுஞ்சிவனுக் கமுதுபடி முதலான
மிக்கபெருஞ் செல்வங்கள் விருப்பினால் மிகஅமைத்துத்
திக்கனைத்துந் தனிச்செங்கோல் முறைநிறுத்தித் தேர்வேந்தர்
முக்கண்முதல் நடமாடும் முதற்றில்லை முன்னினார். ௧௫

திருவார்ந்த செம்பொன்னி னம்பலத்தே நடஞ்செய்யும்
பெருமானை அடிவணங்கிப் பேரன்பு தலைசிறப்ப
உருகாநின் றுளங்களிப்பத் தொழுதேத்தி உறையுநாள்
வருவாய்மை மறையவர்க்கு மாளிகைகள் பலசமைத்தார். ௧௬

தேவர்பிரான் திருத்தொண்டிற்கோச்செங்கட்செம்பியர்கோன்
பூவலயம் பொதுநீக்கி ஆண்டருளிப் புவனியின்மேல்
ஏவியநற் றொண்டுபுரிந் திமையவர்க ளடிபோற்ற
மேவினார் திருத்தில்லை வேந்தர்திரு வடிநிழற்கீழ். ௧௭

கருநீல மிடற்றார் செய்ய கழலடி நீழல் சேர
வருநீர்மையுடைய செங்கட்சோழர்தம்மலர்த்தாள் வாழ்த்தித்
தருநீர்மை இசைகொள் யாழின் தலைவராய் உலகமேத்துந்
திருநீல கண்டப் பாணர் திறமினிச் செப்ப லுற்றேன். ௧௭



# எரு. திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார் புராணம்



எருக்கத்தம் புலியூர் மன்னி வாழ்பவ ரிறைவன் தன்சீர்
திருத்தகும் யாழி லிட்டுப் பரவுவார் செழுஞ்சோ ணாட்டில்
விருப்புறு தான மெல்லாம் பணிந்துபோய் விளங்கு கூடற்
பருப்பதச் சிலையார் மன்னு மாலவாய் பணியச் சென்றார். ௧

ஆலவா யமர்ந்தார் கோயில் வாயிலை அடைந்து நின்று
பாலையீ ரேழு கோத்த பண்ணினிற் கருவி வீக்கிக்
காலமா தரித்த பண்ணிற் கைபல முறையு மாராய்ந்
தேலவார் குழலாள் பாகர் பாணிகள் யாழி லிட்டார். ௨

மற்றவர் கருவிப் பாடல் மதுரைநீ டால வாயில்
கொற்றவன் திருவுள்ளத்துக்கொண்டுதன்தொண்டர்க்கெல்லாம்
அற்றைநாட் கனவி லேவ அருட்பெரும் பாண னாரைத்
தேற்றினார் புரங்கள் செற்றார் திருமுன்பு கொண்டு புக்கார். ௩

அன்பர்கள் கொண்டு புக்க பொழுதினி லரிவை பாகன்
தன்பெரும் பணியா மென்று தமக்குமெய் யுணர்த லாலே
மன்பெரும் பாண னாரும் மாமறை பாட வல்லார்
முன்பிருந் தியாழிற் கூடல் முதல்வரைப் பாடு கின்றார். ௪

திரிபுர மெரித்த வாறுந் தேர்மிசை நின்ற வாறுங்
கரியினை யுரித்த வாறுங் காமனைக் காய்ந்த வாறும்
அரிஅயற் கரிய வாறும் அடியவர்க் கெளிய வாறும்
பரிவினாற் பாடக் கேட்டுப் பரமனா ரருளி னாலே. ௫

அந்தரத் தெழுந்த ஓசை "அன்பினிற் பாணர் பாடும்
சந்தயாழ் தரையிற் சீதந் தாக்கில்வீக் கழியு"மென்று
"சுந்தரப் பலகை முன்நீ ரிடு"மெனத் தொண்ட ரிட்டார்
செந்தமிழ்ப் பாண னாருந் திருவருள் பெற்றுச் சேர்ந்தார். ௬

தமனியப் பலகை ஏறித் தந்திரிக் கருவி வாசித்
துமையொரு பாகர் வண்மை உலகெலா மறிய ஏத்தி
இமையவர் போற்ற ஏகி எண்ணில்தா னங்கள் கும்பிட்
டமரர்நா டாளா தாரூ ராண்டவ ராரூர் சேர்ந்தார். ௭

கோயில்வாயில்முன்னடைந்து கூற்றஞ்செற்றபெருந்திறலும்
தாயின்நல்ல பெருங்கருணை அடியார்க்களிக்குந் தண்ணளியும்
ஏயுங் கருவி யிற்றொடுத்தங் கிட்டுப் பாடக் கேட்டங்கண்
வாயில் வேறு வடதிசையில் வகுப்பப் புகுந்து வணங்கினார். ௮

மூலத் தானத் தெழுந்தருளி இருந்த முதல்வன் தனைவணங்கிச்
சாலக் காலமங்கிருந்து தம்பி ரான்தன் திருவருளால்
சீலத் தார்கள் பிரியாத திருவா ரூரின் நின்றுபோய்
ஆலத் தார்ந்த கண்டத்தா ரமருந் தானம் பலவணங்கி. ௯

ஆழி சூழுந் திருத்தோணி அமர்ந்த அம்மா னருளாலே
யாழின் மொழியா ளுமைஞான மூட்ட உண்ட எம்பெருமான்
காழி நாடன் கவுணியர்கோன் கமலபாதம் வணங்குதற்கு
வாழிமறையோர் புகலியினில் வந்தார் சந்த இசைப்பாணர். ௧௦

ஞானமுண்டார் கேட்டருளி நல்ல இசையாழ்ப் பெரும் பாணர்க், கான படியாற் சிறப்பருளி யமரும் நாளி லவர் பாடும், மேன்மைப் பதிகத் திசையாழி லிடப்பெற் றுடனே மேவியபின், பானற் களத்தார் பெருமணத்தி லுடனே பரமர் தாளடைந்தார். ௧௧

வரும்பான் மையினிற் பெரும்பாணர் மலர்த்தாள் வணங்கி வயற்சாலிக், கரும்பார் கழனித் திருநாவ லூரிற் சைவக் கலைமறையோர், அரும்பா நின்ற அணிநிலவும் பணியு மணிந்தார் அருள்பெற்ற, சுரும்பார் தொங்கற் சடைய னார் பெருமை சொல்ல லுறுகின்றாம். ௧௨



# எசா. சடையநாயனார் புராணம்



தம்பி ரானைத் தோழமைகொண் டருளித் தமதுதடம்புயஞ்சேர்
கொம்ப னார்பா லொருதூது செல்ல வேவிக் கொண்டருளும்
எம்பி ரானைச் சேரமான் பெருமா னிணையில் துணைவராம்
நம்பி யாரூ ரரைப்பயந்தார் ஞால மெல்லாங் குடிவாழ. க



# எஎ. இசைஞானியார் புராணம்



ஒழியாப் பெருமைச் சடையனா ருரிமைச் செல்வத் திருமனையார், அழியாப் புரங்க ளெய்தழித்தா ராண்ட நம்பி தனைப்பயந்தார், இழியாக் குலத்தி னிசைஞானிப் பிராட்டி யாரை என்சிறுபுன், மொழியாற் புகழ முடியுமோ முடியா தெவர்க்கும் முடியாதால். க

சருக்கம் பன்னிரண்டுக்குத் திருவிருத்தம் ஆ சஉகஙு



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# கரு. வெள்ளானைச் சருக்கம்

மூல மான திருத்தொண்டத் தொகைக்கு முதல்வ ராயிந்த
ஞாலமுய்ய எழுந்தருளும் நம்பி தம்பி ரான்தோழர்
காலை மலர்ச்செங் கமலக்கண் கழறிற் றறிவா ருடன்கூட
ஆலமுண்டார் திருக்கயிலை அணைந்த தறிந்த படியுரைப்பாம்.

படியில் நீடும் பத்திமுத லன்பு நீரிற் பணைத்தோங்கி
வடிவு நம்பி யாரூரர் செம்பொன் மேனி வனப்பாகக்
கடிய வெய்ய இருவினையின் களைகட் டெழுந்து கதிர்பரப்பி
முடிவி லாத சிவபோகம் முதிர்ந்து முறுகி விளைந்ததால்.

ஆர முரக மணிந்தபிரா னன்ப ரணுக்க வன்றொண்டர், ஈர மதுவார் மலர்ச்சோலை எழிலா ரூரி லிருக்குநாள், சேரர் பெருமாள் தனைநினைந்து தெய்வப் பெருமான் கழல்வணங்கிச், சாரல் மலைநா டணைவதற்குத் தவிரா விருப்பினுடன் போந்தார். ௩

நன்னீர்ப் பொன்னித் திருநாட்டு நாதர் மகிழுந் திருப்பதிகள், முன்னி இறைஞ்சி அகன்றுபோய் முல்லைப் படப்பைக் கொல்லைமான், துன்னி உகைக்குங் குடக்கொங்கில் அணைந்து தூய மதிவான்நீர், சென்னி மிசைவைத் தவர் செல்வத் திருப்புக் கொளியூர் சென்றடைந்தார். ௪

மறையோர் வாழு மப்பதியின் மாட வீதி மருங்கணைவார், நிறையுஞ் செல்வத் தெதிர்மனைக ளிரண்டில் நிகழ்மங் கலவியங்கள், அறையுமொலியொன் றினிலொன்றி லழுகை ஒலிவந் தெழுதலுமாங், குறையு மறையோர் களை" இரண்டு முடனே நிகழ்வ தென்?"னென்றார். ௫

அந்த ணாளர் வணங்கி“யரும் புதல்வ ரிருவர் ஐயாண்டு
வந்த பிராயத் தினர்குளித்த மடுவில் முதலை ஒருமகவை
முந்த விழுங்கப் பிழைத்தவனை முந்நூ லணியுங் கலியாணம்
இந்த மனைமற் றந்தமனை இழந்தா ரழுகை என்றுரைத்தார். ௬

இத்தன் மையினைக் கேட்டருளி இரங்குந் திருவுள் ளத்தினராம், மொய்த்த முகைத்தார் வன்தொண்டர் தம்மை முன்னே கண்டிறைஞ்ச, வைத்த சிந்தை மறையோனும் மனைவி தானும் மகவிழந்த, சித்த சோகந் தெரியாமே வந்து திருத்தா ளிறைஞ்சினார். ௭

துன்ப மகல முகமலர்ந்து தொழுவார் தம்மை முக நோக்கி, “இன்ப மைந்தன் தனைஇழந்தீர் நீரோ!” என்ன எதிர்வணங்கி, “முன்பு புகுந்து போனதது முன்னே வணங்க முயல்கின்றோம், அன்பு பழுதா காமலெழுந் தருளப் பெற் றோ” மெனத்தொழுதார். ௮

“மைந்தன் தன்னை இழந்ததுயர் மறந்து நான்வந் தணைந்ததற்கே, சிந்தை மகிழ்ந்தார் மறையோனும் மனைவி தானும் சிறுவனையான், அந்த முதலை வாய்நின்று மழைத் துக் கொடுத்தே அவிநாசி, எந்தை பெருமான் கழல்பணிவே” னென்றார் சென்றா ரிடர்களைவார். ௯

இவ்வா றருளிச் செய்தருளி “இவர்கள் புதல்வன் தனைக்கொடிய, வெவ்வாய் முதலை விழுங்குமடு எங்கே?” என்று வினவிக்கேட், டவ்வாழ் பொய்கைக் கரையிலெழுந் தருளி அவனை அன்றுகவர், வெவ்வா யெயிற்று முதலைகொடு வருதற் கெடுத்தார் திருப்பதிகம். ௧௦

“உரைப்பா ருரை” என் றெடுத்ததிருப் பாட்டு முடியா முன்னுயர்ந்த, வரைப்பான் மையில்நீள் தடம்புயத்து மறலி மைந்த னுயிர்கொணர்ந்து, திரைப்பாய் புனலின் முதலைவயிற் றுடலிற் சென்ற ஆண்டுகளும், தரைப்பால் வளர்ந்த தென நிரம்ப முதலை வாயில் தருவித்தான். ௧௧

பெருவாய்முதலை கரையின்கண் கொடுவந் துமிழ்ந்த பிள்ளைதனை
உருகா நின்ற தாய்ஓடி எடுத்துக் கொடுவந் துயிரளித்த

திருவா ளன்தன் சேவடிக்கீழ்ச் சீலமறையோ னொடுவீழ்ந்தாள்
மருவார் தருவின்மலர்மாரி பொழிந்தார் விசும்பில் வானோர்கள்.

மண்ணினுள்ளா ரதிசயித்தார் மறையோ ரெல்லா முத்தரியம்
விண்ணின்மேலெற விட்டார்த்தார் வேத நாதம் மிக்கெழுந்த
தண்ண லாரூ ரவிநாசி அரனார் தம்மை அருமறையோன்
கண்ணின் மணியாம் புதல்வனையுங் கொண்டு பணிந்தார் காசினிமேல்.

பரவும் பெருமைத் திருப்பதிகம் பாடிப்பணிந்து போந்தன்பு
விரவு மறையோன் காதலனை வெண்ணூல் பூட்டி அண்ணலார்
முரச மியம்பக் கலியாணம் முடித்து முடிச்சே ரலர்தம்பால்
குரவ மலர்ப்பூந் தண்சோலை குலவு மலைநா டணைகின்றார். கச

சென்ற சென்ற குடபுலத்துச் சிவனா ரடியார் பதிகள்தொறும்
நன்று மகிழ்வுற் றின்புற்று நலஞ்சேர் தலமுங் கானகமுந்
துன்று மணிநீர்க் கான்யாறுந் துறுகற் சுரமுங் கடந்தருளிக்
குன்ற வளநாட் டகப்புகுந்தார் குலவு மடியே னகப்புகுந்தார்.

“முன்னாள் முதலைவாய்ப்புக்க மைந்தன் முன்போல் வரமீட்டுத்
தென்னா ரூர ரெழுந்தருளா நின்றார்” ரென்று சேரர்பிரார்க்
கந்நாட் டரனா ரடியார்கள் முன்னே ஓடி அறிவிப்பப்
பொன்னார் கிழியும் மணிப்பூணுங் காசுந் தூசும் பொழிந்தளித்தார்.

செய்வ தொன்று மறியாது சிந்தை மகிழ்ந்து களிகூர்ந் “தென், ஐய னணைந்தா னெனைஆளு மண்ண லணைந் தான் ஆரூரிற், சைவ னணைந்தான் என்துணையாந் தலைவ னணைந்தான் தரணியெலாம், உய்ய அணைந்தா” னணைந்தா னென்ன் றோகை முரசஞ் சாற்றுவித்தார். கஎ

பெருகு மதிநூ லமைச்சர்களை அழைத்துப் பெரியோ ரெழுந்தருளப், பொருவில் நகர மலங்கரித்துப் பண்ணிப் பயணம் புறப்படுவித், தருவி மதமால் யானையினை அணைந்து மிசைகொண் டரசர்பெருந், தெருவு கழிய எதிர்வந்தார் சேரர் குலமுய்ந் திடவந்தார். கஅ

மலைநாட் டெல்லை யுட்புகுத வந்த வன்றொண் டரைவரையில்
சிலைநாட்டியவெல் கொடித்தானைச்சேரர் பெருமானெதிர்சென்று

தலைகாட் கமலப் போதனைய சரணம் பணியத் தாவில்பல
கலைநாட் டமுத ஆரூரர் தாமுந் தொழுது கலந்தனரால். ௧௯

சிந்தை மகிழுஞ் சேரலனார் திருவா ரூர ரெனுமிவர்கள்
தந்த மணிமே னிகள்வேறு மெனினு மொன்றுந் தன்மையராய்
முந்த எழுங்கா தலிற்றொழுது முயங்கி உதியர் முதல்வேந்தர்
எந்தை பெருமான் திருவாரூர்ச் செல்வம் வினவி இன்புற்றார்.

ஒருவ ரொருவ ரிற்கலந்து குறைபா டின்றி உயர்காதல், இருவர் நண்பின் செயல்கண்ட இரண்டு திறத்து மாந்தர்களும், பெருகு மகிழ்ச்சி கலந்தார்த்தார் பெருமாள் தமிழின் பெருமாளை, வருகை வரையின் மிசைஏற்றித் தாம்பின் மதி வெண் குடைகவித்தார். ௨௧

உதியர் பெருமாள் பெருஞ்சேனை ஓதங் கிளர்ந்த தேன ஆர்ப்பக், கதிர்வெண் திருநீற் றன்பர்குழாங் கங்கை கிளர்ந்த தேன ஆர்ப்ப, எதிர்வந் திறைஞ்சு மமைச்சர்குழா மேரு மிவுளித் துகளார்ப்ப, மதிதங் கியமஞ் சணிஇஞ்சி வஞ்சி மணிவா யிலைஅணைந்தார். ௨௨

ஆரண மொழிகள் முழங்கிட ஆடினர் குணலைக ளந்தணர்
வாரண மதமழை சிந்தின வாசிகள் கிளரொளி பொங்கின
பூரண கலசம் மலிந்தன பூமழை மகளிர் பொழிந்திடுந்
தோரண மறுகு புகுந்தது தோழர்கள் நடவிய குஞ்சரம்.

அரிவையர் தெருவில் நடம்பயில் அணிகிளர் தளிரடி தங்கிய
பரிபுர வொலிகள் கிளர்ந்தன பணைமுர சொலிகள் பரந்தன
சுரிவளைநிரைகள் முரன்றன துணைவர்க ளிருவரும் வந்தணி
விரிதரு பவன நெடுங்கடை விறல்மத கரியி னிழிந்தனர். ௨௪

தூநறு மலர்தர ளம்பொரி தூவிமுன் னிருபுடை யின்கணும்
நான்மறை முனிவர்கள் மங்கல நாமநன் மொழிகள் விளம்பிட
மேல்நிறை நிழல்செய வெண்குடை வீசிய கவரி மருங்குற
வானவர் தலைவரும் நண்பரும் மாளிகை நடுவு புகுந்தனர்.

அரியணை யதனில் விளங்கிட அடல்மழ விடைஎன நம்பியை
வரிமலர் அமளி அமர்ந்திட மலையர்கள் தலைவர் பணிந்துபின்

உரிமைநல் வினைகள் புரிந்தன உரைமுடி விலவெனமுன்செய்து பரிசனம் மனமகி ழும்படி பலபட மணிநிதி சிந்தினர். ௨௬

இன்ன தன்மையி னுதியர்கள் தலைவர்தா மிடர்கெட முனைப்பாடி, மன்னர் தம்முடன் மகிழ்ந்தினி துறையுநாள் மலைநெடு நாட்டெங்கும், பன்ன கம்புனை பரமர்தந் திருப்பதி பலவுடன் பணிந்தேத்திப், பொன்னெ டுந்தட மூதெயில் மகோதையிற் புகுந்தனர் வன்றொண்டர். ௨௭

ஆய செய்கையில் நாள்பல கழிந்தபி னரசர்கள் முதற் சேரர், தூய மஞ்சனத் தொழிலினில் தொடங்கிடத் துணை வராம் வன்றொண்டர், பாய கங்கைசூழ் நெடுஞ்சடைப் பரம ரைப் பண்டுதாம் பிரிந்தெய்தும், சேய நன்னெறி குறுகிடக் குறுகினார் திருவஞ்சைக் களந்தன்னில். ௨௮

கரிய கண்டர்தங் கோயிலை வலங்கொண்டு காதலாற் பெருகன்பு, புரியு முள்ளத்த ருள்ளணைந் திறைவர்தம் பூங் கழ லிணைபோற்றி, அரிய செய்கையி லவனியில் விழுந்தெ ழுந் தலைப்புறும் மனைவாழ்க்கை, சரிய வே“தலைக் குத்தலை மாலை”என் றெடுத்தனர் தமிழ்மாலை. ௨௯

எடுத்த அத்திருப் பதிகத்தி னுட்குறிப் “பிவ்வுல கினிற் பாசம், அடுத்த வாழ்க்கையை அறுத்திட வேண்டு”மென் றன்பரன் பினிற்பாடக், கடுத்த தும்பிய கண்டர்தங் கயிலை யிற் கணத்தவ ருடன்கூடத், தடுத்த செய்கைதான் முடிந்தி டத் தங்கழற் சார்புதந் தளிக்கின்றார். ௩0

மன்ற லந்தரு மிடைந்தபூங் கயிலையில் மலைவல்லி யுடன்கூட, வென்றி வெள்விடைப் பாகர்தாம் வீற்றிருந் தரு ளிய பொழுதின்கண், “ஒன்று சிந்தைநம் மூரனை உம்பர் வெள் ளானையி னுடனேற்றிச், சென்று கொண்டிங்கு வாரு” மென் றயன்முதற் றேவர்கட் கருள்செய்தார். ௩௧

வான நாடாக ளர்அயன முதலினோா வணங்கிமுன் விடைகொண்டு, ஞான லந்திகழ் சோதிவெள் ளானையுங் கொண் டுவன் தொண்டர்க்குத், தேன லம்புதண் சோலைசூழ் மகோ

தையில் திருவஞ்சைக் களஞ்சேரக், கானி லங்கோள வலங் கொண்டு மேவினார் கடிமதிற் றிருவாயில். ௬௨

தேவர் தங்குழாம் நெருங்கிய வாய்தலிற் றிருநாவ லூரர்தம், காவல் மன்னரும் புறப்பட எதிர்கொண்டு "கயிலை யிற் றிருக்கின்ற, பூவ லம்புதண் புனற்சடை முடியவ ரரு ளிப்பா" டெனப்போற்றி, "ஏவ" லென்றபின் செய்வதொன் றிலாதவர் பணிந்தெழுந் தெதிரேற்றார். ௬௩

ஏற்ற தொண்டரை அண்டர்வெள் ளானையி னெதிர் வலங் கொண்டேற்ற, நாற்ற டங்கடல் முழக்கென ஐவகை நாதம்மீ தெழுந்தார்ப்ப, போற்றி வானவர் பூமழை பொழிந் திடப் போதுவா ருயிரேல்லாஞ், சாற்று மாற்றங்க ளுணர் பெருந் துணைவரை மனத்தினிற் கொடுசோர்ந்தார். ௬௪

சேரர் தம்பிரான் தம்பிரான் தோழர்தஞ் செயலறிந் தப்போதே, சார நின்றதோர் பரியினை மிசைக்கொண்டு திரு வஞ்சைக் களஞ்சார்வார், வீர வெண்களி றுகைத்துவிண் மேற்செலும் மெய்த்தொண்டர் தமைக்கண்டார், பாரில் நின் றிலர் சென்றதம் மனத்தொடு பரியுமுன் செலவிட்டார். ௬௫

விட்ட வெம்பரிச் செவியினிற் புவிமுதல் வேந்தர்தாம் விதியாலே, இட்ட மாஞ்சிவ மந்திர மோதலின் இருவிசும் பெழப்பாய்ந்து, மட்ட லர்ந்தபைந் தெரியல்வன் றொண்டர் மேல் கொண்டமா தங்கத்தை, முட்ட எய்திமுன் வலங் கொண்டு சென்றது மற்றதன் முன்னுக. ௬௬

உதியர் மன்னவர் தம்பெருஞ் சேனையி னுடன்சென்ற படைவீரர், கதிகொள் வாசியிற் செல்பவர் தம்மைத்தங் கட் புலப் படுமெல்லை, எதிர்வி சும்பினிற் கண்டபின் கண்டில ராதலி னெல்லாரும், முதிரு மன்பினி லுருவிய சுரிகையால் முறைமுறை உடல்வீழ்த்தார். ௬௭

வீர யாக்கையை மேல்கொண்டு சென்றுபோய் வில்லவர் பெருமானைச், சார முன்சென்று சேவக மேற்றனர் தனித் தொண்டர் மேல்கொண்ட, வாரும் மும்மதத் தருவிவெள்

ளானைக்கு வயப்பரி முன்வைத்துச், சேரர் வீரருஞ் சென்ற
னர் மன்றவர் திருமலைத் திசைநோக்கி. ௩அ

யானை மேல்கொண்டு செல்கின்ற பொழுதினில் இமைய
வர் குழாமெனனுந், தானை முன்செலத் "தானேனை முன்
படைத் தா"னெனுந் தமிழ்மாலை, மான வன்றொண்டர் பாடி
முன் னணைந்தனர் மதிநதி பொதிவேணித், தேன லம்புதண்
கொன்றையார் திருமலைத் தென்திசைத் திருவாயில். ௩௯

மாசில் வெண்மைசேர் பேரொளி உலகெலாம் மலர்ந்
திட வளர்மெய்ம்மை, ஆசி லன்பர்தஞ் சிந்தைபோல் விளங்
கிய அணிகிளர் மணிவாயில், தேசு தங்கிய யானையும் புரவியு
மிழிந்துசே ணிடைச் செல்வார், ஈசர் வெள்ளிமா மலைத்தடம்
பலகடந் தெய்தினர் மணிவாயில். ௪0

அங்க ணெய்திய திருஅணுக் கன்திரு வாயிலி னடற்
சேரர், தங்கள் காவலர் தடையுண்டு நின்றனர் தம்பிரா னருளாலே,
பொங்கு மாமதம் பொழிந்தவெள் ளானையி னும்பர்
போற் றிடப்போந்த, நங்கள் நாவலூர் காவலர் நண்ணினு
ரண்ணலார் திருமுன்பு. ௪௧

சென்று கண்ணுதல் திருமுன்பு தாழ்ந்துவீழ்ந் தெழுந்
துசே ணிடைவிட்ட, கன்று கோவினைக் கண்டணைந் தது
எனக் காதலின் விரைந்தெய்தி, நின்று போற்றிய தனிப்பெருந்
தொண்டரை நேரிழை வலப்பாகத், தோன்று மேனியர்
"ஊரனே! வந்தனை" என்றனர் உலகுய்ய. ௪௨

"அடிய னேன்பிழை பொறுத்தெனை ஆண்டுகொண் டத்
தொடக் கினைநீக்கி, முடிவி லாநெறி தரும்பெருங் கருணைஎன்
தரத்ததோ" எனமுன்னர்ப், படியும் நெஞ்சொடு பன்முறை
பணிந்தெழும் பரம்பரை ஆனந்த, வடிவு நின்றது போன்
றின்ப வெள்ளத்து மலர்ந்தனர் வன்தொண்டர். ௪௩

நின்ற வன்தொண்டர் "நீரணி வேணிய! நின்மலர்க்கழல்
சாரச், சென்று சேரலன் திருமணி வாயிலின் புறத்தினன்"
எனச்செப்பக், குன்ற வில்லியார் பெரியதே வரைச்சென்று

கொணர்கென அவரெய்தி, வென்றி வானவர்க் "கருளிப்பா"
டெனஅவர் கழல்தொழ விரைந்தெய்தி. சச

மங்கை பாகர்தந் திருமுன்பு சேய்த்தாக வந்தித்து
மகிழ்வெய்திப், பொங்கு மன்பினிற் சேரலர் போற்றிடப்
புதுமதி அலேகின்ற, கங்கை வார்சடைக் கயிலைநா யகர்திரு
முறுவலின் கதிர்காட்டி, "இங்கு நாமழை யாமைநீ எய்திய
தேன்?"னென அருள்செய்தார். சடு

அரசர் அஞ்சலி கூப்பிநின் "றடியனே னாரூரர் கழல்
போற்றிப், புரசை யானைமுன் சேவித்து வந்தனன் பொழியு
நின் கருணைத்தெண், டிரைசெய் வெள்ளமுன் கொடுவந்து
புகுதலின் திருமுன்பு வரப்பெற்றேன், விரைசெய் கொன்றை
சேர் வேணியாய்! இனியொரு விண்ணப்ப முள"தென்று.

"பெருகு வேதமும் முனிவரும் துதிப்பரும் பெருமை
யாய்! உனைஅன்பால், திருஉ லாப்புறம் பாடினேன் திருச்செவி
சாத்திடப் பெறவேண்டும், மருவு பாசத்தை அகன்றிட வன்
தொண்டர் கூட்டம்வைத் தாய்"என்ன, அருளு மீசருஞ்
"சொல்லுக" என்றனர் அன்பருங் கேட்பித்தார். சஎ

சேரர் காவலர் பரிவுடன் கேட்பித்த திருஉலாப் புறங்கொண்டு
நாரி பாகரும் நலம்மிகு திருவருள் நயப்புட னருள்செய்வார்
"ஊர ராகிய ஆலால சுந்தர னுடனமர்ந் திருவீரும்
சாரநங்கண நாதராந் தலைமையில் தங்கு"மென்றருள்செய்தார்.

அன்ன தன்மையி லிருவரும் பணிந்தெழுந் தருள்தலை
மேற்கொண்டு, மன்னும் வன்தொண்ட ராலால சுந்தர ராகித்
தாம் வழுவாத, முன்னை நல்வினைத் தொழிற்றலை நின்றனர்
முதற்சேரர் பெருமானும், நன்மை சேர்கண நாதராய் அவர்
செயும் நயப்புறு தொழில்பூண்டார். சகூ

நிலத்து வந்துமுன் னுதயஞ்செய் பரவையார் சங்கிலி யாரென்னும்
நலத்தின் மிக்கவர் வல்வினைத் தொடக்கற நாயகி அருளாலே
அலத்த மெல்லடிக் கமலினி யாருட னநிந்திதை யாராகி
மலைத்த னிப்பெரு மான்மகள் கோயில் தந்தொழில் வழிநின்றார்.

வாழி மாதவ ராலால சுந்தரர் வழியிடை அருள்செய்த
ஏழி சைத்திருப் பதிகமிவ் வுலகினி லேற்றிட எறிமுந்நீர்
ஆழி வேந்தனும் வருண னுக் களித்திட அவனுமவ் வருள்சூடி
ஊழியிற்றனியொருவர்தந்திருவஞ்சைக்களத்திலுய்த்துணர்வித்தான்.

சேரர்காவலர் விண்ணப்பஞ்செய்தஅத்திருஉலாப்புறமன்று
சாரல் வெள்ளியங்கயிலையிற்கேட்டமாசாத்தனார்தரித்திந்தப்
பாரில் வேதியர் திருப்பிட ஊர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கும்
நார வேலைசூ ழுலகினில் விளங்கிட நாட்டினர் நலத்தாலே.

என்று மின்பம் பெருகு மியல்பினால்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம். ௫௩

சருக்கம் பதின்மூன்றுக்குத் திருவிருத்தம் ஆ ௪௨௮௬.



*வைய நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தாந்தழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே.

திருச்சிற்றம்பலம்

பெரிய புராணம் முற்றுப்பெற்றது.



*இந்தப் பாட்டு பல ஏட்டுப் பிரதிகளிலில்லை. இது சேக்கிழார் வாக்கல்ல வென்று பல ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

உ

சிவமயம்

## சேக்கிழார் புராணம் என வழங்கும்

# திருத்தொண்டர் புராண வரலாறு*



## பாயிரம்

### விநாயகர்

வானுலகும் மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமதம் ஐந்துகர மூன்றுவிழி நால்வாய்
ஆனைமுக னைப்பரவி அஞ்சலிசெய் கிற்பாம். க

### சபாநாதர்

சீராருஞ் சதுமறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியும் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
ஏராரு மணிமன்று ளெடுத்ததிரு வடிபோற்றி. உ

### சிவகாமசுந்தரி

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய இருள்நீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
அரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி. ௩

### கற்பகவிநாயகர்

மலரயனுந் திருமாலுங் காணாமை மதிமயங்கப்
புலிமுனியும் பதஞ்சலியுங் கண்டுதொழப் புரிசடையார்
குலவுநடந் தருந்தில்லைக் குடதிசைக்கோ புரவாயில்
நிலவியகற் பகக்கன்றின் நிரைமலர்த்தா ளிணைபோற்றி. ௪

### சுப்பிரமணியர்

பாறுமுக மும்பொருந்தப் பருந்துவிருந் துணக்கழுகு
நூறுமுக மாயணைந்து நூழில்படு களம்புகுத

---

*இதை உமாபதி சிவாசாரியா ரியற்றினரெனக் கூறுதல் மரபு.

மாறுமுகஞ் தருகிருதர் மடியவடி வேலெடுத்த
ஆறுமுகன் திருவடித்தா மரையிணைக ளவைபோற்றி. ரு

## சைவசமயாசாரியர்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி. சா

## திருத்தொண்டர்—சேக்கிழார்

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார்பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி. எ

## நூற்பெயர்

தாய்மலர்ந்த முகத்தினளாய்த் தழுவிமுலை தரவந்த
நோய்மலர்ந்த பிறவிதொறு நுழையாம லுலகுய்யத்
தீமலர்ந்த சடைக்கூத்தர் திருவருளாற் சேக்கிழார்
வாய்மலர்ந்த புராணத்தின் வரலாறு விரித்துரைப்பாம். அ

## அவையடக்கம்

ஊர்க்கடலை இவனெனவர் துதித்தநான் ஓங்குதமிழ்
நூற்கடலைக் கரைகண்டு நுவலகினைக் குமதுதிருப்
பாற்கடலைச் சிற்றெறும்பு பருககினைப் பதுபோலும்
நீர்க்கடல்சூழ் மண்ணுலகை நிறுக்கநினைக் குமதொக்கும். கூ

தேவுடனே கூடியசொல் செழுந்தமிழோர் தெரிந்துரைத்த
பாவுடனே கூடியஎன் பருப்பொருளும் விழுப்பொருளாம்
கோவுடனே கூடிவருங் குருட்டாவும் ஊர்புகுதும்
பூவுடனே கூடியநார் புனிதர்முடிக் கணியாமல். கO

# நூல்

பாலாறு வளஞ்சுரந்து நல்க மல்கும் பாளைவிரி மணங்கமழ்பூஞ் சோலை தோறுங், காலாறு கோலிஇசை பாட நீடுங் களிமயில்நின் றாடுமியல் தொண்டை நாட்டுள், நாலாறு கோட்டத்துப் புலியூர்க் கோட்டம் நன்றிபுனை குன்றைவள நாட்டு மிக்க, சேலாறு கின்ற வயற் குன்றத் தூரில் சேக்கிழார் திருமரபு சிறந்த தன்றே. கக

நாடெங்கும் சோழன்முனந் தெரிந்தே ஏற்றும் நற்குடிநாற் பத்தெண்ணா யிரத்து வந்த, கூடல்கிழான் புரிசைகிழான் குலவு சீர் வெண் குளப்பாக்கி ழான்வரிசைக் குளத்து ழான்முன், தேடுபுக ழாரி வருஞ் சிறந்து வாழச் சேக்கிழார் குடியிலிந்தத் தேச முய்யப், பாடல் புரி அருண்மொழித்தே வரும்பி னந்தம் பாலறா வாயரும்வந் துதித்து வாழ்ந்தார். ௧௨

இமயமலை யரையன்மகள் தழுவக் கச்சி ஏகம்பர் திருமேனி குழைந்த ஞான்று, சமயமவை ஆறினுக்குந் தலைவிக் கீசர் தந்தபடி எட்டுழக்கீ ராழி நெல்லும், உமைதிருச்சூ டகக்கையால் கொடுக்க வாங்கி உழவுதொழி லாற்பெருக்கி உலக மெல்லாம், தமதுகொழு மிகுதிகொடு வளர்க்கும் வேளாண் தலைவர்பெரும் புகழுலகில் தழைத்த தன்றே. ௧௩

விளைகழனி பூலோகம் முழுது மேரி விரிதிரைநீர்க் கடல்வரு ணன் கம்பு கட்டி, கிளர்கலப்பை தருசுமையாள் சுவேத ராமன் கிடாமறலி வசத்தீசன் வசத்தா னென்றிங், களவறிந்தாண் டாண்டு தொறும் விதைதப் பாமல் அளக்குமவள் கச்சியறம் வளர்த்த மாதா, ஒளிபெருகு கொழுமிகுதி எறும்பீ றான உயிரனைத்துந் தேவருமுண் டுவப்ப தன்றே. ௧௪

மாறுகொடு பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் வணிக னுயி ரிழப்பத் தாங்கள், கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக் குழியிலெழு பதுபேரும் முழுகிக் கங்கை, ஆறணிசெஞ் சடைத் திருவா லங்காட் டப்ப ரண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப், பேறுபெறும் வேளாளர் பெருமை எம்மால் பிறித்தளவிட் டிவள வெனப் பேச லாமோ. ௧௫

காராளர் அணிவயலி லுழுது தங்கள் கையார நட்டமுடி திருந்தி லிந்தப், பாராளுந் திறலரசர் கவித்த வெற்றிப் பசும்பொன்மணி முடிதிருந்துங் கலப்பை பூண்ட, ஏராலெண் டிசைவளர்க்கும் புகழ்வே ளாளர் ஏரடிக்குஞ் சிறுகோலால் தரணி யாளச், சீராரு முடியரச ரிருந்து செங்கோல் செலுத்து வர்வே ளாளர்புகழ் செப்ப லாமோ. ௧௬

வாயிலார் சத்தியார் விறல்சேர் மிண்டர் வாக்கரையர் சாக்கியர் கோட் புலிகஞ் சாறர், ஏயர்கோன் கலிக்காமர் முனைவித்தாக்கு மிளை யான்றன் குடிமாறர் மூர்க்கர் செங்கைத், தாயனார் செருத்துணையார் செருவில் வெம்போர் சாதித்த முனையடுவா ராக நம்பி, பாயிரஞ்சே ரறுபதுபேர் தனிப்பேர் தம்மில் பதின்மூவர் வேளாளர் பகருங்காலே.

அத்தகைய புகழ்வேளாண் மரபில் சேக்கி ழார்குடியில் வந்த அருண் மொழித்தே வர்க்குத், தத்துபரி வளவனுந்தன் செங்கோ லோச்சுந் தலைமையளித் தவர்தமக்குத் தனது பேரும், “உத்தமச் சோ ழப்பல்ல வன்தா”னென்னு முயர்பட்டங் கொடுத்திட ஆங் கவர் நீர் நாட்டு, நித்தனுறை திருநாகேச் சரத்தி லன்பு நிறைதலினால் மறவாத நிலைமை மிக்கார். ௧௮

தம்பதிகுன் றத்தூரில் மடவ ளாகந் தானாக்கித் தாபித் தங்கண், செம்பியர்கோன் திருநாகேச் சரம்போ லீதுந் திரு நாகேச் சரமெனவே திருப்பேர் சாற்றி, அம்புவியி லங்காங்க வைப வங்கட் கானபரி கலந்திருநாள் பூசை கற்பித், திம்பர்புகழ் வளவனர சுரிமைச் செங்கோ லிமசேது பரியந்த மியற்று நாளில். ௧௯

கலகமிடு மமண்முருட்டுக் கையர் பொய்யே கட்டிநடத் திய சிந்தா மணியை மெய்யென், றுலகிலுளோர் சிலர்கற்று நெற்குத் துண்ணா துமிக்குத்திக் கைவருந்திக் கறவை நிற்க, மலடுகறந் துளந் தளர்ந்து குளிர்பூஞ் சோலை வழியிருக்கக் குழியில்விழுந் தளறு பாய்ந்து, விலைதருமென் கரும்பிருக்க இரும்பை மென்று விளக் [illegible]ீக் காய்ந்து நொந்தார். ௨௦

வளவனுங்குண் டமண்புரட்டுத் திருட்டுச் சிந்தா மணிக்க தையை மெய்யென்று வரிசை கூற, உளமகிழ்ந்து பலபடப்பா ராட் டிக் கேட்க உபயகுல மணிவிளக்காஞ் சேக்கி ழார்கண், டிளஅரசன் தனைநோக்கிச் “சமணர் பொய்ந்நூ லிதுமறுமைக் காகாதிம் மைக்கு மற்றே, வளமருவு கின்றசிவ கதைஇம் மைக்கும் மறுமைக்கு முறுதி” என வளவன் கேட்டு. ௨௧

“அவகதையாய்ப் பயனற்ற கதையீ தாகி லம்மையுமிம் மையு முறுதி பயக்கத் தக்க, சிவகதைஎ ததுகற்ற திறமைப் பேரார் சீவக சிந் தாமணிபோ லிடையில் வந்த, நவகதையோ புராதனமோ முன்னா லுண்டோ நானிலத்துச் சொன்னவரார் கேட்ட பேரார், தவகதையோ தவம்பண்ணிப் பேறு பெற்ற தனிக்கதையோ அடைவு படச் சாற்று” மென்றான். ௨௨

செம்பியர்பூ பதிமகிழ்ந்து வினவிக் கேட்கச் சேக்கிழார் குரிசி லுரை செய்வார் “ஞாலத், தம்பலவர் திருத்தொண்டர் பெருமை ஆரூ ரடிகள்முத லடிஎடுத்துக் கொடுக்க நாவல், நம்பிபதி னொரு திருப்பாட் டாகச் செய்த நலமலிதொண் டத்தொகைக்கு நாரை யூரில், தும்பிமுகன் பொருளுரைக்க நம்பி யாண்டார் சுருதிமொழிக் கலித்துறைஅந் தாதி செய்தார். ௨௩

"ஆயுமறை மொழிநம்பி யாண்டார் நம்பி அருள்செய்த கலித் துறைஅந் தாதி தன்னைச், சேயதிரு முறைகண்ட ராச ராச தேவர் சிவா லயதேவர் முதலா யுள்ள, ஏயகருங் கடல்புடைசூ ழுலக மெல்லா மெடுத்தினிது பாராட்டிற்" றென்ன "அந்தத், தூயகதை அடைவு படச் சொல்வீ" ரென்று சோழனுரை செயக்கேட்டுக் குன்றை வேந் தார். உ௩

தில்லைவா ழந்தணரே முதற்பண் பாடு திருநீல கண்டத்துப் பாண ரீருச், சொல்லியதொண் டத்தொகைநூல் வகைஅந் தாதித் தொடர்ச்சியினை விரித்துரைக்க வளவன் கேட்டு, மெல்லியலாள் பங் கர்திரு வருளை நோக்கி வியந்தடியார் தொண்டுசெய்து பேறு பெற்ற, செல்கதியை நினைந்துருகி வளவர் கோமான் சேவையர்கா வலரைமுக நோக்கிச் சொல்வான். உ௫

"அவரவர்கள் நாடவர்க ளிருந்த ஊர்வந் தவதரித்த திருமரபு திருப்பேர் செய்த, சிவசமயத் திருத்தொண்டு முற்பிற் பாடு சிவ னடிக்கீழ் உயர்பரம முத்தி பெற்றோர், எவருமறி யச்சீவன் முத்த ராயிங் கிருப்பவர்க ளினிமேலும் பிறப்போர் மண்மேல், அவர்களைச் சேர்ந் தருள்பெற்றோர் பகைத்துப் பெற்றோர் அவர்கள்பகை யாய் நரகி லடைந்த பேர்கள். உ௬

"இல்லறத்தி லிருந்துநனி முத்தி பெற்றோ ரில்லறத்தில் சிற் றின்ப இயல்பை நீக்கி, நல்லறமாந் துறவறத்தில் நின்று பெற்றோர் நற்பிரம சாரிகளா யருள்பெற் றுய்ந்தோர், செல்கதிசற் குருவரு ளால் சென்று சேர்ந்தோர் சிவபூசை செய்துவர முத்தி பெற்றோர், புல்லறிவு தவிர்ந்துதிரு வேடமேமெய்ப் பொருளெனக்கொண் டர னடிக்கீழ்ப் பொருந்தப் புக்கோர். உ௭

"இப்படியே அடைவுபடப் பிரித்துக் கேட்டால் யாவருக்கு மேத ரிக்கச் செவிநா நீட்ட, ஒப்பரிய பொருள்தெரிந்து விளங்கித் தோன்ற உவமையுடைத் தாயகதை கற்க நிற்கத், தப்பில்பெருங் காவியமாய் விரித்துச் செய்து தருவீ"ரென் றவர்க்குவிடை கொடுத்து வேண்டும், செப்பரிய திரவியமுங் கொடுக்க வாங்கிச் சேக்கிழார் குரி சில்திருத் தில்லை சேர்ந்தார். உ௮

தில்லை எல்லையில் வந்து வந்தெதிர் தெண்ட னுகவி ழுந்தெழுந்
தல்லி சேர்கம லத்த டத்தினில் மூழ்கி அம்பல வாணர்முன்
ஒல்லை சென்றுப ணிந்து கைத்தல முச்சி வைத்துள முருகிநைந்
தெல்லை காணரி தாய பேரொளி இன்ப வாரியில் மூழ்கியே. உ௯

அடைய லார்புரம் நீறெ ழத்திரு நகைசெய் தன்னொருமூவரைப்
படியின் மேலடி மைக்கொ ளும்பத பங்க யங்கள் பணிந்துபின்
"றடிக ளோஉன தடியர் சீரடி யேனுரைத்திட அடிஎடுத்
திடர்கெ டத்தரு வா"யெ னத்திரு வருளை எண்ணிஇறைஞ்சினார்.

அலைபு னற்பகி ரதிந திச்சடை யாட வாடர வாடநின்
றிலகு மன்றினி லாடு வார்திரு வருளி னலச ரீரிவாக்
'குலவெ லா'மென அடிஎ டுத்துரை செய்த பேரொலி யோசைமிக்
கிலகு சீரடி யார்செ விப்புலத் தெங்கு மாகிநி றைந்ததால். ௩௧

தில்லை மாநகர் வாழ வாழ்தவ சிந்தை அந்தணர் ஆறைஞ்ஞூ
றல்ல தும்பல மடப திந்தவ ராச ரிக்கையி லுள்ளபேர்
எல்லை யில்லவர் யாவ ருங்களி கொளவி ளங்கச ரீரிவாக்
கொல்லை வந்தெழ அனைவ ருங்கர முச்சி வைத்துள முருகினார். ௩௨

லார்புரம் நீறெ ழக்கணை ஒன்று தொட்டுயர் மன்றில்வாழ்
வள்ள லார்திரு மாலை யுந்திரு நீறு மெய்ப்பரி வட்டமும்
எள்ள லாரல ரென்று சேவையர் காவ லர்க்கினவ இனிதளித்
தள்ள லார்வயல் நீடு தில்லையி லனைவ ருங்களி கொண்டபின். ௩௩

சேவை காவலர் தொண்டர் சீருரை செய்வ தற்குயர் செய்யுள்முன்
மூவ ரோதிய திருநெ றித்தமி ழாத லாலவரன் முறைமையால்
யாவ ரும்புகழ் திருநெ றித்தலை வரைவ ணங்கிஇ ணங்கிமெய்த்
தாவ ருஞ்சிவ சாத னங்கள் தரித்து நீறு பரித்தரோ. ௩௪

வந்து சூழ நிரைத்த ஐஇரு நூறு கால்மணி மண்டபத்
தெந்தை யார்திரு வருளை யுன்னி இருந்து சேவையர் காவலர்
செந்த மிழ்த்தொடை யால்வி ளக்கிய திருவி ருத்தநி ருத்தனார்
தந்த சொன்முத லாஎ டுத்தனர் தானு வானபு ராணநூல். ௩௫

திருமறையோர் புராணமவை பதின்மூன்று சிவவே தியரானை
வழிபட்ட புராணமோ ரிரண்டு, குரைகழல்மா மாத்திரரொன் றறு
வர்முடி மன்னர் குறுநிலமன் னவரைவர் வணிகர்குலத் தைவர், இரு
மைநெறி வேளாளர் பதின்மூவ ரிடைய ரிருவர்சா லியர்குயவர் தயி
லவினை யாளர், பரதவர்சான் றோர்வண்ணார் சிலைமறவர் நீசர் பாண
ரிவர் ஓரொருவ ராம்பகருங் காலே. ௩௬

அறுதிபெறத் திருமரபு குறித்துரையாப் புராண மவைகளொரு
பதின்மூன்று திருக்கூட்டந் தன்னில், மறுவிலவர் பதியறிந்த கதை
இரண்டு வந்த மரபறிந்த கதையிரண்டு பேறறிந்த கதையொன், றுறு
மரபு தெரியாப்பு ராணமவை யோரேழ் ஊரறியாக் கதைவழு பேரறி

யாக் கதைஎட், டிறுதியிலக் கங்கண்ட திருக்கூட்ட மொன்றெண் ணித்தனை என் றறியாத திருக்கூட்ட மெட்டே. ௩௭

தில்லைமறை யோர்கலயர் முருகர்பசு பதியார் சிறப்புலியார் கண நாதர் பூசலைசண் டேசர், கல்விநிறை சோமாசி மாறர்நமி நந்தி கவு ணியனூர் அப்பூதி நீலநக்க ராகச், செல்வமறை யோர்காதை பதின் மூன்று சிவவே தியர்காதை இரண்டுபுகழ்த் துணையார்முப் போதும், வல்லபடி சிவனை அருச் சிப்பார்கள் மாமாத் திரர்மரபிற் சிறுத்தொண் டர் ஒருவர்முடி மன்னர். ௩௮

அறவரெவ ரவர்செங்கட் சோழர்புகழ்ச் சோழ ரருள்மானி இடங்கழியார் நெடுமாறர் சேரர், குறுநிலமன் னவரைவர் நரசிங்க முனையர் கூற்றுவனூர் கழற்சிங்கர் மெய்ப்பொருள்ஐ யடிகள், முறை மைவணி கரிலைவர் காரைக்கா லம்மை மூர்த்திகலிக் கம்பரமர் நீதிஇயற் பகையார், திறமைவிரி வேளாளர் பதின்மூவர் மூர்க்கர் செருத்துணை யார் வாயிலார் கோட்புலியார் சத்தி. ௩௯

தூயனூர் இளையான்றன் குடிமாற ரரசு சாக்கியர்கஞ் சாறர்விறன் மிண்டர்முனை யடுவார், ஏயர்கோன் கலிக்காமர் கோபாலர் மரபில் இருவர்திரு மூலனு ரானயர் குயவர், சேயபுகழ்த் திருநீல கண்டனூர் பாணர் திருமரபில் திருநீல கண்டத்துப் பாணர், மேயதிற லதிபத் தர் பரதவர்கண் ணப்பர் வேடர்மர பினில்சான்றூர் ஏனாதி நாதர்.

நேசனூர் சாலியரில் திருநாளைப் போவார் நீசர்மர பினிலெங் கள் திருக்குறிப்புத் தொண்டர், தூசொலிக்கு மேகாலி மரபுதில தயி லத் தொழில் மரபில் கலியனூர் மரபுகுறித் துரையாக், காசில்கதை பதின்மூன்று குலச்சிறையார் தண்டி கணம்புல்ல ரெறிபத்தர் காரி யார் குறும்பர், தேசுடைய பத்தர்பர மனைப்பாடு வார்கள் சித்தத் ததைச் சிவன்பால்வைத் தாராரூர்ப் பிறந்தார். ௪௧

செப்பரிய பொய்யடிமை இல்லாதார் மெய்யில் திருநீறு பூசு முனி வாருலகு தன்னில், அப்பாலு மடிச்சார்ந்தா ரிவர்கள்தமிற் சிலபே ராய்ந்ததமிழ்ப் பேர்சிலபேர் மலையாளர் சிலபேர், தப்பாத தெலுங்கர்சிலர் மற்றுளதே சத்தோர் தவஞ்செய்து பரகதியை அடைந்தவர்கள் சிலபேர், இப்போது மிருந்தரனை வழிபடுவோர் சிலபே ரினிமேலுந் திருமேனி கொடுவருவோர் சிலரே. ௪௨

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரையர் திருமூலர் நெடுமாறர் மங்கையருக் கரசி, கரைசேருங் குலச்சிறையார் யாழ்ப்பாணர் குறும் பர் கணநாத ரப்பூதி சோமாசி மாறர், உரைசேரு மிவர்கள்பதி

ஞொருவர்குரு வருளா லுயர்முத்தி யடைந்தவர்க ளெறிபத்தர் கல யர், முருகனார் கண்ணப்ப ராஞயர் தாயர் மூர்த்தியார் சண்டேசர் திருநாளைப் போவார். சங.

சேரஞர் சாக்கியஞர் கூற்றுவஞர் தண்டி சிறப்புலியார் பசுபதி யார் கலிக்காமர் கலியர், காரியா ரதிபத்தர் நீலநக்கர் பூசல் கணம் புல்லர் கோட்புலியார் நமிநந்தி யடிகள், சீருடைய கழற்சிங்கர் வாயி லார் தாய செருத்துணையார் புகழ்த்துணையார் காடவர்ஐ யடிகள், மூரிநெடு வேற்செங்கட் சோழஞ ராக முப்பதுபேர் சிவலிங்கத் தால் முத்தி யடைந்தோர். சச

திருநீல கண்டஞ ரியற்பகையார் மூர்க்கர் சிறுத்தொண்டர் திருக் குறிப்புத தொண்டர்விறன் மிண்டர், அருள்சேரு மிடங்கழியார் முனையடுவார் சத்தி அமர்நீதி மெய்ப்பொருளா ரேஞதி நாதர், கரை சேரும் புகழ்ச்சோழர் கஞ்சாறர் மாறர் காரைக்கா லம்மைநர சிங்கர் கலிக் கம்பர், வருநேச ராகஒரு பத்தொன்ப தடியார் மணிவேடத் தாரைவழி பட்டாரை யடைந்தோர். சரு

கவுணியர்நா வுக்கரசர் பேயாரிம் மூவர் கற்குமிய லிசைவல்லோ ரிசைத்தமிழ்நூல் வல்லோர், பவமனுகாத் திருநாளைப் போவா ராஞ யர் பாணர்பர மனைப்பாடு வாராக நால்வர், புவனிபுகழ் ஐயடிகள் திருமூலர் காரி பொய்யடிமை இல்லாத தமிழ்ப்புலவர் சேரர், நவ முடைய இவரைவ ரியல்வல்லோர் நின்ற நாயன்மார் தவம்புரிந்து நற்கதியை அடைந்தோர். சசா

இல்லறத்தில் நின்றவர்கள் திருநீல கண்ட ரியற்பகையா ருள ளிட்டோர் மூர்த்தியா ரப்பர், நல்லதுற வறம்பிரம சாரிகள்சண் டேசர் நானிலத்தி லரனடியார் தங்களுடன் சேர்ந்து, செல்கதிபெற் றவர் ஞான சம்பந்த ருடனே திருமணத்தி லொருமணமாய்ச் சேர்ந்தவர்க ளநேகர், பல்வளஞ்சே ராரூர ருடன்சேரர் கையில் பரிஉகைக்க உடன்சென்ற பரிசனமெண் ணிறந்தோர். சஎ

சிவனடியா ருடன்பகையாய் முத்தியடைந் தவர்கள் சேய்ஞ லூர்ச் சண்டேசர் பிதாஎச்ச தத்தன், கவர்புகழ்சேர் கோட்புலியா ருரைத்ததிரு விரையாக் கலிபிழைத்த கிளைபகைத்து நரகினைச்சென் றடைந்தோர், தவரான மூர்த்தியா ரிறைவனுக்குச் சாத்துஞ் சந்த னக்காப் பினைவிலக்கி அமண்சமயச் சார்வாய்ப், புவிபுரந்த கருநட மன் னவன்முதல னேகர் புராணகதை யினைப்பிரித்துப் புகலஎளி தலவே. சஅ

ஆரூரர் திருத்தொண்டத் தொகையுரைத்த நாளி லடித்
தொண்டு செய்தொண்டர் சிலரவர்க்கு முன்னே, பேரூர்மெய்த்
தொண்டுசெய்த பேர்சிலபே ரவர்க்குப் பிறகுதிருத் தொண்டுசெய்
யும் பேர்சிலபே ராகச், சீரூரும் திருத்தொண்டர் புராணத்திற் சேர்த்
துச் சேவையர்கோன் சேர்வைசெயுந் தொண்டரள விறந்தோர்,
காரூரும் மணிகண்டர்க் கவரவர்கள் செய்த கைத்தொண்டின் நிலை
கரைகண் டுரைக்களி தலவே. ௪௯

ஓருலகோ ஒருதிசையோ ஒருபதியோ தம்மில் ஒருமரபோ ஒரு
பெயரோ ஒருகாலந் தானோ, பேருலகி லொருமைநெறி தருங்கதை
யோ பன்மைப் பெருங்கதையோ பேரொன்றோ அல்லவே இதனை,
எ"ருலகெ லாமுணர்ந்தோ தற்கரியவ"னென் றிறைவன்முத லடி
யெடுத்துக் கொடுத்தருளக் கொண்டு, பாருலகில் நாமகள்தன் றெடுத்
துக்கை நீட்டப் பாடிமுடித் தனர்தொண்டர் சீர்பரவ வல்லார். ௫௦

கருங்கடலைக் கைநீத்துக் கொளஎளிது முந்நீர்க் கடற்கரையின்
நொய்மணலை எண்ணிஅள விடலாம், பெருங்கடல்மேல் வருந்
திரையை ஒன் றிரண்டென் றெண்ணிப் பிரித்தெழுதிக் கடைஇலக்கம்
பிரித்துவிட லாகும், தருங்கடலின் மீனைஅள விடலாகும் வானத்
தாரகையை அளவிடலாம் சங்கரன்தாள் தமது, சிரங்கொள்திருத்
தொண்டர்புரா ணத்தைஅள விடஞ் சேக்கிழார்க் கெளிதலது
தேவர்க்கு மரிதே. ௫௧

அறுபதுபேர் தனித்திருப்பேர் திருக்கூட்ட மொன்பதாக
அறு பத்தொன்ப தாரனடியார் கதையை, மறுவில்திரு நாவலூர்ச்
சிவமறையோர் குலத்து வருசடைய ஞர்மனைவி இசைஞானி வயிற்
றில், உறுதிபெற அவதரித்த ஆரூரர் முன்னு ஞரைசெய்த திருத்
தொண்டத் தொகைப்பதிகத் தடைவே, நரைமலிபூம் பொழில்புடை
சூழ் திருநாரை யூரில் நம்பியாண் டார்திருவந் தாதிகடைப் பிடித்து.

காண்டமிரண் டாவகுத்துக் கதைப்பரப்பைத் தொகுத்துக்
கருதரிய சருக்கங்கள் பதின்மூன்று நிலையிட், டீண்டுரைத்த புரா
ணத்தில் திருவிருத்தம் நாலா யிரத்திருநூற் றைம்பத்து மூன்றாக
அமைத்துச், சேண்டகைய திருத்தொண்டர் புராணமெனப் புரா
ணத் திருமுறைக்குத் திருநாமஞ் சீர்மைபெற அமைத்திட், டாண்
டகைமை பெறஎழுதி மைக்காப்புச் சாத்தி அழகுபெறக் கவளிகை
யும் அமைத்தில்லைத் தகன்பின். ௫௨

மாமைய காவலர் புராண காதைதொகை செயதி னைந்தெமை
யகன்றபின், யாவர் தாமரு கிருந்த பேர்கள்கதை சென்ற தெவ்வள

விருந்ததெங், காவ தென்னிவைக வறிய வேண்டும தறிந்து வாரு"
மென வளவர்கோன், ஏவி னுனுரிய தூதர் தூதாறி யாம லொற்
றரையு மேவினன். ௫௪

வென்றி வேல்வளவ னளவ றிந்துவர விட்ட காளையர் "புராண நூல்
ஒன்று பாதிகதை சென்ற"தென் றுசில ரோடி னூர்சிலருவந்துசென்
"றின்று நாளைமுடியும்புராணமினி"என்றுரைத்திடஇறைஞ்சினன்
சென்று 'நற்கதைமுடிந்த'தென் றுசிலர்செம்பியற்குறுதிசெப்பினர்.

வந்து சொன்னவர்களனைவருக்குநவ மணிகளுந்துகிலுமம்பொனுஞ்
சிந்தி அள்ளியுமுவந்து வீசிஉயர்செம்பொ னம்பல மருங்கில்வாழ்
அந்தி வண்ணர்நட மும்பணிந் தமுத வடிஎ டுத்தவர் கொடுத்திடப்
புந்தி செய்துமகிழ் சேவை காவலர்புராணமுந் தொழுவன்நானெனு.

வீதிவீதிகள்தொ றுந்தொறும் பயணமென்றுவென்றிமணிமுரசறைந்
தோதிவேதியர்களெண்ணி இட்டஉயர் நாளுமோரையு முகூர்த்தமும்
போத நாடிவரை புரைகடக் களிறு புரவி தேர்கருவி யாள்தரச்
சாது ரங்கமுட னேசெலப் பிளிறு தந்தி மேல்கொடு நடந்தனன்.

தேர்மு ழக்கொலி மழைக்க டக்கரட சிந்துரக் களிறு பிளிறுசீர்
ஆர்மு ழக்கொலி பரிச்செ ருக்கொலிபதாதி வந்ததி ரடர்ந்தெழும்
போர்மு ழக்கொலி சழக்கி லாதுயர் படைக்க லன்புணருமோசைஏழ்
கார்மு ழக்கொலியி னெட்டி ரட்டிநிறை கடல்முழக்கெனமுழக்கெழ.

வளவர் கோன்வரவறிந்து தில்லைமறையோரும் வண்மைமடபதிகளும்
பிளவுகொண்டமதி நுதல்மடந்தையரும்மற்றுமுள்ளபெரியோர்களுங்
களவி லாதமொழி கொடுபு ராணகதை செய்த கங்கைகுல திலகருந்
தளவ மாலைஅப யனைஎதிர்ந் தினிய சார ஆசிபல சாற்றினர். ௫௯

பூண்ட மானதிரு முடியு மிட்டதிரு முண்ட முங்கவச முந்துணைக்
குண்ட லங்களு மிரண்டு காதினும் வடிந்த லைந்தகுழை யுந்திருக்
கண்ட மாலைகா மாலை யுஞ்சிரசு மாலை யுங்கவின் விளங்கவே
தொண்டர்சீர்பரவு வானணைந்தசுப சரிதைசோழனெதிர்கண்டனன்.

கண்ட போதுள மகிழ்ந்து தன்னைஅறி யாது கைகள்தலை
மீதுறக், 'கொண்ட வேடமர னடியர் வேடமிது குறைவி லாத
தவ வேட'மென், றண்டவாணர்திரு வருளை யுன்னியவ ரடிமை
கொண்டபெரு மையைநினைந், தெண்த யங்காச ரேறு சேவையர்
குலாதி பாதுகை இறைஞ்சினன். கூக.

இறைஞ்சி அம்பலவர் பாத தாமரை இறைஞ்ச எண்ணிவரன்
முறைமையால், அறஞ்சி றந்தமுனி சேவை காவலரும் ஆறைஞ்

னூறுமறை யோர்களுந், துறஞ்சி றந்தமட பதிகளுந் தொடர வந்து
மன்னனரி பிரமர்பால், மறைஞ்சு நின்றபொருள் வெளிப்ப டக்கனக
மன்றில் நின்றபடி கண்டனன். கூ௨

கண்ட கண்ணருவி தாரை கொள்ளஇரு கைகளஞ்சலி கொளக்கசிந்
தெண்த ரும்புளக ரோம கூபமெழ இன்ப வாரிகரை புரளவாய்
விண்டதூமொழிகள் குழற அன்பினொடு விம்மிவிம்மியருள்மேலிடத்
தெண்ட னுகமுன் விழுந்தெ ழுந்துநனி செம்பி யன்பரவ எம்பிரான்.

சேக்கி ழான்நமது தொண்டர் சீர்பரவ நாம்மகிழ்ந் 'துலக'மென் றுநம்
வாக்கி னலடி எடுத்து ரைத்திட வுரைந்து நூல்செய்துமுடித்தனன்
காக்கும் வேல்வளவ நீஇதைக் கடிது கே"ளெனக் கனக வெளியிலே
ஊக்க மானதிரு வாக்கெ ழுந்தது திருச்சி லம்பொலியு முடனெழ.

மன்றுளாடிதிரு வாய்ம லர்ந்தமொழி யுஞ்சிலம்பொலியு மன்றிலே
நின்ற மானிடர்செ விப்பு லன்புக நிறைந்த தன்றியும்நிலத்தின்மேல்
ஒன்றி நின்றுயர் சராச ரங்களடை யக்க சிந்துருகி ஓலிடக்
குன்றிலங்குதிரள் தோள்நரேந் திரபதி குதுகுலித்துளமகிழ்ந்தனன்.

தொண்டர் தொண்டுசெய் புராண காதைமதி சூடு நாதர்திரு
வருளினல், விண்ட நீதிபுனை சேக்கி ழார்முனி விரித்து ரைத்த
கதை கேட்பதற், கண்ட வாணரடி யாரெலாங் கடுக வருக" என்று
திசை திசைதொறும், எண்த யங்கரச னேடெடுத் தெழுதி ஆளு
மோலைகளு மேவினன். கூகூ

கவச மணிந்த சனங்களு மிங்கித முங்கம்பித்
தவச முறுஞ்சிவ சிந்தையு மன்பக லாமேன்மைத்
தவச ரிதத்தொழி லுஞ்சிவ சாதன முஞ்சாரச்
சிவச மயத்தவர் யாவரும் வந்து திரண்டார்கள். கூஎ

வேதியர் வேத முழக்கொலி வேதத் தைத்தமிழால்
ஓதிய மூவர் திருப்பதி கத்தொலி ஓவாமல்
பூதி அணிந்'தர கர'என அன்பர் புகழ்ந்தோதும்
காதியல் பேரொலி காரொலி போலொலி கைத்தேற. கூஅ

பூசிப் பவர்சிலர் பூசித் தன்பொடு புனிதன்தாள்
நேசிப் பவர்சிலர் "பிறவா வரமருள் நிமலா"என்
றியாசிப் பவர்சிலர் திருமுறை எழுதிக் களிகூர
வாசிப் பவர்சில ராக இருந்து மகிழ்ந்தார்கள். கூகூ

தெள்ளு திரைக்கடல் மீது மிதந்த திருத்தோணி
வள்ளலை அன்புசெய் அன்பர் மடங்கள் தொறும்பலர்

மெள்ள இருந்து மிழற்று புராண விருத்தத்தைக்
கிள்ளைகள் பாடி உரைப்பன கேட்பன மெய்ப்பூவை. ௭௦

மற்றது கண்டு களித்த நலத்த மனத்தோடு
சுற்றிய மந்திரி மாரொடு தந்திரி மார்சூழத்
தெற்றென வந்து திரண்டு முரண்தரு சீர்நாடு
பெற்றது செல்வ மெனத்தனி யோகை பெருத்தார்கள். ௭௧

பாடினர் தும்புரு நாரதர் நீடிசை பாடாநின்
றாடினர் வாணி லரம்பைய ரஞ்சலி எஞ்சாமல்
சூடினர் மண்ணின் மடந்தைய ரெந்தை துணைப்பாதந்
தேடினர் மாலயன் அன்பர் நடந்தரி சித்தார்கள். ௭௨

சங்கொடு பேரி கறங்கிசை வீணை தனித்தாளம்
வங்கிய காள மிடக்கை கடக்கை மணிக்காளம்
பொங்கிய பம்பை வலம்புரி கண்டை முதற்பொற்பார்
மங்கல தூரிய மெங்கும் முழங்கி வனப்பெய்த. ௭௩

வேதியர் வேள்வி நெடும்புகை ஆலய மெங்கெங்குங்
காதிய குங்குலி யப்புகை நீடு கருப்பாலைச்
சோதி நெடும்புகை தோரண வீதி தொறுந்தோறும்
மாதர் புகைக்கு மகிற்புகை எங்கும் வனப்பெய்த. ௭௪

ஆடக நாடக சாலைகள் முத்தணி அத்தாணி
மேடை யரங்குக ளங்க மிலாத வெளிக்கூடம்
மாட மதிட்கண மாளிகை சூளிகை எங்கெங்குந்
தோடவிழ் மாலைகள் பொன்னரி மாலைகள் சூழ்வித்தார். ௭௫

பழுதக லத்திரு வலகு விருப்பொடு பணிமாறிக்
குழைவு பெறத்திகழ் கோமய நீர்குளி ரச்செய்து
தழைபொதி தோரண முங்கொடி யுந்துகி லுஞ்சார்வித்
தழகு பெறத்திரு வீதி புதுக்கி யதன்பின்பு. ௭௬

திருநெ றித்தமிழ் வல்ல பேர்கள் சிவாக மங்கள் படித்தபேர்
கருநெ றிப்பகை ஞான நூல்பல கற்ற பேர்மறை கற்றபேர்
குருநெ றிக்குரி யோரி லக்கண லக்கி யங்கள்கு றித்தபேர்
பெருநெ றிப்பல காவி யங்கதை பேச வல்லவ ரனைவரும். ௭௭

வள்ளலார் திருநடஞ்செய் மன்றின் முன்றில் மறையவர்கோமயசலத்தால் மெழுகித் தாபித், தெள்ளரும்வெண் சுதையொழுக்கி அறுகாற் பீட மிட்டதன்மேல் பசும்பட்டு விரித்து மீதே, வெள்ளை மடித் திட்டுமது மலருந் தூவி விரைநறுந்தா பங்கொடுத்தா தனங்கற்

பித்துத், தெள்ளுதமிழ்ச் சேக்கிழார் புராணஞ் செய்த திருமுறையை அதன்மேல்வைத் திறைஞ்சிப் போற்றி. எ௮

"வாழிதிருத் தொண்டர்புரா ணத்தை நீரே வாசித்துப் பொரு ளருளிச் செய்வீ" ரென்று, சோழர்பெரு மான்முதலா மடிய ரெல் லாஞ் சொலக்கேட்டுக் குன்றைமுனி மன்று ளாடும், தாழ்சடையா னடிஎடுத்துத் தாத்தாஞ் செய்த சைவகதை யின்னவிளங்க விரித்துச் சொல்லச்,சூழஇருந் தம்பலவ ரடியா ரெல்லாஞ் "சுருதிமொழி இது" எனக்கை தொழுது கேட்டார். எகூ

"தாளுடைய திருச்சிலம்பு புலம்பநடம் புரியுந் தன்மைஅர னுக்கிசைந்த பேர்வழியி ஞளும், ஆளுடைய பிள்ளையா ரவதரித்த நாளு மவரழுது திருஞான மமுதுசெய்த நாளும், சூளுடைஆ திரை நாளாம் சித்திரைஆ திரைநாள் தொடங்கிஎதி ராமாண்டு சித்திரைஆ திரையின், நாளுடைய கதைமுடிப்ப" மெனக்குன்றை வேந்தர் நடத்தஅனை வருமிருந்து கேட்டனர்நாள் தோறும். அ0

சிறப்புடைய மூவர்முத விகள்திருவாய் மலர்ந்த திருநெறிய தமிழ்மூலர் திருமந்திர மாலை,அறப்பயனுங் காரைக்கால் பேயிரட்டை மாலை அந்தாதி மூத்தபதி கங்கழறிற் றறிவார், மறப்பரிய பொன் வண்ணத் தந்தாதி திருமும் மணிக்கோவை தெய்வஉலா ஐயடிகள் வெண்பா,உறுப்பாகத் திருவிருத்த முடலாகப் பொருட்கோ ளுயிராக நாலடியால் நடந்ததுல கெல்லாம். அக

அன்றுமுதல் நாள்தோறும் நாள்தோறு மண்ண லடியரள விறந்தபெயர் வந்தவர்க ளெல்லாஞ், சென்றுறையத் திருமடங்கள் திருமடங்கள் தோறுந் திருவிளக்கங் கவர்சாத்த உள்ளுடைமேற் போர்வை, துன்றியசெந் நெலினடிசில் கன்னல்நறுங் கனிகள் தூய அறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட பால்தேன், நன்றுதிருப் பண்ணி யந்தண் ணீரமுத மடைக்காய் நரபதிஎ வலினமைச்சர் நாள்தோறும் நடத்த. அஉ

நலமலியுந் திருத்தில்லை மன்றினில்நின் றாடும் நடராசற் கன்று முதல் மகபூசை நடத்தி, அலகில்புகழ்த் தில்லைவா ழந்தணர்க்கும் வெவ்வே றமுதுபடி கறியமுது முதலான எல்லாம், நலமலிசெங் கோல்வளவன் தப்பாமே நாளும் நடத்திவர அரனடியார் நிறைந்து பதஞ் சலியும், புலிமுனியும் தவஞ்செய்த பெரும்பற்றப் புலியூர் பூலோக சிவலோக மெனப்பொலிந்து தோன்ற. அ௩

மருவுதிரு முறைசேர்ப்பா ரெழுதுவா ரிருந்து வாசிப்பார் பொருளுரைப்பார் கேட்டிருப்பார் மகிழ்ந்து, சிரமசைத்துக் கொண்

டாடிக் குதுகுலிப்பார் சிரிப்பார் தேனிப்பார் குன்றைமுனி சேக்கி ழார் செய்த, அரியதவத் தினைநினைப்பா, 'ரம்பலவர் மூன்றொளடி எடுத்துக் கொடுக்கஇவர் பாடின' ரென் றுரைப்பார், 'பெரியபுரா ணங்கேட்ட வளவர்பிரான் செவிக்குப் பிடிக்குமோ இனிச்சிந்தா மணிப்புராட்'டென் றுரைப்பார். அ௪

இத்தகைய சிறப்புடனே திருத்தொண்டர் புராண மிருந்தன் பர் பாராட்ட நடந்தெதிரா மாண்டு, சித்திரைஆ திரைநாளின் முடி யஅது கண்டு திருத்தொண்டர் 'அர'எனும்பே ரொலிஎழுந்து பொங் கக், கத்துதிரைக் கடலொலியை விழுங்கிமுழங் கோரேழ் கடலொலி யைக் கீழ்ப்படுத்திப் பிரமாண்ட வெளியைப், பொத்திஇமை யவர் செவியை நிறைத்துயரப் பொங்கிப் பொன்னுலகுக் கப்பாலும் புகழ் பொலிந்த தன்றே. அரு

திருத்தொண்டர் புராணமெழு தியமுறையை மறையோர் சிவ மூலமந்திரத்தா லருச்சனைசெய் திறைஞ்சி, இருக்குமுதல் மறை நான்கி னின்றுமுத லாக இதுவுமொரு தமிழ்வேத மைந்தாவதென்று, கருத்திருத்தி அமுதடைக்காய் நறுந்தூப தீபம் கவரிகுடை கண்ணாடி ஆலத்தி நீறு, பரித்தளவு செயக்கண்டு வளவர்பிரான் முறையைப் பசும்பட்டி னாற்சூழ்ந்து பொற்கலத்திலிருத்தி. அசு

சேறிமதயா னைச்சிரத்தில் பொற்கலத்தோ டெடுத்துத் திரு முறையை இருத்தியபின் சேவையர்கா வலரை, முறைமைபெற ஏற்றிஅர சனுங்கூட ஏறி முறைமையினு லிணைக்கவரி துணைக்கரத் தால் வீச,மறைமுழங்க விண்ணவர்கள் கற்பகப்பூ மாரி மழைபொழியத் திருவீதி வலமாக வரும்போ, திறைவர்திரு வருளைநினைந் தடலரசர் கோமானிதுவன்றோ நான்செய்த தவப்பய''னென் றிசைத்தான்.

வாரணத்தி லிவரைவரக் கண்டதிரு வீதி மறுகுதொறுந் தூய் மைசெய்து வாழைகளும் நாட்டிப், பூரணகும் பமுமமைத்துப் பொரியு மிகத் தூவிப் பொன்னரிமா லையும்நறும்பூ மாலைகளுந் தூக் கித், தோரணங்கள் நிரைத்து விரை நறுந்தூபமேந்திச் சுடர்விளக்கு மேற்றி அணிமணி விளக்கு மேந்தி, ஆரணங்கள் விரித்தோதி மாமறையோ ரெதிர்கொண் டறுகெடுப்ப வாழ்த் தெடுத்தா ரம்பை யர்க ளெல்லாம். அஅ

"காவல னிவர் தவரிவர் காவலர் கவரி இடத்தகு மோ"என் பார், "சேவையர் காவல னர்சிவ மான சிறப்பிது நல்ல சிறப்"பென்

பார், "தேவரு மெழுதவொ ணுமறை யைத்தமிழ் செய்து திருப்பதி கம்பாடும்' மூவரு மொருமுத லாயுல கத்து முளைத்த முதற்பொருள் தா"னென்பார். அக

மின்மழை பெய்தது மேக ஒழுங்குகள் விண்ணவர் கற்பக விரை சேர்பூ,நன்மழை பெய்தனர் சேவையர் காவலர் நாவல ரின்புற நாவா ரச், சொன்மழை பெய்தன ரிரவலர் மிடிகெட அள்ளி முகந்தெதிர் சோழேசன், பொன்மழை பெய்தன னுருகிய நெஞ்சொடு கண்மழை யன்பர் பொழிந்தார்கள். ௯௦

"மதுரஇ ராமா யணகதை உரைசெய்த வான்மிக பகவனு மொப்பல்ல, விதிவழி பாரத முரைசெய்து கரைசெய்த வேதவி யாதனு மொப்பல்ல, இதைவற ஆயிர நாவுட னறிவுள சேட விசே டனு மொப்பல்ல, பொதிய மலைக்குறு முனிவனு மொப்பல புகழ்புனை குன்றை முனிக்"கென்பார். ௯௧

மெய்யுள சிவசா தனமும் வெளிப்பட வெண்ணீ றெழுதிய கண்ணேறும், கையுந் திகழ்மணி கண்டமு மொளிதரு கவளிகை யும் புத் தகஏடும், கையுந் திருவுள மழியுந் தொறு"மா கா"வெனு நாம மும் "நாமெல்லாம், உய்யும் படியருள் கருணையு மழகி"தெ னத் தொழு தனருல கவரெல்லாம். ௯௨

பூவை மறந்தனள் வெண்டா மரைமயில் புகல்தரு சங்கப் புல வோர்சொல், பாவை மறந்தனள் தேச சுபாடிக பயனை மறந்தனள் பதுமத்தோன், நாவை மறந்தனள் பொதிய மலைத்தலை நண்ணிய புண்ணிய முனிவனெனுங், கோவை மறந்தனள் சேவையர் காவல னுர்திரு நாவிற் குடிகொண்டாள். ௯௩

இப்படி இப்படி தன்னில் விதிப்படி இம்பரு மும்பரு மேனோ ரும், அப்படி சூழ அரத்திரு வீதிவ லஞ்செய் தணைந்தம் பலமுன் றில், தப்பற யானையி னின்று மிழிந்தா சனுமுறை நெறிசேவையர் கோவும், முப்புரி நூல்மறை யோரொ டணைந்தெழு தியமுறை யைத் திரு முன்வைத்தார். ௯௪

அண்ட வாணரெதிர் தெண்ட னுகஅனை வரும்வி ழுந்துபி னெழுந்துசீர், கொண்ட சேவைகுல திலக ருக்கனைவ ருங்கு றித் தெதிர் கொடுத்தபேர், தொண்டர் சீர்பரவு வாரெ னப்பெயர் சுமத்தி ஞானமுடி சூட்டிமுன், மண்டபத்தினி லிருத்தி மற்றவரை வளவர் பூபதி வணங்கினன். ௯௫

பூவ போதுதிரு முறைக ளேழுதிரு வாத வூரர்முறை ஒன் றிசைப், பாவ லைந்தமுறை யொன்று மூலர்முறை யொன்று பாசுரம தாதியாக், கோவை செய்தமுறை யொன்று சேவையர் குலாதி நீதி முறை யொன்றுடன், பாவை பாகர்திரு வருள்சி றந்தமுறை பன்னி ரண்டென வகுத்தபின். ௬௬

"தோடு செய்ததிரு நெறிய செந்தமிழொ டொக்கு மென்றுரை தொடர்ந்துசெப், பேடு செய்துநட ராசர் சந்நிதியி லேற்றி னூர்களிது பாலிசூழ், நாடு செய்ததவ நீடு குன்றைவள நகரி செய்ததவ நிகரி லாப், பீடு செய்தபதி ரதிகு லந்திலகர் சேக்கி ழார்செய்த பெருந் தவம். ௬௭

ஆய வேலையந பாய னிந்நிலைமை யாதலா"லனுசர் பாலரு
வாயர் எங்குள" ரெனப்ப ணிந்திரு மருங்கு நின்றவர் விளம்புவார்
"தூய குன்றைநகர் மீது தம்பெயர் இலங்க ஓர்குள மமைத்தபின்
ஏய நாகைஅர னூர்தி ருப்பணி இயற்றி அவ்விடை இருந்தனர்". ௬௮

என்று சொல்லஅவர் தமைஅழைத் தரசன் "இவரமைச் சரி கர் பட்டமும், மன்றல் மாலைபுனை தொண்டை மா"னென வகுத்த பின் தமது மண்டலம், அன்று வற்பம்வர வந்த டைந்தவரை ஆற்றல் செய்து"தொண் டைமண்டல, நின்று காத்தபெரு மா"னெனத்தமது பெயரை எங்கணும் நிறுத்தினூர். ௬௯

தொண்டர் சீர்பரவு சேக்கி ழார்குரிசில் தூய தில்லைநகர் தன்னிலே
பண்டு மூவர்பதி கத்து வந்தஅறு பத்து மூவர்கதை தனையுணர்ந்
தண்ட வாணரடி யார்கள் தம்முட னருந்த வந்தனி லிருந்துபின்
இண்டை வைத்தசடை அம்பலத்தவ ரெடுத்த பாதநிழ லெய்தினூர்.

வாழி தில்லைமணி மன்று ளென்றுநட மாடு மங்கணர் மலர்ப்பதம்
வாழி காழிநகர் வாழ வந்ததிரு நெறிய ராதிபதி வள்ளல்தாள்
வாழி அன்பர்திரு நீறு மிட்டதிரு முண்ட முந்துவய கவசமும்
வாழி குன்றைமுனி சேவை யாதிதிரு வாய்ம லர்ந்தருள் புராணமே.

தேசி லங்குமுகில் குன்றை யாதிபதி தொண்டர் சீர்பரவு சேக்கிழார்
வாச லன்றுமுத லின்று காறுமினி மேலும் வாழையடி வாழையாய்
வீசு தென்றல்மணி மண்ட பத்தரசு வீற்றி ருக்குமுடி மன்னருக்
கீச னன்பர்கள் புராண முஞ்சொலி அமைச்சு மாகிவலமெய்துமால்.

அண்ட வாணர்தொழு தில்லை யம்பலவ ரடிஎடுத் 'துலகெலா' மெனத், தொண்டர் சீர்பரவு சேக்கி ழான்வரிசை துன்றுகுன்றைநக ராதிபன், தண்ட காதிபதி திருநெ றித்தலைமை தங்கு செங்கை முகில் பைங்கழல், புண்ட ரீகமலர் தெண்ட னிட்டுவினை போக்கு வார்பிறவி நீக்குவார். ௧௦௫

---

## சில பிரதிகளிலுள்ள சிறப்புப்பாயிரம்

திருக்கிளருங் கயிலைமலைக் காவல் பூண்ட செல்வமலி திருநந்தி மரபில் வந்து, கருக்குழியி லெமைவீழா தெடுத்தாட் கொள்ளுங் கருணைமிகு மெய்கண்ட தேவர் தூய, மருக்கிளர்தாள் பரவுமரு ணந்தி தேவர் மகிழும்மறை ஞானதே வருக்கன் பாகி, இருக்கும்உமா பதிதேவர் சேக்கி ழார்தம் மிசைப் புரா ணம்முரைத்தா ரென்ப மாதோ.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமுறைகண்ட புராணம்*

கருமுறை விண்டடி யவருயு மாறருள் கவுணியர் குலதீபம்
தருமிறை நாவுக் கரசா ரூரர் தாஞ்சே மித்திடுமத்
திருமுறை கண்ட புராண முரைக்கச் சிந்துர முகனற்றாள்
ஒருமுறை இருமுறை மும்முறைவாழ்த்திஉவந்தன் பொடுபேணிவாம்.

உலகமகிழ் தருசைய மீது தோன்றி ஓவாது வருபொன்னி சூழ் சோணாட்டின், திலகமென விளங்குமணி மாட ஆரூர்த் தியாகேசர் பதம்பணிந்து செங்கோ லோச்சி, அலகில்புகழ் பெறுராச ராச மன்னன் அபயகுல சேகரன்பாலெய்து மன்பர், இலகுமொரு மூவருள் பதிக மொன்றொன் றேஇனிதி னுரைசெய்ய அன்பாற் கேட்டு. க

கையிரண்டு முச்சிமே லேறக் கண்ணீர் கரைந்தோட மெய்ம் முழுதும் புளகம் போர்ப்ப, ஐயன்மலர்ப் பதமுளத்தே கொண்டு போற்றி அரியமுறை தேடஎங்கு மிலாமை யாலே, கையுமனத்தின னாகி இருக்குங்காலை நாரையூ ரினிலாதி சைவமறை யோன்பால்,வைய மெலாமீடேறச் சைவம் வாழ மாமணிபோ லொருசிறுவன் வந்து தோன்றி. உ

வளமொடுப நயனவிதிச் சடங்கும் பூண்டு மறைமுதலாங் கலை பயின்று வருநாளீன்ற, கிளர்மறையோ னோரூர்க்குச் செல்ல மைந் தன் கேடில்பிதா உரைத்தமொழிப் படியே அந்தி, இளமதிச் செஞ் சடைப் பொல்லாப் பிள்ளையாரை ஏத்திஆ ராதிப்பா னினிதினேகி, உளமலியன் பொடுதிருமஞ் சனமுன்னாகு முரியஎலாஞ் செய்து நிவே தனமுன் வைத்து. ங

"எம்பெருமா! னமுதுசெய வேண்டு" மென்ன இறைஞ்சிடவு மமுது செய்யா திருப்பக் கண்டு, வெம்பியுள "மேதேனுந் தவறிங்

*இதை உமாபதி சிவாசாரியர் இயற்றின ரெனக்கூறுதல் மரபு.

குண்டோ வேழமுகனே ! அடியேன் நிவேதித் திட்ட, பம்பமுத முண்ணாத தென்னை'' என்று பரிந்துதலை தனைமோதப் புகுங்காலெம் மான், "நம்பிபொறு" எனத்தடுத்தவ் வமுத மெல்லாம் நன்கருந்த உவந்துநம்பி நவில்வ தானார். ௪

"எந்தையே! இனிஅடியேன் பள்ளிக் கேகில் எங்கள்தே சிக னடிப்பா னாத லாலே, சந்தமறை முதற்கலைகள் நீயே ஓதித் தரல் வேண்டு''மெனவேழ முகத்தோன் தானும், அந்தமற ஓதுவிக்க ஓதி நம்பி மகிழ்ந்தனன்அன் றதுபோல மற்றை நாளும், விந்தையொடு நிகழநம்பி யாண்டார் நம்பி மேவியிருந் திடுஞ்செய்தி வேந்தன் கேளா. ௫

"செல்வமிகு திருநாரை யூரில் மேவுஞ் சிவனளித்த மதகரிக் குச் சிந்தை கூர்ந்து, நல்லபுக ழுடையநம்பி யாண்டார் நம்பி நண்பி னொடு நிவேதிப்பான் மதுர மிக்க,எல்லையில்வா ழைக்கனிதே னவலோ டப்ப மெள்ளுண்டை இவ்வுலகோ ரெடுக்க'' என்றே, மல்லல்மிகு சேனையுட னிராச ராச மன்னவனு மந்நகரில் வந்து சேர்ந்தான். ௬

ஆங்கதனுக் கந்நகரி லிடம்போ தாம லயல்சூழப் பதின்காத அகல எல்லை,மாங்கனிவா ழைக்கனிகள் வருக்கை யாவும் வந்தன அவ்வெல்லை யெலாம் மருவ வைத்துப், பாங்கினுடன் நம்பிதாள் பணிந்து மன்னன் பலகனிகள் கொணர்ந்த எலாம் பகர்ந்து போற்றி, "ஈங்கிதனைப் பொல்லாத பிள்ளை யாருக் கிப்பொழுதே நிவேதிக்க'' என்று சொன்னான். ௭

நம்பிஅர சன்சொன்ன வார்த்தை கேளா "நன்றுனது பணி'' என்ன அருளா லுன்னித், தும்பிமுக னடிபணிந்து, "மன்ன னிங்குத் தொகுத்தனநீ அமுதுசெய வேண்டு மென்னக், கம்பமதக் களிற்று முகத் தானு மங்குக் கருத்தினுடன் நம்பியுரைக் கிசைந்து காட்ட, இம்பரினில் வந்தனநாற் சுத்தி செய்தே இருந்தஎலாம் படைக்க அவன் ஏற்றல் செய்தான். ௮

புகர்முகக்கை புறப்படவே படைத்த எல்லாம் புகுந்தஇட மறி யாமல் போன பின்னை, அகநெகிழ மெய்யரும்பிக் கண்ணீர் வார நம்பிகழ லன்பினா லரசன் போற்றி, "மிகவுமொரு விண்ணப்ப மடி யேற் குண்டு வேதியனே! கே''ளென்று விளம்பு வான்"மெய்ப், புக ழதுசேர் **மூவர்தமிழ் தொண்டர் செய்தி** பூதலத்தில் விளங்க'' எனப் போற்றி னின்றான். ௯

அந்தஉரை கேட்டலுமங் கரசன் தன்னை நம்பிமகிழ்ந் தருள்புரி வா னருள்சேர் மூவர், செந்தமிழ்க ளிருந்தஇட மன்ப ருள்ளோர்

செய்திக்கவ் விநாயகன்தான் சிந்தித் தெந்தாய்!, அந்தவகை ஏதென்று கேட்டா லெந்தை மகிழ்ந்தருளு மந்நெறியை வழாது னக்குத், தந்திடுவன் மன்ன!பொறு என்று சொல்லித் தந்திமுகன் சந்நிதியில் தாழ்ந்து சென்றான். ௧0

சென்றுபணிந் திபமுகத்தோன் பாதப் போதைச் சென்னியில் வைத் தவனருளில் திளைத்துச் சிந்தை, ஒன்றுமற உருகிவிழி தாரை கொள்ளஉண்மையினால் வந்தித்தங் குவாவோன் தன்னை,"இன்தமிழ் சேர் மூவர்தமி ழிருந்த எல்லை-எல்லையில்சீர்த் திருத்தொண்ட ரியல்பு மூர்த்தி!, நன்றுமருள் செய்தருள வேண்டு"மென்ன நாகமுகன் நம்பிக்கு நவில லுற்றான். ௧௧

"வார்ந்தருட்கண் நீர்சொரிய நம்பி கேட்ப **வண்தமிழ்க ளிருந்த** இடம் மன்று ளாடும், கூர்ந்தஇருட் கண்டர்புறக் கடையின் பாங்கர்க் கோலமலர்க் கைகளடை யாளமாகச், சார்ந்தன"என் றருள்செய்து **தொண்டர் பேறும்** சாற்றுதலால் சகதலத்தோ ரருளைச் சார, ஆர்ந்த தமி ழிருந்தஇட மன்பர் செய்தி அத்தனையும் நம்பிமனத் தருளிற் கொண்டார். ௧௨

கோண்டுகுல சேகரனுங் கோன்பால் வந்து குஞ்சரத்தோ னருள்செய்த கொள்கை எல்லாம், மண்டுபெருங் காதலுடன் சொல்லி அந்த வண்டமிழின் பெருமைதனை வகுத்துச் சொல்வார், "கண்ட பெரு மந்திரமே மூவர் பாடல் கைகாணு மந்திரங்கண் ணுதலோன் கூறல், எண்டிசையுஞ் சிவனருளைப் பெறுதற் காக இம்மொழியின் பெருமையையா னியம்பக் கேள்நீ." ௧௩

"சேடர்மலி காழிநகர் வேந்தர் தாமுந் தேவர்புகழ் திருத்தோணிச் சிவனார் பங்கில், பீடுடைய உமைமுலைப்பா லருளா லுண்டு பின்னுகனைச்சினவிடைமேல் பெருகக் கண்டு, 'தோடுடைய செவியன்'முதல் 'கல்லூர்' ரென்னுந் தொடைமுடிவாப் பரசமயத் தொகைகள் மாளப் பாடினார் பதிகங்கள் பாவி லொன்றும் பதினாறு யிரமுளதாப் பகருமன்றே: ௧௪

திருநாவுக் கரையரெனுஞ் செம்மை யாளர் தீஅமணர் சிறைநீங்க அதிகை மேவுங்,குருநாமப் பாஞ்சுடரைப் பாவிச் சூலை கொடுங்கூற்றாயினஎன்ன எடுத்துக் கோதில், 'ஒருமானைத் தரிக்கு'மொரு வரையுங் காறு மொருநாற்பத் தொன்பதினா யிரம தாகப், பெருநாமப் புகலூரிற் பதிகங் கூறிப் பின்னுகனா ரடியிணைகள் பெற்றா ளாரே. ௧௫

பின்புசில நாளின்க ணாரூர் நம்பி பிறங்குதிரு வெண்ணெய் நல்லூர்ப் 'பித்தா' என்னும், இன்பமுதல் திருப்பதிகம் 'ஊழி தோறும்' ஈறாய்முப் பத்தெண்ணா யிரம தாக, முன்புபுகன் றவர் நொடித்தான் மலையிற் சேர்ந்தார் முறைகளெல்லாந் திருத்தில்லை மூதூர் தன்னில், அன்றவர்கை இலச்சினையால் வைத்தார் மன்ன! ஆராய்ந்து தருக" என அருளிச் செய்தார். ௧௬

"அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேடு மதுபோலன் றிதுஎன்று முளதா முண்மைப்,பரபதமுந் தற்பரமும் பரனே யன்றிப் பலரில்லை என்றெழுதும் பனுவல் பாரின், எரியினிடை வேவாதாற் றெதிரே யோடு மென்புக்கு முயிர்கொடுக்கு மிடுநஞ் சாற்றும், கரி யைவளை விக்குங்கல் மிதக்கப் பண்ணுங் கராமதலை கரையிலுறக் காற்றுங் காணே." ௧௭

என்றென்று நம்பிக்குப் பரிவா லுண்மை இன்தமிழின் பெரு மைதனை இயம்பக் கேட்டுக், குன்றொன்று பேருருவங் கொண்டாற் போலுங் குஞ்சரத்தோ னருளினையுட் கொண்டு மன்னன், மன்றி னிடஞ் சென்றுமறை யோர்கள் தொண்டர் வார்சடையோர் காவ லுடை மரபோர்க் கெல்லாம், "நன்றெங்கள் கணபதிதன் சொல்லி" தென்று நன்மையுடன் மன்னவனூர் நவிலுங் காலை. ௧௮

அத்தகையோர் "தமிழ்வைத்த மூவர் வந்தா லறைதிறக்கு" மெனஉரைக்க அரசன் தானும், மெய்த்தகுசி ரம்பலவர்க் குற்ற செல்வ விழாஎடுத்து விளம்புதமிழ் மூவர் தம்மை, உய்த்தணிவீ தியினிலுலா வருவித் தும்பர் நாயகன்றன் கோயில்வல மாக்கி யுள்ளே சித்தமேலா முநக்குதமிழ் இருக்கை சேரச் சேர்த்திஅவர் சேர்ந்த தெனச் செப்பி நின்றான். ௧௯

ஐயர்நட மாடுமம் பலத்தின் மேற்பா லருள்பெற்ற மூவர்தம தருள்சேர் செய்ய, கையதுவே இலச்சினையா யிருந்த காப்பைக் கண்டவர்க ளதிசயிப்பக் கடைவாய் நீக்கிப், பொய்யுடையோ ரறிவு தனைப் புலன்கள் மூடும் பொற்பதுபோல் போதமிகும் பாடல், தன்னை, நொய்யசிறு வன்மீகம் மூடக் கண்டு நொடிப்பளவி னிற் சிந்தை நொந்த வேந்தன். ௨௦

பார்த்ததனைப் புறத்துய்ப்ப உரைத்து மேலே படிந்திருந்த மண்மலையைச் சோரத் தள்ளிச், சீர்த்ததில தயிலமலி கும்பங் கொண்டு செல்லுநனை யச்சொரிந்து திருவ டெல்லாம், ஆர்த்தஅரு ளதனாலே எடுத்து நோக்க அலகிலா ஏடுபழு தாகக் கண்டு, "தீர்த்தமுடிக்

கணிபரனே பரனே" என்னச் சிந்தைதளர்ந் திருகண்ணீர் சோர நின்றான். ௨௧

எந்துபுகழ் வளவனிவ்வா றன்பி னாலே இடர்க்கடலின் கரைகாணு தினையுங் காலைச், சார்ந்தமலை மகள்கொழுந னருளால் "வேதச் சைவநெறித் தலைவரெனும் மூவர் பாடல், வேய்ந்தனபோல் மண்மூடச் செய்தே ஈண்டு வேண்டுவன வைத்தோ"மென் றுலகி லுள்ள, மாந்தரொடு மன்னவனுங் கேட்கு மாற்றால் வானகத்தி லோரோசை எழுந்த தன்றே. ௨௨

அந்தமொழி கேட்டலுமே மன்னன் தானும் ஆடினான் பாடினான் அலக்கண் யாவும், சிந்தினான் அமுதமுண்டான் போல நெஞ்சந் தேறினான் நம்பிதிரு வடியில் தாழ்ந்தான், "பந்தமறு சிவனடியார் கொள்க" என்றுப் பண்டாரந் திறந்துவிட்டான் பரிவு கூர்ந்தான் இந்தவகைப் பெருங்களிகொள் மன்னன் தானும் எழில்முறையை முன்போல வகுக்க எண்ணி. ௨௩

மன்னுதமிழ் விரகரெங்கள் காழி வேந்தர் வகுத்தருளால் அமைத்ததிரு முறையோர் மூன்றும், அன்னவகை வாகீசர்முறையோர் மூன்று மாரூர ருரைத்ததிரு முறைய தொன்றும், துன்னவகை ஏழாகத் தொகுத்துச் செய்தான் தூயமனு எழுகோடி என்ப துன்னித், தன்னிகரில் திருவருளால் மன்னன் தானுந் தாரணியோர் வீடுபெறுந் தன்மை சூழ்ந்தே. ௨௪

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகமுந்நூற்
றெண்பத்து நான்கினு விலங்குதிரு முறைமூன்று
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினுல்
வண்பெற்ற முறையொன்று நூற்றினுல் வன்தொண்டர். ௨௫

ஆகவளர் திருமுறைக ளுருட்டிருவா சகமொன்று
மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்றுசிவ
போகமிகு மந்திரமாம் முறையொன்று புகழ்பெறவே
பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள். ௨௬

வைத்ததற்பின் நம்பிகழல் மன்னர்பிரான் மகிழ்ந்திறைஞ்சிச்
"சித்திதரு மிறைமொழிந்த திருமுகப்பா சுரமுதலாம்
உய்த்தபதி கங்களையு மொருமுறையாச் செய்க" எனப்
பத்திதருந் திருமுறைகள் பதினொன்றாப் பண்ணினார். ௨௭

மந்திரங்க ளெழுகோடி ஆதலினால் மன்னுமவர்
இந்தவகை திருமுறைக ளேழாக எடுத்தமைத்துப்
பந்தமுறு மந்திரங்கள் பதினொன்று மாதலினால்
அந்தமுறை நான்கினொடு முறைபதினொன் றாக்கினார். ௨௮

ஆக்கியபின் திருத்தொண்டத் தொகையடைவை அருளாலே
நோக்கியபின் நாயன்மார் நடங்கடைவுந் தொழிற்பேறும்
பாக்கியத்தால் இபமுகத்தோ னருள்செய்த பகுதியினால்
வாக்கியல்சே ரந்தாதி நம்பிஅடை வேவகுத்தார். ௨௯

சீரருள்சே ரறுபத்து மூவர்தனித் திருக்கூட்டம்
சாருமவ ரொன்பானுந் தண்டமிழா னுரைசெய்து
பேரிசையாம் வகையடைவு புவியினிடைப் பெருமையினாற்
சீருலவு திருஎருக்கத் தம்புலியூர் சென்றடைந்தார். ௩௦

சென்னியருள் நம்பிஇவ ரங்கணைச் சேர்ந்துசிவன்
மன்னுதிருக் கோயிலினை வலங்கொண்டு பணிந்“தானே
இன்னிசைதந் தரு”வென்ன இரக்கமுடன் குறைந்திரப்பக்
கன்னியொரு பங்குடையோ னருள்செய்த கடனுரைப்பாம். ௩௧

“நல்லிசையாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லிஒருத் திக்கிசைகள் வாய்ப்பஅளித் தோ”மென்று
சொல்லஅவள் தனையழைத்துச் சுருதிவழிப் பண்தழுவும்
நல்லிசையின் வழிகேட்டு நம்பிஇறை உள்மகிழ்ந்தார். ௩௨

“ஆங்கவளை அம்பலத்து ளாடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாடல்
ஓங்கருளால் முறைபணித்தற் கொக்கு”மென ஓரோசை
நீங்கரிய வானின்கண் நிகழஅர சன்கேட்டான். ௩௩

மன்னனுக்கும் நம்பிக்கும் மறையவர்மூ வாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலதுறையோர்க் குங்கேட்க
இன்னருள்முன் வியந்துரைத்த இவள்முதலா இசைத்தஇசை
தென்னிலமேல் மிகத்தோன்றத் திருவருளால் தோன்றியதாம். ௩௪

சொல்நட்ட பாடைக்குத் தொகைஎட்டுக் கட்டளையாம்
இன்னிசையால் தருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்

பன்னுபழந் தக்கரா கப்பண்ணின் மூன்றுளதாம்
உன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார். ௩௫

மேவுகுறிஞ் சிக்கஞ்சு வியாழக்குறிஞ் சிக்காறு
பாவுபுகழ் மேகரா கக்குறிஞ்சிப் பாலிரண்டு
தேவுவந்த இந்தளத்தின் செய்திக்கு நான்கினிய
தாவில்புகழ்க் காமரத்தின் தன்மைதனக் கிரண்டமைத்தார். ௩௬

காந்தார மாகியபி யந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக்கி வன்னட்ட ராகத்திற்
கேய்ந்தவகை இரண்டாக்கிச் செவ்வழியொன் றாக்கிஇசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினார். ௩௭

கொல்லிக்கு நாலாக்கிக் கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லிரண் டாக்கிமிகு தூங்கிசைசேர் பஞ்சமத்திற்
கொல்லையினி லொன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாப்
புல்லுமிசைப் புறநீர்மைக் கொன்றாகப் போற்றினார். ௩௮

அந்தாளிக் கொன்றாக்கி வாகீச ரருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றொன்றும் மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிரண்
டுந்தாடுங் குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்துரைத்தார். ௩௯

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்
காண்டகையார் தடுத்தாண்ட ஐயரருள் துய்யமுறைக்
கீண்டிசைசே ரிந்தளத்துக் கிரண்டாக எடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார். ௪௦

கூறரிய நட்டரா கத்திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக மிகுத்தபழம் பஞ்சுரத்துக்
கேறும்வகை இரண்டாக்கி இன்னிசைசேர் தக்கேசிப்
பேறிசைஆ றாக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம். ௪௧

ஒன்றாகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டாம்
நன்றான சீர்நட்ட பாடைக்கு நவின்றுரைக்கில்
குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை
ஒன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினார். ௪௨

உற்றஇசைக் குறிஞ்சிக்கோ ரிரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்துருத்திக் கொன்றாக்கிக் கவுசிகப்பாற்
றுற்றஇசை இரண்டாக்கித் தூயஇசைப் பஞ்சமத்துக்
கற்றஇசை ஒன்றாக்கி அரனருளால் விரித்தமைத்தார். ௪௩

இந்தவகை சிவன்செவிப்பா லெக்கண்ணுந் தழைத்தோங்க
அந்தமிலா அறுபத்து மூவரரு ளம்புவிமேல்
நந்தியிட மும்மலமும் நல்லுலகோர் நீங்கியிடச்
சிந்தைஅருட் சிவமாகத் தெளிவித்தா னருட்சென்னி. ௪௪

சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனும்
ஏராரு மிறைவனையு மெழிலாரும் நம்பியையும்
ஆராத அன்பினுட னடிபணிந்தங் கருள்விரவச்
சோராத காதல்மிகுந் திருத்தொண்டர் பதந்துதிப்பாம். ௪௫



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பாட்டு முதற்குறிப்பகராதி

# யாப்புக் குறிப்பட்டவணை

[திரு. மா. துரைசாமி முதலியாரவர்கள் தொகுத்தது]

ஓசை வேறுபடத் தொடங்கும் செய்யு ளெண்கள். இவ்வெண் களுள்* குறியிட்டுள்ள பாடல்களில் சரிதப் போக்கில் ஒரு பகுதி முடிந்து மற்றொன்று தொடங்குவதைக் கண்டு மகிழலாம்.

4, 5, 10, 11, 18 23, 51, 57, 63, 68, 71, 86, 102, 119,* 136, 147, 174,* 184, 186, 220, 224, 238, 250, 257, 269, 277,* 298,* 315,* 321, 327, 329, 337, 341, 345, 350, 370,* 378,* 388, 394, 404, 414, 440, 448, 458, 467, 491, 502, 550, 566,* 570,* 608, 622,* 632,* 650, 692,* 706, 717,* 728,* 741,* 783,* 815,* 836, 871, 907, 908, 918, 931, 943, 949, 950, 972, 973, 1001, 1003, 1022, 1036, 1046, 1083, 1134,* 1168, 1186, 1193,* 1211, 1271, 1311,* 1314, 1340, 1349,* 1356, 1381, 1385, 1396,* 1404,* 1414, 1427, 1439, 1443, 1455, 1463, 1465, 1489, 1494, 1505, 1512, 1520, 1594, 1618, 1631,* 1654, 1661,* 1700, 1711, 1722, 1752,* 1785, 1787, 1788, 1791, 1809, 1833, 1871, 1904, 1930, 1947, 1985, 1994, 1997, 2018, 2034,* 2048, 2065, 2077, 2088, 2120, 2130, 2139, 2159, 2171,* 2203, 2221, 2227, 2238, 2246, 2257, 2264, 2273, 2289, 2320, 2346,* 2369, 2370, 2376,* 2389, 2404, 2421, 2425, 2428, 2442, 2453, 2465,* 2486, 2517,* 2521, 2523, 2534,* 2551,* 2557,* 2568, 2592,* 2601, 2608, 2609,* 2618, 2620,* 2631, 2637, 2638, 2639, 2657, 2661, 2676,* 2682,* 2694,* 2723, 2725, 2739, 2740, 2741, 2746, 2747, 2749, 2776*, 2787*, 2830*, 2844, 2855, 2873, 2889, 2897, 2911, 2936*, 2995, 3013, 3021, 3085, 3102, 3153, 3160, 3168*, 3175, 3179, 3191, 3240, 3252, 3255,

